உயர்திரு. [redacted]. அவர்கட்கு
அன்புடன்
சி. வேங்கடசுப்பிரமணியன்
7.6.69

# கம்பனில் தாவரங்கள்

1160



**கி. மோகனகுமாரி, எம். ஏ.**

முதற் பதிப்பு: 1969



விற்பனை உரிமை

ஜயகுமாரி ஸ்டோர்ஸ்
கோர்ட் ரோடு, நாகர்கோவில்-1.

விலை ரூ. 3-00.

Printed at The Vanchinadu Press, Tvm.

# நன்றியுரை

கேரளப் பல்கலைக்கழக முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகக் கொடுக்கப்பட்ட இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய, கம்பன் கடலை நிலைகண்டுணர்ந்த, உயர்திரு. சா. கணேசன் அவர்கட்கு என் மதிப்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் உருவாக்கத்திற்குக் காரணராகி எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்த என் பெருமதிப்பிற்குரிய பேராசிரியப் பெருந்தகை உயர்திரு. டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் எம். ஏ., பி. எச். டி. (கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்) அவர்கட்கு நான் என்றென்றும் கடப்பாடுடையேன்.

நல்திருத்தங்கள் பல செய்தும், வேறு பல்லாற்றானும் நூலின் செம்மைக்கு உதவி புரிந்த செல்வி. குளோறியா சுந்தரமதி எம். ஏ. (கேரளப்பல்கலைக்கழகத் தமிழ்த் துறை விரிவுரையாளர்) அவர்கட்கும் என் உளங் கனிந்த நன்றி உரியது.

சீரிய முறையில் அச்சிட்டளித்த 'வஞ்சிநாடு' அச்சகத்தாரும் என் நன்றிக்குரியர்.

கி. மோகனகுமாரி.

# அணிந்துரை

[ சா. கணேசன் ]

கேரளப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறை சிறந்த-பயன்மிக்க - பணியாற்றி வருகிறது. அதன் தலைவர் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம். தம்பால் பயிற்சி பெறும் மாணுக்கர்களை எல்லாம் செந்நெறிப் படுத்திப் பொருளாய்வுக் கட்டுரைகள் மலர, மலர்ந்து மணம் பரப்பச் செய்கிருர். அதன் பயனுய் மலர்ந்தவற்றுள் 'கம்பனில் தாவரங்கள்' எனப் பெயரிய இது நறுமணம் வீசும் புதுமலர். மொழி வளத்திற்கு மட்டுமன்றி அறிவு வளர்ச்சிக்கும் பெருந்துணை புரிவன இத்தகைய ஆய்வு நூல்கள்.

இப்பொருளாய்வுக் கட்டுரையைப் படைத்தவர் எம். ஏ. வகுப்பு மாணுக்கியரான செல்வி: கி. மோகனகுமாரி ஆவார். மிக்க ஆர்வத்தோடும் ஈடுபாட்டோடும் நூல் முழுதும் நுழைந்து பலவற்றையும் தேடித் தொகுத்து, துருவி ஆய்ந்து தேர்ந்து தெளிந்து, வகுத்துக் கோத்திருக்கிருர். நவீன விஞ்ஞான நெறிப்படி பாகுபாடு செய்து விளக்கம் தந்து நூலைச் செம்மையுடையதாக ஆக்கியுள்ளார்.

தாவரங்களை எல்லாம் முதலில், 'பூக்கும் தாவரம்' 'பூவாத் தாவரம்' என இருவகைப்படுத்திக் கொள்கிருர். பூக்கும் தாவரங்களை 'மூடுவிதைத் தாவரம்' 'மூடாவிதைத் தாவரம்' என்று இருபிரிவினவாய்ப் பகுத்துக் கொள்கிருர். மூடுவிதைத் தாவரங்களை 'இரட்டை விதையிலைத்தாவரம்' ஒற்றை விதையிலைத் தாவரம்' என்ற உட்பிரிவுகள் இரண்டனுள் அடக்கிவைக்கிருர். அங்ஙனமே பூவாத் தாவரங்களை 'பாசி' 'காளான்' என்று இருபிரிவினவாய் வகுத்துக் கொள்கிருர்.

இங்ஙனம் இனம், பிரிவு, உட்பிரிவு முதலியவற்றைச் செவ்விதின் கணித்து வகுத்துக் கொண்ட பின்னர், அவ்வவற்றைப் பற்றி நூலின் துணைக் கொண்டும், பிற ஆசிரியன்மார்கள் உதவி கொண்டும் பொருளாய்வு புரியத் தொடங்கியுள்ளார். ஆய்ந்து கண்டவற்றைத் தெளிவாக எடுத்துரைக்கிறார். படிப்போர்க்கு அலுப்புத் தட்டாத முறையில் சுவை மிக்க கட்டுரையாக அமைந்திருப்பது இதன் சிறப்பாகும். கம்பனை - அவன் காட்டும் பொருள்களை - நாம் காண்பதுடன், துய்க்கவும் ஏற்றமுறையில், சங்கப்புலவர்கள் முதல் பிற்கால அவ்வை உட்பட பல்லோர் பாடல்களையும் எடுத்துக்காட்டி விளக்கம் தருவது நூலின் சிறப்பையும் பயனையும் மிகுத்து நிற்கிறது.

அனைத்துள்ளும் ''காந்தள்'' (பக்: 154 - 159) என்னும் தலைப்பில் இவர் எழுதியுள்ள கட்டுரை அருமையாக உள்ளது. தெளிவும், வளமும், பெற்றுப்படிபோர்க்கு அளவிலா இன்பம் பயப்பதாய் அமைந்திருக்கிறது. அங்ஙனமே 'தாமரை' (பக்: 81-91) என்னும் கட்டுரையும் செவ்வி நனி பெற்றுத் திகழ்கிறது.

காந்தட்பூவைத் தமிழ் இலக்கியங்கள் கூறுமாப் போலே, ''தோன்றிப்பூ'' என்றே மலையாள மக்கள் வழங்குகிறார்கள் என்பதிலே கட்டுரையாளர் பெருமகிழ்வு கொள்ளுகிறார். இது மட்டுமல்ல; இன்னும் ஏராளமான நற்றமிழ்ச் சொற்கள் அங்கு நாளும் பயிலப்படுவதை என்னினும் கட்டுரையாளர் நன்கறியக் கூடும் அறிந்து மகிழவும் கூடும்!

எங்கள் பகுதியில் காந்தளை, 'கார்த்திகைப்பூ' என்றே வழங்குவர். கார்த்திகை மாதத்தை ஒட்டி மலர்வதாலோ, விரல்கள் போன்ற அழகிய இதழ்கள் ஆறு உடைமையாலோ அல்லது கார்காலமாகிய பெண் (கார்த்தி) ணின் கைம் மலர் என்ற பொருள் கற்பித்தோ இங்ஙனம் பெயர் சூட்டி மகிழ்ந்தனர் போலும்! அன்றியும் வெண்காந்தளைக் காந்துகம், கோடல், கோடை என்றும், செங்காந்தளை இலாங்கலி, தோன்றி பற்றை என்றும் இனம் பிரித்துக் கூறப்படுவதை நிகண்டு அகராதிகளில் காணலாம்.

நூலுள் சென்று அதன் அருமைகளையும், பெருமைகளையும் அறிந்து மகிழ்வது மட்டும் போதுமா? குறைகளையும் கண்டு அவற்றைக்களையும் வழியிலும் பணிபுரிவதன்றே மெய்யன்பர்க்குரிய கடன்? எனவே அந்தப்பணிக்கு விரையுமுன் ஒருவரையறையை உரக்கச் சிந்திக்கலாம்.

கம்பன் சொல்லின் செல்வன், கவி; மகாகவி, கவிச் சக்கரவர்த்தி; கலைஞன்; நாடகக் கலைவலான்; பெருங்காப்பியம் படைத்த பெரும்புலவன். ஆம்; அனைத்தும் மெய்யே! ஆனால் பொருளாய்வு செய்யும் பொழுது மறவாமல் நம் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டுவது **'கல்வியில் பெரியவன் கம்பன்'** என்ற ஒன்றே ஒன்றைத்தான்! கம்பன் பித்தால் நான் பேசவில்லை, அவனருளால் அவனை - அவன்படைப்பை - அவற்றின் மெய்ந்நிலையை அறிய முயன்று கொண்டிருக்கும் ஓர் எளிய மாணக்கன் என்ற முறையிலேயே இதைச் சொல்லுகிறேன். ஆய, ஆய, அவன் பெருமை அளப்பரிதாய்த் தோன்றுகிறது. ஆம்; இஃது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை!

''இல்லாத, உலகத்து எங்கும்'—
இவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே!'' என்னும் காட்சி''

யானறிந்தவரை கம்பனிடத்திலேதான் காணக்கிடக்கிறது.

இதை மனத்தில் கொண்டு எவ்வித விருப்பு - வெறுப்புமின்றிக் கம்பனை ஆயப்புக வேண்டும். அங்ஙனம் ஆயப்புகுங்கால் அவனே அறிவு ஒக்க நின்று கைகாட்டி வழிநடத்திச் செல்கிறான். விஞ்ஞானக் கருத்துக்கள் வந்து மோதும் போதும் சரி, உரையாசிரியர்கள் கருத்து வந்து முரணும் போதும் சரி, உடனே நாம் ஒரு முடிவுக்கும் வந்துவிடப் படாது. அனைத்தையும் அலசிப்பார்க்க வேண்டும். தேவையானால், வேறுவழியின்றேல் பொருளை இருக்கும் இடம் தேடிச் சென்று, நேரில் கண்டு

தெளிய வேண்டும். கம்பன் உள்பட எவரையும், எதையும், அப்படியே நம்பி ஏற்றுக் கொள்ளாமல் பல்லாற்றானும் சோதித்து தெளிவுபெறல் ஆராய்ச்சியாளரின் தவிர்க்கவொண்ணுக் கடமை; தனிப்பெரும் உரிமையும் கூட!

எதை ஆய்கிருேமோ அதில் காணப்படுகின்றனவற்றைத் தவறு, பிழை, வழு என்று எளிதில் முடிவு செய்து விடப் படாது. அதற்காக, குற்றம் குறைகள் இருந்தால் அவற்றை மூடி மறைத்துப் பூசி மெழுகிவிட வேண்டுமென்று சொல்லவில்லை; சொல்லவும் மாட்டேன்.

கம்பனைப் போன்ற கல்வியில் பெரிய ஒரு மாமேதையை ஆயும்போது ஏன் இப்படி மொழிகிருன். அதில் உள்ள சிறப்பு என்ன! தவருனல் என்ன காரணம்? என்ற முறையில் ஆராயவேண்டும். அதே காலத்தில் எவரை, எதை ஆராய்கிருமோ அதில், அவர் மாட்டு அன்பும் பரிவும் கொண்டு செயல்பட வேண்டும். நிச்சயமாகத் தவறு என்று தெளியும்வரை அவரை நாம் கைவிடப்படாது. அறிவும் - நேர்மையும் இருகரையாய் அமைய ஆராய்ச்சி என்னும் நன்னீர் ஆறு தன்வழி ஒழுகவேண்டும். அப்பொழுதுதான் பயன் சிறக்கும் இல்லையா?

இனி நூலுள் நுழையலாம். 'அகில் இருண்ட நிறமுடையது என்பதைக் ''காரகில்'' என்று கூறுவதிலிருந்து...... உணரமுடிகிறது' என்கிருர் ஆசிரியர் (பக்:6) அகில் இருவகைப்படும். ஒன்று காரகில்: மற்றையது வெள்ளகில்: புகைக்க மணம் தருவது காரகில்; அரைக்க மணம் தருவது வெள்ளகில். சந்தனம் போல வெண்மையாய் இருப்பதால் சந்தனத்தில் கலந்து நிறம் பெறுவதைப் போல அகில் தேய்விலும் குங்குமப்பூ கலக்கப் பெறும் என்று கம்பன் பேசுவான்.

'............நானமும்: நறும் குங்குமம்
செறி அகில் தேய்வையும்' (பா. கா)

எனவே அகில் கருநிறமுடையதே என்று ஒரு வழியாய் முடிவு கட்டப்படாது.

'காவி, கருங்குவளை, நெய்தல் நீலோற்பலம், பானல் என்பவை ஒரு மலரா அல்லது வெவ்வேறு மலர்களா என்பது பற்றி ஐயம் எழுகிறது.

''காவியும் கருங்குவளையும் நெய்தலும் காயாம்
பூவையும் பொருவுவானவன்''

'படர்பூங்குவளை நாண் மலரோ
நீலோற் பலமோ, பானலோ''

என்ற பகுதிகளை நோக்கும் போது இவை வெவ்வேறு மலர்கள் என்று எண்ணத் தோன்றுகிறது: ஆனால் இவை எந்த நிலையில் வேறுபடுகின்றன என்பதற்குக் குறிப்புகள் இல்லை. உரையாசிரியர்கள் இவையனைத்தும் ஒன்றையே குறிக்கின்றன என்ற முறையிலேயே உரையெழுதிச் செல்கிறார்கள், (பக் : 19)

என்று கூறி நச்சினார்க்கினியர், உ. வே. சா.வை. மு.கோ முதலியவர்களின் உரைப்பகுதியைச் சான்று காட்டுவதுடன் 'சங்க இலக்கியங்களில் செடி கொடி விளக்கம்' என்ற ஆய்வு நூல் ஆக்கிய திரு.சாமியின் கருத்தையும் எடுத்துக் காட்டி முடிவில்,

'எனவே இவை வெவ்வேறு செடிகள் என்று
எண்ணும் முறையில் கம்பர் கூறியிருப்பது
ஏன் என்று விளங்கவில்லை' (பக் : 20)

என்று தம் முடிவை ஐய நிலையில் ஐயமறக் கூறுகிறார்.

அல்லி வகையில், அல்லிமுதல் பானல் வரைக் கொண்ட பெயர்கள். பதின்மூன்றில் உற்பலம், குமுதம், குவலயம், நீலோற்பலம் ஆகிய நான்கும் சமஸ்கிருதச் சொற்கள். கிழங்கில் தோன்றுவது என்னும் பொருள் தருவது உற்பலம் குமுதம் என்பது அரத்தம், குவலயம் எல்பது குவளை; நீலோற்பலம் என்பது நீலமலராகும். எனவே எஞ்சிய ஒன்பதையே நாம் ஆயவேண்டும்.

அல்லி என்பது இனத்தின் பொதுப் பெயர். தாமரை யையும் குறிக்கும். அரத்தம் என்பது செவ்வல்லி; ஆம்பல் என்பது வெள்ளல்லி; நீலம் என்பது நீல அல்லி. எனவே தான் சேதாம்பல், அரக்காம்பல், செங்குமுதம் என்றெல்லாம் அடைகூட்டி செவ்வல்லியை முன்னையோர் குறிக்கலாயினர்.

கழுநீர் அல்லது செங்கழுநீர் மலரை ஒருவாறு அல்லி இனமாய்க் கருதலாம் போலத் தோன்றினும் அது பல்லாற் றானும் அல்லியினின்றும் வேறுபட்டது. அதன் நாளத்தின் நீளம் மூன்றடிக்கு மேற்படாதது. மணம், நிறம், அளவு, அமைதி, தோற்றம் ஆகிய எல்லாவகையாலும் நீலம் அல்லது நீலோற்பலத்தினின்றும் வேறுபாடுடையது. இன்றும் திருவா ரூர் போன்ற சில பெருங்கோயில்களில் நாள் தோறும் வழி பாட்டில் பயன்படுத்தப்பெறுவது. அதன் நிறம் சுத்த நீல மன்று ஊதா விரவிய நீலநிறம் (Purplish Blue) அல்லி, தாமரைகளைப் போல ஆழமிக்க நீர் நிலைகளில் கழுநீர் உற் பத்தி ஆகாது வளர, வாழ முடியாது மூன்றடி ஆழத்திற்கு உட்பட்ட சேற்றுப்பாங்கான குட்டைகளில் மட்டுமே இதைக் காணமுடியும், இந்தத்தன்மையை எல்லாம் தெள்ளத் தெளிய அறிந்தவன் ஆனதாலேயே கம்பன்.

'மேதிக் குழி எலாம் கழுநீர்க்கொள்ளை'

என்று செவ்விதின் மொழிந்து செல்கிறான். பொய்கை, தடம், தடாகம், கேணி முதலியவற்றைக் கூறாமல் 'மேதிக்குழி' என்று அவன் கூறுவதை நயம் தெரிந்து பொருள்கண்டு மகிழ வேண்டும்.

'காவி' என்பது கருங்குவளை. மணிவாசகர் இதை 'பைங்குவளைக் கார்மலர்' என்பர். இருண்ட நீல நிறமுடை யது அடி திரண்டும், கழுத்து நெருங்கியும், வாய் அகன்றும் உள்ள குவளைமலர், செவ்வரி ஓடிய வெளிர் நீல நிறமுடை யது. அதன் தோற்றத்தை - அமைதியை - அடிப்படையாகக் கொண்டு அமைத்த காரணத்தாலேயே நீரருந்தும் ''டம்ளர்'' குவளை எனப் பெயர் பெற்றது.

நெய்தல் என்பது பெரும்பாலும் கடற்கரைப் பகுதி யில் காணப்படும் கருநீலமலர். பானல் என்பதைப் பெரும் பாலும் மருதநிலப்பகுதியில் வாய்க்கால்களிலும் குளக்கரை களிலும் காணலாம். நிறம் நீலமேஆயினும், உருவும், அளவும், அமைதியும் முற்றும் தனித்தன்மை கொண்டவை. அளவும் சிறியது.

நம்முடைய வணக்கத்திற்கும் நன்றிக்கும் உரிய பழைய உரை ஆசிரியர்கள் நுலறிவும் - நுண்ணறிவும் துணை யாக்கொண்டு கூறுவகையும் நவீன விஞ்ஞான நெறியில் தாவர இயலார் பிற நாட்டுத் தாவரங்களை அடிப்படை யாய்க் கொண்டு வகைப்படுத்தி வரையறை செய்வதையும் புரிந்துகொண்டு அவர்கட்கெல்லாம் மரியாதையுடன் ஒரு கும்பிடு போட்டுவிட்டு இவையனைத்தும் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்டவையே என்பதை நாம் கண்மெய்யாக - பிரத்தி யட்சமாகக் காணலாம். எனவே ஆராய்ச்சியாளர் திரு. ''சாமி கருதுவதுபோல்'' நெய்தல் செடியையே நீலோற்பலம், நீலம், கரு நெய்தல், கருங்குவளை, பானல் என்றுபல பெய ரால் மயங்கிக் கூறுவர் (பக் : 20) என்பதை நாம் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

காயாம்பூ இராமன் மேனியழகிற்கு அமைந்த சிறந்த உவமையாகும். கொம்பு முழுதும் அடர்ந்து செறிந்து மலர்ந்து பொலியும் பூந்துணரின் வனப்பைக் காணும் நமக்குக் கூட மயிற்கழுத்தே நினைவுக்குவரும். பூவை உதிர்த்துக் கையி லேந்திக் காணும் பொழுதுதான் உவமை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்; மிளகளவேயுள்ள இப்பூவின் புறத் தோற்றம் ஒள்ளிய முதிர் நீல நிறமுடையது. அகப்பகுதி ஆங்காங்கே இனிய சிவப்புநிறம் அமைந்து மனத்தை ஈர்த்து நிற்கும். கண்ணும் வாயும் கையும் திருவடியும் சிவந்த கார்முகில் வண்ணனுக்குப் பொருத்தமான உவமை காயா நறும் போதே என்பது நமக்கும் கூட நன்கு புலப் படும்.

1941ல் ரசிகமணி அவர்கள் காரைக்குடி வந்து ஒரு வாரம் தமிழ் விதைத்தார்கள். ஒருநாள் ''புயல் இவன் மேனி என்பார்; பூவையே பொருவுமென்பார்'' என்ற அடியைக் கூறி அழகை வியந்து கொண்டிருந்தார்கள். ''முன்னதற்குப் பின்னது மறுப்பு'' என்றேன் நான். எப்படி? என்றார்கள். பக்கத்திலிருந்த காயாஞ் செடியிலிருந்து ஒரு கொம்பை ஒடித்து வந்து காட்டினேன். சிவப்புப் புள்ளிகள் அகத்திருக்கப் புறத்தே நீலம் பூத்தொளிரும் அழகைக் கண்டு பேரின்பத்துள் மூழ்கி ''என்ன அருமை! என்ன அருமை! புயல் ஒருபுடையுவமைதான். பூவைதான் சரியான உவமை - இன்று தானே காயாமலரைப் பூவையை நான் காணுகின்றேன்! கம்பன் எப்படியெல்லாம் இயற்கையை அனுபவித்திருக்கிறான் என்பது இப்பொழுதல்லவா புரிகிறது! என்று வாயூறி அன்று முழுதும் அதையே எண்ணி எண்ணி இறும்பூதெய்தினார்கள்.

கொன்றையில் பலவகையுண்டு, கடுக்கை, இதழி - பொன்னிதழி - சரக்கொன்றை, பெருங்கொன்றை, பிரணவக்கொன்றை, செங்கொன்றை, புலிநகக்கொன்றை என்று பற்பல பெயர் கொண்டு விளங்குகிறது இது. புலி நகக் கொன்றை ஞாழல் எனப்பெயர் பெறும். இவை இனத்தால் ஒன்றே ஆயினும் தோற்றம் முதலியவற்றால் வேறுபட்டவை என்பதைப் பெயர்களே புலப்படுத்திக் கொண்டிருக்கவில்லையா.

'கிஞ்சுகம்' என்பதை எட்டி அல்லது காஞ்சிர மரம் (Strychuos Nux - vomica) என்பதாகக் கொண்டிருப்பது வியப்பாக உள்ளது. பல்வேறு நிகண்டுகளிலும் இப்பெயர் காணப்படவில்லை. அன்றியும் ''கிஞ்சுவ மரத்திடை'' என்ற பொருந்தாப் பாடத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார். 'மரத்தடி'' என்றாலும் பொருளுண்டு. ''மரத்திடை'' என்பது வழுவன்றோ? மிகப் பெரும்பாலான சுவடிகளிலும், அச்சுப் பதிப்புகளிலும் ''கிஞ்சுக வனத்திடை'' என்ற பாடமே காணப்படுகிறது. பொருத்தமான நல்ல பாடமும் இதுவே!

கிஞ்சபம் என்ற சொல் அசோகைத்தான் குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். இருந்திருந்து இராவணன் சீதையை எட்டி மரத்தடியிலா சிறைவைத்திருப்பான்? சிந்திக்க வேண்டும்.

'சிந்து என்பது புளியைக் குறிக்கும் சொல். நிகண்டு கள் சிந்து, சிந்தம், சிந்தகம் என்ற சொற்களால் புளியைக் குறிக்கின்றன.

''இப்பெயர் 'சிஞ்சா' என்ற வடசொல்லின் திரிபாகும்'' (பக்: 78) என்றுமுடிவு கட்டுவது எளிதல்ல. தெலுங்கில் 'சிந்தம்' என்ற சொல்லே புளியைக்குறிக்கிறது. சிந்தம்+ பண்டு=சிந்தப் பண்டு என்று அன்றாட வழக்கிலும் பயிலப் பெறுகின்றது.

மேலும், சமஸ்கிருதத்திலிருந்துதான் பல்வேறு சொற் களும் தமிழுக்கு வந்தன எனக்கருதல் அறனன்று. நான் சம்ஸ் கிருதத்தை வெறுப்பவனல்லன்; மதிப்பவன்; போற்றுபவன். சம்ஸ்கிருதம் எக்காலத்தும் பேச்சு வழக்கில் இருந்ததில்லை. அது இயல்பான மொழியுமல்ல, எல்லார்க்கும் பொருந்த அமைக்கப்பட்டது என்ற உண்மையைச் 'சமஸ்கிருதம்' என்ற அதன் பெயரே நன்கு புலப்படுத்திக் கொண்டிருக்கிறது. சம்ஸ் கிருதம் இயல்பாகத் தோன்றி வளரும் ஒரு 'மொழி' அல்ல ஆனதால் பொதுவான பல சொற்களும் பல்வேறு மொழிகளி லிருந்து - குறிப்பாக தமிழிலிருந்து - கொண்டவை. எனவே சம்ஸகிருதத்தில் காணப்படும் சொற்கள் யாவும் சம்ஸ்கிருதச் சொற்கள் என்றும். தமிழிற் காணப்படும் அச்சொற்கள் சம்ஸ்கிருதத்தினின்றும் திரிந்தோ திரியாமலோ வந்தவை என்றும் முடிவுகட்டுதல் முறையன்று பெரும்பாலான கலைச் சொற்கள் அறிஞர்களால் சம்ஸ்கிருதத்தில் ஆக்கப்பட்டவை அவை தமிழுக்கு அங்கிருந்து வந்தவை என்று கூறினல் நியா யம். உலக வழக்கில் பன்னெடுங்காலமாக பயின்றுவரும் ஒரு மொழியில் காணப்படுவதும், அன்றாடவாழ்வுக்கு இன்றிய மையாத பொருட் பெயராகவும் உள்ள சொல் வெறெங்கி ருந்தோ வந்தது எனக்கொள்ளலும்,சொல்லலும் நெறியன்று.

'சிந்து' என்பது இயற்பெயராகவும், 'புளி' என்பது வேர் முதல் பழம் வரையுள்ள எல்லா உறுப்புகளின் சுவை காரணமாகத் தோன்றிய பண்புப் பெயராகவும் கொள்ளப் பட வேண்டுமென்பதே என் கருத்து.

நொச்சி என்பதும் சிந்துவாரம் என்பதும் ஒன்றே என்று கருதுகிறுர் ஆசிரியர். நொச்சி என்பது சிறு மரமாய் வளர்வது. மூவிலைக் கூட்டிணுக்காகவும், ஐந்திலைக் கூட்டிணுக் காகவும் காணப்படும். அஞ்சிலை நொச்சி,மூவிலை நொச்சி என்று அதையும் பிரித்துப் பேசுவர். அவை இரண்டும் முற்றிலும் ஒத்த ஓரினமே! இதன் நிறம் கொம்பும் காம்பும் இலையும் சாம்பல்பூத்த வெளிர்பச்சையாக இருக்கும். சிந்து வாரம் என்பது 'கருநொச்சி' என வழங்குகிறது. நொச்சியினின்றும் இது எல்லாவகையாலும் வேறுபட்டது. தண்டும் காம்பும் இலை நரம்பும் ஊதா முதிர்ந்த ஒளிர் கருமையுடையவை. இலை முதிர் பசுமை கொண்டு கூர்மையுடையதாய் மேல் நோக்கிநிற்கும். ஆகவே இரண்டையும் வேறுவேருய்க் கொள் வதே சரி.

புன்னையையும், சுர புன்னையையும் வேறுவேருய்க் கொண்ட ஆசிரியர் நாகம் என்பது சுரபுன்னையே எனத் துணிகிறுர். புன்னையுடன் ஓரளவு ஒத்திருக்கும் சுர புன்னையை வேருக்கிய ஆசிரியர் எவ்வாற்ருனும் ஒற்றுமை காணப்ப டாத நாகத்தைச் சுர புன்னையின் மறுபெயராகக் கொண்ட மையாலேயே ஒன்றென ஊகித்திருக்க வேண்டும். சுரபுன்னை கடற்கரையை ஒட்டிய வெம்மை மிகுந்த மணற் பாங்கிலும், பாலைநிலம் போன்ற வரண்ட நிலப்பகுதியிலும் வளர்வது. நாகம் என்பது மாமரம்போல அடிபெருத்து வானுற ஓங்கி வளர்ந்து காணப்படும். தற்பொழுது அது 'நாகதாளி' எனச் சொல்லப்படும். அடி மரத்தை ஒட்டி மலர் தோன்றும். சிவப் பும், மஞ்சளும், வெண்மையும் கொண்ட தடித்த இதழ் களுடன் கூடியவை இதன் மலர்கள். நூற்றுக்கணக்கான சிறு முளைகள் சிவலிங்கம் போல மலரின் அடிப்பாகத்தில் காணப்படும். குடை கவித்தாற் போல நாகபடம் மலரடியி லிருந்து எழும்பி மேலே வளைந்து கவிந்திருக்கும். எனவே

இரண்டும் ஒன்றிற் கொன்று முற்றிலும் மாறுபட்ட மரங்களே.

''மாணிக்கொடி' என்ற பெயர் தற்பொழுது எந்தத் தாவரத்தைக் குறிக்கிறது என்று தெரியவில்லை'' என்கிருர் (பக்;123) நேர்மையான ஆசிரியர். இதை இன்றும் எங்கள் பகுதியில் காணலாம். மாஞுங்கொடி, ஊஞுங்கொடி என்பர் இதனை, ஆண்டுதோறும் காரைக்குடித் தேர் இக்கொடி கொண்டே கட்டப்பட்டு வருகிறது.

'வள்ளிக்கொடி' பற்றி ஆயும்போது (பக் : 131) நிலத்தில் படரும் இக்கொடியைக் கம்பர் மரத்தில் சுற்றி வளர்வதாகக் காட்டுகிருர். என்று எழுதுகிருர்.

''வள்ளிபுடை சுற்றி உயர் மரம்''

என்ற இடத்தில் வள்ளியென்னும் சொல் பொதுவாய்க் கொடி அல்லது பூங்கொடியையே குறிக்கிறது. எனவே வள்ளிக்கொடி என்று பொருள் கோடல் சரியன்று. சேனை, கருணை, சேம்பு முதலிய உண்ணும் கிழங்கு வகையைப் போலச் செடிக்கிழங்காய் இல்லாமல் கொடியின் கிழங்காய் இருப்பதால் தான் இதை வள்ளிக் கிழங்கென்றனர் பண்டையோர். இன்றும் எங்கள் பகுதியில் வள்ளி பயிரிடப்படுகிறது. வெற்றிலை போன்ற இலையையுடையது. உண்ணச் சுவைமிக்கது, நார் இல்லாதது. மார்கழி - தை மாதங்களில் கிழங்கு கல்லி எடுக்கப்படும். மரத்தில் படரக் கூடுமாயினும் படர விடுவதில்லை. காரணம் மரத்திற்கு அப்பால் கல்லி எடுக்க வசதியாக, வேர்கள் ஓடியிராத நிலத்தில் பயிரிடப்படுவதேயாகும். இதில் இருவகை உண்டு; ஒன்று நல் வெள்ளை; மற்றது இளஞ் சிவப்பு. இரண்டின் தோலும் ஒரே மாதிரி கருப்பாய் (பன்றித் தோல் போல்) வேர் அரும்பிக் காணப்படும்.

சர்க்கரை வள்ளி என்பது இதினின்றும் முற்றிலும் மாறுபட்டிருக்கும். தோல் சிவப்பாகவும், வெள்ளையாகவும் இருவகை உள்ளதேனும், கிழங்கின் தோற்றமும், சுவையும்

ஒஃறே! இரண்டினுள்ளும் நார் உண்டு. இது ஆங்கிலத்தில் SWEET POTATO என்பர்.

இவையன்றி மூன்றாவது வகை ஒன்றுண்டு. அதை மரவள்ளி, ஏழிலை வள்ளி, குச்சிக்கிழங்கு என்ற பெயர்களால் குறிப்பர். ஆங்கிலத்தில் Topioca என்பர். இவையல்லாமல் சிறுவள்ளி, நீர்வள்ளி போன்ற வகைகளு முண்டு.

குங்குமப்பூ ஸ்பெயின், பிரான்சு முதலிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது (பக் : 160) என்றாலும், இந்தியாவில் காஷ்மீரத்தில் மிகுதியாகப் பயிராகிறது. 'குங்குமம்' என்பது வடசொல். 'மரவம்' என்பதே தமிழ்ச் சொல். ஆனால் 'மாரவம்' என்பது நீட்டல் விகாரம் பெற்ற மரவமே!

இன்னும் எத்தனை எத்தனையோ சொற்கட்கு அரிய விளக்கம் தருவதுடன் சிந்திக்கவும் செய்யும் ஓர் அருமையான பொருளாய்வுக்கட்டுரையை ஆக்கிஅளித்த செல்வி கி. மோகன குமாரியின் ஆர்வத்தை எத்துணைப் பாராட்டினும் தகும். அரிதின் முயன்று, அனைத்தையும் ஆய்ந்து சீரிய முறையில், தெவிட்டாத மொழியில் நூலைப் படைத்துள்ளார். இங்ஙனம் மாணாக்கப் பருவத்திலேயே மாண்புடைப் பணியை மேற்கொள்ளச் செய்து வழி நடத்திச் செல்லும் துறைத் தலைவர் டாக்டர். ச. வே. சுப்பிரமணியம் அவர்களை நாடும், நல்லோரும் நனி பாராட்டி வாழ்த்தும். அங்ஙனம் வாழ்த்துவோர் திருக்கூட்டத்தில் அடியேனும் ஒருவனாய் நின்று, "பல்கலைக் கழகமும், தமிழ்த்துறையும், தமிழாசிரியப் பெருமக்களும், மாணாக்கர்களும் நிறை வாழ்வு வாழ்ந்து நெடும்புகழ் சூடி வாழ்க!" என்று மனமார, வரய் மணக்க வாழ்த்தியும், நன்றி செலுத்தியும் அமைகிறேன்.

அன்பன்,

காரைக்குடி,
15—5—1969.

**சா. கணேசன்**

# பொருளடக்கம்

# முன்னுரை

இவ்வுலகில் தாவரங்களே இல்லையெனில் என்றொரு வினவினை எழுப்பினேன். பசும்புல் தரையின்றி, படர்ந்த புதர்களும் மலர்களுமின்றி, ஓங்கியுயர்ந்த மரங்களும் கிளை களும் தரும் பசுமைக் காட்சியின்றி, மணமும் நிறமும் எழிலு மற்ற வறண்ட பாலையைத்தான் காண இயன்றது. பசுங்கிளி களும் குயில்களும் இசை பயின்றபோதும், அவற்றின் குர லுக்கு இனிமையூட்டும் இயற்கை வளமின்றி என்ன பயன்? இயங்கித் திரியும் இந்த விலங்கு உலகமே தாவரங்களின் றேல் வறண்டு வாடிவிடுமே என்று தோன்றியது. இவ்வாறு பசுமை விரித்து எழில் பூத்து வளமை சிந்தும் தாவர உலகம் மனித வாழ்வோடு ஒன்றியது; மனித வாழ்வுக்கு இன்றியமை யாதது.

## உலகத் தோற்றத்தில் தாவரங்கள்:—

அறிவியலார் தாவரங்கள், விலங்குகள் இவ்விரண்டின் தோற்றத்தையும் பொதுவான உயிர்க்கருவினின்றே கொள் வர். தாவரங்களே முதலில் தோன்றின என்ற கருத்தை இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. 'புல்லாகிப் பூடாய் ...... என்ற மாணிக்கவாசகர் பாடலை ஈண்டுச் சுட்டலாம்'

## வாழ்க்கையில் தாவரங்கள்:—

தாவரங்களுக்கும் மனிதவாழ்வுக்கும் உள்ள தொடர்பு ஆதிகாலம் தொட்டு, தற்காலம் வரை தொடர்ந்து வரும் ஒன்றாகும். மனிதனின் இன்றியமையாத தேவைகளான ஊண், உடை, உறையுள் என்ற மூன்றையும் தருவன தாவரங்களே, விலங்கு போன்று அலைந்து திரிந்த ஆதிமனிதனுக்குக் காய் கனி, கிழங்குகள் உணவாயமைந்தன. நாகரீகத்தின் உச்சியில் வாழும் இன்றைய மனிதனுக்கும் தாவரங்களே உணவாக அமைகின்றன. தாவர உணவு உண்டு வாழ்பவனுக்கு வேறு

உணவுப் பொருட்கள் தேவையில்லை. ஆனல் ஊனுணவு உண்டு வாழ்பவனுக்கு தாவர உணவும் தேவைப்படுகிறது. இவ்வாறு யாவருக்கும் உணவாக அமைவது தாவரங்களே. ஆதிமனிதன் தழைகளை ஆடையாக அணிந்தான். தற்கால மனிதன் அணியும் உடைகளிலும் பெரும்பான்மை தாவரங்களினின்று தயாரிக்கபடுபவையே. உறையுளை அமைக்கும் நிலையிலும் ஆதிமனிதனும் இன்றைய மனிதனும் தாவரங்களையே நம்பியுள்ளான்.

இவைமட்டுமன்றி, மூலிகை மருந்துகளையும், உலகெங்கும் பரந்து பல்லுயிரைக் காத்து நிற்கும் penicillin போன்ற அரிய மருந்துகளையும் அளிப்பவை தாவரங்களே இதுபோன்று பல்வேறு நிலைகளிலும் தாவரங்கள் மனித வாழ்வோடு பின்னிப் பிணைந்து கிடக்கின்றன.

## மலர்கள்:-

தாவரங்களின் பல்வேறு உறுப்புக்களிலும் தனிச்சிறப்புப் பெற்று விளங்குபவை மலர்களாம். மனிதவாழ்வில் நடைபெறும் எல்லா இன்ப துன்ப நிகழ்ச்சிகளிலும் மலர்கள் இடம் பெறுகின்றன. தெய்வவழி பாட்டிலும் மலர்கள் பெற்றுள்ள இடம் ஒப்பற்றது. இப்பயன்களைத் தவிர, இயற்கை எழிலை மெருகூட்டும் அழகுப் பொருட்களாக அமைபவை மலர்களே. துன்பங்களுக்கும் போராட்டங்களுக்குமிடையே சிக்கித் தவிக்கும் மனித உள்ளத்தை மகிழ்வூட்டி ஆறுதலளிக்கின்றன இம்மென்மலர்கள். மென்மை, அழகு, இன்பம் என்ற உணர்வுகளையே இலக்கியங்கள் மிகுதியாகப் பேசுகின்றன. இவ்வழகுப் பயன் கருதியே இலக்கியங்கள் தாவரங்களுக்குத் தனியொரு இடத்தை அளித்துள்ளன.

## இலக்கியத்தில் தாவரங்கள்:-

தற்கால இலக்கியங்களை நோக்க, பழந்தமிழ் இலக்கியங்களில் தான் தாவரங்களை மிகுதியாகப் போற்றும் நிலையைக் காண்கிறோம். பழந்தமிழிலக்கியத்தில் தாவரங்கள்

அமைந்துள்ள நிலைகள் பல. அவை பாடல்களுக்குப் பின்னணி யாகலாம்; இலக்கிய உணர்வோடு ஒன்றலாம்; பாத்திரங்க ளுக்கு எழிலூட்டலாம்.

## பின்னணி:-

தலைவன் அல்லது தலைவியின் உருவத்தைச் சித்தரிப்பதால் மட்டும் ஓர் ஓவியம் சிறந்துவிடாது. பாத்திரங்களின் மன நிலைக்கேற்ற ஓர் அழகிய பின்னணியையும் வரையும்போது மட்டுமே அவ்வோவியக் காட்சி உண்மையான கலைப்பயனைத் தந்து நிற்கும். இந்நிலை இலக்கியத்திற்கும் உரிய ஒன்றே. தலைவன் வந்தான்; தலைவியோடு மகிழ்ந்தான்; சென்றான் என்று மட்டும் கூறுவதால் அது கவிதையாகிவிடாது. கவி தையின் அடிப்படைப் பயன் முருகியல் பயனே. இம்முருகி யல் பயனைத் தந்து நிற்கும் அழகிய ஒரு காட்சி பின்னணி யாக அமையும்போதுதான் கவிதை கவினுறுகிறது. எனவே கவிதைக்குப் பின்னணி தேவைப்படுகிறது. பெரும்பாலும் மரஞ்செடி கொடிகளே பின்னணியாக அமையும் நிலையைக் காண்கிறோம். இப்பின்னணி இருநிலைகளில் அமையலாம்.

## 1. பொதுப்பின்னணி:-

ஒவ்வொரு திணைப்பாடலிலும் அந்தந்தத் திணைக்குரிய நிலத்தைக் காட்டும் வர்ணனையாக அமைவதை இங்குக் கூற லாம். இங்கு கூறப்படும் பின்னணி, நிகழ்ச்சியோடு தொ டர்புடையதாக இருக்க வேண்டும் என்ற தேவை இல்லை. இப் பின்னணி தருவது வர்ணனைப் பயன்மட்டுமே

## 2. நிகழ்ச்சியோடு ஒன்றிய பின்னணி:-

வர்ணனைப் பயன் மட்டும் தந்து நில்லாமல் வேறு பல நிலைகளிலும் பின்னணி அமையலாம். பாத்திரம் தன் உணர் வையும் பின்னணியாக அமையும் பொருட்களின் மேல் ஏற்றிக் கூறும் நிலையைக் காண்கின்றோம். தொல்காப்பியச் சொல்லதி

சாரத்தில் (எச்சவியல் : 44) மேற்கோளாகத் தரப்பட்டிருக்கும் 'பசப்பித்துச் சென்ருருடையையோ வன்ன நிறத்தை யோ பீரமலர்' என்ற பாடலே இதற்குச் சான்ருகக் காட்டலாம். இங்குத்தலைவி பசப்புற்றிருக்கும் தன் மேனி நிறத்தை யொத்து மலர்ந்திருக்கும் பீர்க்கமலரை நோக்கி, 'உன்னையும் உன் தலைவர் பசப்பித்துச் சென்ருரோ' என்று வினவுகிருள்.

அறிவுறுத்தும் நிலையிலும் பின்னணி அமையலாம். இவ்வாறு அறிவுறுத்துங்கால் வெளிப்படை, உள்ளுறை என்ற இருநிலைகளிலும் தாவரங்கள் பயன்படுவதைக் காண்கிருேம். பாலைக் கலியில் அமைந்த பாடலொன்றில் தோழி தலைவனிடம் 'நாங்கள் எத்துணை எடுத்துரைத்தும் அவற்றைச் செவி கொள்ளாமல் செல்லும் உன்னை சுரத்திடை அடையொடு வாடிய அணிமலரும், சேர்ந்தெழுந்த மரம் வாடப் புல்லு விட்டிறைஞ்சிய பூங்கொடியும், அம்மரத்தணி செல வாடிய அழகிய தளிரும் தடுத்து நிறுத்தும் என்பதை உணர்வாயாக' என்றுரைக்கிருள். இங்கு வெளிப்படையாகவே அறிவுறுத்தும் நிலையில் தாவரங்கள் அமைகின்றன. இதுமட்டுமன்றி தாவரங்கள் உள்ளுறைப் பொருளைத் தந்து நிற்பதைப் பல பாடல்கள் காட்டுகின்றன. குறிஞ்சித் திணையில் அமைந்த பாடலொன்றில் தாவரங்கள் உள்ளுறைப் பொருளை உணர்த்துவதை நோக்குவோம். களவொழுக்கம் ஒழுகி வருகின்ற தலைவனைக் கற்பொழுக்கத்தின் கண் ஈடுபடச்செய்ய தோழி விரும்புகிருள். அதை அவள் குறிப்பாக உணர்த்தும் முறை பாராட்டத் தக்கது. தோழி தலைவனின் ஊரிலுள்ள ஒரு காட்சியை அவன் கண்முன் காட்டுகிருள். கழிகளில் மலர்ந்துள்ள தாழை. அலைகள் மோதும்போது அலைக்கப்பட்டுத் தாது சிதறுகிறது. அத்தாதின் மணம் ஊரெங்கும் பரந்து ஊரின் புலவு நாற்றத்தை நீக்குகிறது. அதைப் போன்று, ஊர் முழுவதும் பேசும் அலரைப் போக்குமாறு தலைவன் பொருள் தேடி வந்து தலைவியை மணந்து கொள்ள வேண்டும் என்று தெரிவிக்கிருள் (நற் : 203 . இங்கு புலால் நாற்றம் அலராகவும், தாழை மலரின் மணம் திருமணமாகவும் அமைந்து உள்ளுறை சிறக்கக் காண்கிருே . இவ்வாறு உள்ளுறைப் பொருள் அமைந்த

பாடல்களில் தாவரங்கள் சிறந்த இடத்தைப் பெறுகின் றன.

பின்னணியாக அமைகின்ற மரஞ்செடி கொடிகளின் மேல் தன் உணர்வையும் ஏற்றிக்கூறும் தன்மையை முன்பு கண்டோம். அதுமட்டுமின்றி மரங்களையே உறவாகக் கொள் ளும் நிலையையும் பழந்தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன 172–ஆவது நற்றிணைப் பாடலில், தலைவி புன்னை மரத்தைத் தன் தங்கையாகக் கொண்டு அதன் எதிரில் தலைவனோடு விளையாடி இன்புற நாணி நிற்கும் நிலையைக் காண்கிறோம்.

## காலம்-இடம்:-

வாழ்க்கையில் நடைபெறும் எந்தவொரு நிகழ்ச்சிக்கும் ஒரு குறிப்பிட்ட காலமும் இடமும் உண்டு. இதே நிலை இலக் கியத்திலும் அமைகின்றது. ஒவ்வொரு திணைக்கும் குறிப் பிட்ட நிலத்தையும் காலத்தையும் வரையறுத்தார்கள் பழந் தமிழ் மக்கள். இலக்கியம் நேர்மொழியால் ஆனதன்று; குறி யீடுகளால் அமைந்தது. எனவே குறிப்பிட்ட திணைக்குரிய காலத்தையும் இடத்தையும் வெளிப்படையாகக் கூறாமல் குறி யீடுகளாலேயே உணர்த்தினர். இத்தகைய குறியீடுகளாகத் தாவரங்கள் அமைகின்றன. நெய்தல், புன்னை, அடம்பு என்ப வை நெய்தல் நிலத்தை உணர்த்தும் குறியீடுகளால் அமை வதைப் பல பாடல்கள் காட்டுகின்றன. குறிப்பிட்ட மரங்கள் மலர்ந்து விட்டன என்று கூறி அதற்குரிய காலத்தையும் உணர்த்தும் நிலையைக் காணலாம். முல்லையில் அரும்புகள் தோன்றுவதையும், தேற்றாமரத்தின் முகைகளும், கொன்றை யின் மொட்டுக்களும் பிணிப்பவிழ்ந்து மலர்வதையும் கூறிக் கார்கால வரவினை உணர்த்துகிறாள், தாழி (அகம்: 4). பாலைக் கலியின் பிற்பகுதியில் அமைந்த பாடல்கள் பல இளவேனில் காலத்தில் மலரும் மலர்களைப் பற்றி விரிவாக எடுத்துரைக் கின்றன. மழைக் காலத்தில் காலத்தை உணர இயலாமல் தட்டில் வைத்திருக்கும் பித்திகை மலர்கள் மலர்ந்து மணம்

பரப்புவதன் மூலம் 'மாலைப் பொழுது வந்துவிட்டது' என்று மகளிர் விளக்கேற்றி இல்லுறைத் தெய்வத்தை வணங்கும் காட்சி நெடுநல் வாடையில் (நெடுநல்: 39-44) காட்டப் படுகிறது. இவ்வாறு இடத்தையும் காலத்தையும் உணர்த்தும் கருவிகளாகத் தாவரங்கள் பயன் பட்டன.

## பாத்திரவர்ணனையில் தாவரங்கள்:-

அக இலக்கியங்களில் தலைவியின் உடல்வர்ணனை மிகுதியாக அமைவதைக் காண்கிறோம். இவ்வாறு வர்ணிக்கும் போது உடல் உறுப்புக்களைத் தாவரங்களின் உறுப்புக்களோடு உவமித்தனர். தலைவியின் உறுப்புக்களனைத்திற்குமே தாவரங்கள் உவமையாக அமைகின்றன. தலைவியின் மேனி நிறத்திற்கும் (குறுந்: 331), பாதத்திற்கும் (குறுந்: 378) மாந்தளிர் உவமையாகின்றது. ஓதி என்று கூறும் ஒருவிதத் தலைக் கட்டையுடைய கூந்தலுக்கு வாழைப் பூவையும் (நற்:225) கண்களுக்கு நீலம் (புறம்: 111), நெய்தல் (புறம்: 144) குவளை (நற்: 317), கருவிளை (நற்: 362), தாமரை (பரி: 2; 53) என்ற மலர்களையும் உவமையாக்கினர். பெண்களின் வாயிதழுக்கு ஆம்பல் மலரும் (பரி; 8; 16), முருக்கமலரும் (அகம்:3), நாவிற்கு இலவமலரும் (அகம்: 42), பற்களுக்கு முல்லை முகையும் (கலி: 22), மௌவல் முகையும் (அகம்: 21) உவமைகளாகின்றன. மகளிர் முகத்திற்குத் தாமரை மலரையும்( கலி:73), நகிலுக்குக் கோங்கின் முகையையும் (கலி: 117), கைகளுக்குக் காந்தள் மலரையும் (சிறு: 167) ஒப்பிட்டனர். இவ்வாறு மகளிர் உறுப்புக்களனைத்திற்குமே உவமையாகும் சிறப்பினைத் தாவரங்கள் பெற்றுள்ளன.

## கையுறையாக மலர்கள்:-

அக இலக்கியத்தின் அடிப்படைப் பொருள் அன்பு. அந்த அன்பின் சின்னமாகவும் மலர்கள் அமைந்தன. தலைவன் தலைவிக்குக் கையுறையாகக் காந்தள், குவளை போன்ற

மலர்களை (குறுந்: 1, 366; நற்: 79) வழங்கியதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன

மென்மையும் வீரமும் பெண்மைப் பண்பு என்பது திரு. வி. க. வின் கருத்து. எனவே மென்மை உணர்வைக் கூறும் அக இலக்கியத்தில் பல்வேறு நிலைகளில் பயன்பட்ட தாவரங்கள் வீர உணர்வைக்கூறும் புறப்பாடல்களிலும் இடம் பெறுகின்றன. மன்னர்கள் அடையாளப் பூக்களைக் கொண்டிருந்ததையும். போரின் ஒவ்வொரு நிலையையும் குறிக்க தனித்தனி மலர்கள் பயன்பட்டதையும் சங்ககாலப் புறப்பாடல்களால் உணரலாம். இவ்வாறு மென்மைக்கும் வன்மைக்கும் அடையாளமாக நிற்கின்ற தாவரங்களின் நிலையை எண்ணிவியந்த புலவரொருவரின் குரலை 272- ஆவது புறப்பாடலில் கேட்கிறோம்.

'மணிதுணர் ந் தன்ன மாக்குர ஞெச்சி
..........................................
தொடியுடை மகளிரல் குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமாறழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே'

## காப்பிய உத்தி:-

காலத்திற்கேற்ப இலக்கியப் போக்கு மாறுபடுவதைக் காண்கிறோம். சங்ககாலத்தில் அகம், புறம் என்ற இரு நிலையிலும் அமைந்த இலக்கியப் போக்கிற்கேற்ப தாவரங்கள் பயன்பட்டதைக் கண்டோம். தனித்தனிப் பாடல்களில் இவ்வாறு பல நிலைகளில் பயன்பட்ட தாவரங்கள் காப்பியங்களின் சுவையைக் கூட்டும் உத்திகளாகவும் பயன்பட்டன. முன்னுணர்த்தல் காப்பிய உத்திகளில் ஒன்று. இவ்வாறு

முன்னுணர்த்தும் நிலையில் தாவரங்கள் பயன்பட்டதைச் சிலம்பினுல் அறிகிறோம். மதுரை புறஞ்சேரியை வந்தடைந்த கோவலனையும் கண்ணகியையும் கண்டு குவளையும் ஆம்பலும் தாமரையும் தாள்கள் நடுங்கக் கண்ணீர் விட்டு, வரும் அவலத்தை நமக்கு முன்னுணர்த்துகின்றன (புறஞ்சேரி: 184-188).

## தாவரங்களும் அறக்கருத்துக்களும்:-

அடுத்து அறிவுறுத்தலையே தலைமை நோக்கமாகக் கொண்ட இலக்கியங்கள் பல தோன்றின. இவ்வாறு அமைந்தவையே கீழ்க்கணக்கு நூல்கள். அவற்றுள் தலையாயது திருக்குறள். திருக்குறள் தான் கூறும் அறக் கருத்துக்களை நிலை நாட்டத் தாவரங்களைப் பயன் படுத்திற்று. வள்ளுவர் நன்மையையும் தீமையையும் விளக்க மரத்தைக் கருவியாக்கினுர். அவர் குணத்தில் இழிந்த நிலையடைந்த மக்களையும். குணக் குன்ருகத் திகழும் மக்களையும் மரத்தோடு ஒப்பிட்டார். உண்மையான அன்பு வாழ்வை மேற்கொண்டு, உலகநடையறிந்து அதற்குத் தகுந்த செயல்களைச் செய்வோனிடத்தே செல்வம் சேருமாயின் அஃது ஊருக்கு நடுவில் பழுத்துக் குலுங்கி நிற்கின்ற பயன்மரம் போல்வது என்றுரைத்த வள்ளுவர், பெருந்தகையார் கண்பட்ட செல்வம் மருந்துமரம் போன்று தப்பாது பிறருக்குப் பயனையளிக்கும் என்று மொழிகிருர்,

'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்ருல் செல்வம்
நயனுடை யான்கண் படின்' (குறள்: 216)
'மருந்தாகித் தப்பா மரத்தற்ருல் செல்வம்
பெருந்தகையான் கண் படின்' (குறள்: 217)

இவ்வாறு உயர்ந்தோரிடத்து வந்துசேரும் செல்வத்திற்கு மரத்தை உவமையாக்கிய வள்ளுவர், ஒருவராலும் விரும்பப்படாத இவறன்மை உடையவனிடத்தில் இருக்கும் செல்வத்திற்கும் மரத்தையே உவமையாக்குகிருர். ஆனல் இங்குப் பயன் மரத்தையோ மருந்துமரத்தையோ உவமை

யாக்கவில்லை; நேர்மாருக இங்குக் காட்டப்படுவது நச்சு மரம். இவ்வாறு செல்வர்களையும் அவர்தம் செல்வப்பயனை யும் வேறுபடுத்திக் காட்ட வேறுபட்ட தன்மைகளையுடைய மரங்களைப் பயன்படுத்திய வள்ளுவரின் நுட்பம் நமக்கு மிகப் பெரிய உலகியல்புகளைத் தெள்ளிதின் அறிவுறுத்துகின்றது.

தனிப்பாடலொன்றும் மக்கட்பண்பினை மரங்கள் வாயி லாக உணர்த்துகின்றது.

'சொல்லாமலே பெரியர் சொல்லிச் சிறியர் செய்வர்
சொல்லியுஞ் செய்யார் கயவரே- நல்ல
குலாமாலை வேற்கண்ணுய் கூறுவமை நாடிற்
பலாமாவைப் பாதிரியைப் பார்'

சொல்லாமலே அரிய செயல்களைச் செய்யும் பெரியோர்களை யும், சொல்லிச் செய்யும் சிறியோரையும், சொல்லியுஞ் செய் யாத கயவரையும் முறையே பலா, மா, பாதிரி என்பவற் ருேடு ஒப்பிட்டிருக்கும் நயம் இன்புறத்தக்கது.

## தத்துவ, சமயக் கருத்துக்களும் தாவரங்களும்:-

அறக் கருத்துக்கள் மட்டுமன்றி தத்துவக் கருத்துக்களும் சமயக்கருத்துக்களும் தாவரங்கள் வாயிலாக உணர்த்தப் பெற்றுள்ளன. அறியாமையையும் அதனுல் விளையும் பல்வேறு இடர்களையும் வித்து, மரம், கவடு, பூ, காய், கனி என்பவற் ருேடு உருவகப் படுத்திக் கூறும் பாடலொன்று சீவக சிந்தா மணியில் அமைந்துள்ளது. 'பேதைமையென்னும் வித்திற் பிறந்து பின் வினைகளென்னும் வேதனை மரங்களுறி வேட்கை வேர் வீழ்த்து முற்றிக் காதலுங் களிப்புமென்னுங் கவடு விட்டவலம் பூத்து மாதுயரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்' (பதுமையாரிலம்பகம் - 224). இவ்வாறு திருத்தக்கத் தேவர் அறியாமை, தீவினை, பற்று, அவலம், மரணம் என்பவற்றை மரத்தின் உறுப்புக்களாக அமைக்க, சைவத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டு அதில் ஊறித் திளைத்த

ற்றாலக் குறவஞ்சி ஆசிரியர், பலாமரத்தின் உறுப்புக் களைத்தையும் சிவலிங்க சொரூபமாகக் காண்கிறார்.

'கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாஞ்
சதுர்வேதம் கிளைகள் ஈன்ற
களையெலாம் சிவலிங்கம் கனியெலாம்
சிவலிங்கம் கனிகள் ஈன்ற
சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம்
சிவலிங்க சொரூபம் ஆக
விளையமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த
சிவக்கொழுந்தை வேண்டுவோமே'

## கம்பனில் தாவரங்கள்:-

இவ்வாறு வெவ்வேறு கால இலக்கியப் போக்கிற்சேர்ப்ப் பயன்படுத்தப்பட்ட தாவரங்களுக்குக் கம்பர் தம் காவியத்தில் அளித்துள்ள இடம் யாது என்பதை ஆய்வதே இப் பொருட் கட்டுரையின் நோக்கம். 'தமிழனுக்குச் சாகாவரமளிக்க மகாகாவியம் செய்து மண்ணில் நிலைபெற்ற'வர் கம்பர். கவிச்சக்கரவர்த்தி கம்பனின் பெறலருங்காப்பியம் தமிழ்க் கவித்துவத்திற்குப் பேரெல்லையாய் விளங்குகின்றது. ஆற்றலும் அழகும்மிக்க அளந்தறியலாகாத தமிழ் மொழியின் கருவூலமாக இக்காப்பியம் திகழ்கின்றது. கம்பன்காவியம் சிறப்பதற்குத் துணைபுரிந்த கூறுகள் பல. அவற்றில், தள்ள இயலாத ஒரு கூறு தாவர உலகே என்று ஐயமின்றிக் கூறலாம்.

## கம்பனில் தாவரங்கள் பயிலும் நிலை:-

கம்பராமாயணம் முழுவதுமே தாவரங்களைப் பற்றிய செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன, எனினும் பால காண்டம், கிட்கிந்தா காண்டம் என்ற இருபகுதிகளில் தான் தாவரங்கள் பற்றிய செய்திகள் மிகுதியாக உள்ளன. பால

காண்டத்தில் தசரதமன்னனின் நாட்டுவளத்தையும், நகர்ச் சிறப்பையும் கம்பர் உணர்த்துகிறார். செழித்து வளர்ந்து பயனளிக்கும் மரஞ்செடிகொடிகள் தான் ஒரு நாட்டின் செல்வச் செழிப்பிற்குக் காரணமாக அமைகின்றன. எனவே நாட்டுவளத்தைக் கூறப் புகுந்த கம்பருக்குத் தாவரங்களைப் பற்றிக் கூற வேண்டியது இன்றியமையாததாயிற்று. மேலும் வரைக்காட்சிப்படலம், பூக்கொய்படலம் போன்ற பகுதிகளிலும் தாவரங்கள் பற்றி மிகுதியாகக் கூறப்பட்டுள்ளது கிட்கிந்தா காண்டத்தில் பம்பைப்படலம், கார்காலப்படலம் என்ற பகுதிகள் இராமனின் பிரிவுத்துயரைக் காட்டும் இடங்கள் வளம் கொழிக்கும் கார்காலம்; பல செடிகொடிகள் மலர்ந்து விளங்கும் பருவம்; இப்பருவம் சீதையைப்பிரிந்து வருந்தும் இராமன் துயரத்தை மிகுவித்தல் இயல்பு. இவற்றைக் கூறுமிடத்து, தாவரங்களைப் பற்றிய பல அழகிய வர்ணனைப் பகுதிகள் அமைந்துள்ளன. யுத்த காண்டத்தில்பெரும்பாலும் போருக்கு அடையாளமாக விளங்கும் மலர்களைப் பற்றியும், போர்க்கருவிகளாகப் பயன்பட்ட மரங்களைப் பற்றியுமே மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன. அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், சுந்தரகாண்டம் என்பவற்றிலும் ஓரளவுக்குத் தாவரங்கள் குறிக்கப்படுகின்றன.

## கம்பன் நெறி:-

கம்பர் தாவரங்களை எடுத்தாண்டுள்ள முறை சங்க இலக்கியத்தினின்று வேறுபட்டது. சங்கநூல்கள் தாவரங்களைப் பற்றிய பல அறிவியல் கருத்துக்களை நுணுக உணர்ந்து விளக்கியுள்ளன. தாவரங்களின் இயல்புகளை அவ்வாறே எடுத்துக் கூறும் பண்பைச் சங்கப் பாடல்களில் காண்கிறோம். ஆனால் கம்பன் பாடல்களில் இவ்வாறு அறிவியல் செய்திகள் மிகுதியாகக் கூறப்படவில்லை; பெரும்பாலும் உவமைகளாகவே தாவரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு கூறுவதனால், கம்பர் தாவரங்களைப் பற்றிய நுண்ணிய இயல்புகளை அறிந்திருக்கவில்லை என்பது கருத்தன்று. கம்பரும் தாவரங்களைப் பற்றிய பல அரிய செய்திகளையும் உணர்ந்துள்ளார்.

ஆனால் அச்செய்திகளை அவ்வாறே தம் காவியத்தில் கூற வில்லை. அவற்றைப் பல அரிய உவமைகளாக அமைத்து விளக்கியுள்ளார். சுருங்கக் கூறின், தாவரவியல் நுட்பங்களை இயல்பாக எடுத்துரைத்துப் புலப்படுத்தும் வருணனைகளைத் தருவது சங்காலப் பண்பு, அவற்றை உவமையாகக் கூறி குறிப்பாக உணர்த்துவது கம்பன் பண்பு.

## உவமை வாயிலாக அறிவியற் கருத்துக்கள்:-

இவ்வாறு தாவரங்களின் சில குறிப்பிட்ட இயல்புகளை உணர்த்த அவற்றை உவமையாக அமைத்த நிலைக்குக் காட்டாக ஓரிரு இடங்களைச் சுட்டலாம். பொதுவாகக் கடற்கரைப் பகுதிகளில் வளரும் தாழை போன்ற தாவரங்கள் மிகுதியான மகரந்தப் பொடிகளைத் தோற்றுவிக்கின்றன. ஆனால் காற்றின் மூலம் பெரும்பான்மையான மகரந்தப் பொடிகளும் வீணாக, ஒரு சில மட்டுமே பெண்பூவில் உள்ள சூல்முடியில் வீழ்ந்து கருவுறும் வாய்ப்பை ஏற்படுத்துகின்றன. இவ்வாறு, தாழை மலர்கள் தோற்றுவிக்கும் பல்லாயிரக் கணக்கான மகரந்தப் பொடிகளின் ஒரு சில தவிர ஏனையவை பயனற்றுப்போகும் நிலையைக் கம்பர் நன்கு உணர்ந்திருக்கிறார். தந்தை, உறவை ஒழித்திட்ட காரணத்தால் தந்தைக்குச் செய்ய வேண்டிய நீர்க்கடன்களைக் கூட செய்ய இயலாதவாறு பயனற்று நிற்கும் பரதனின் நிலைக்கு உவமையாக, தாழையின் மகரந்தப் பொடிகளைக் கூறியிருக்கும் திறன் அவருடைய அறிவியல் நுட்பத்தை வலியுறுத்துகின்றது, (அயோ : 9 : 138)

பிறிதோரிடத்தில், யாதொன்றும் விளங்காத தன்மையனான இறைவனுக்கு ஒப்பாகக் காந்தட்கிழங்கு குறிக்கப்படுகிறது (யுத் : 2197). காந்தளின் கிழங்கு உரிக்க உரிக்க தோடாயிருக்குமேயன்றி உள்ளே ஒன்றும் இராது; அது போன்று இறைவனும் அணுக அணுக ஒன்றுமே விளங்காத புதிராகக் காட்சியளிக்கின்றான். தாவரங்களைப் பற்றிய பல நுணுகிய கருத்துகளையும் கம்பர் அறிந்திருந்தார் என்பதற்குச் சான்றாக விளங்குகின்றன இவ்வுவமைப்பகுதிகள்.

## உவமையில் பயின்று வரும் ஒரு மலர்:-

கம்பன் காவியத்தில் பல தாவரங்கள் குறிக்கப்பட்ட போதும் தாமரைக்கே தலையாய இடம் அளிக்கப்பெற்றுள் ளது. ஐந்நூறுக்கு மேற்பட்ட இடங்களில் தாமரை பேசப் படுகிறது. காவியத்தில் பெரும்பான்மையான பாத்திரங்களுக் கும் தாமரை உவமையாக வந்துள்ளது. தாமரை உவமை யாகாத உறுப்புக்களே இல்லை எனலாம். இராமனின் முகம், கண், கை, பாதம், உள்ளம் ஆகிய அனைத்திற்குமே தாமரை உவமையாகக் கூறப்படுகிறது. இராமனைத் 'தாமரைக் காடு' என்றே மொழிகிறார் கம்பர் (பால : 5 : 12).

## குறியீடு:-

தாமரை இராமனைக் (திருமால்) குறிக்கும் குறியீடா கவே அமையும் நிலையைக் காண்கிறோம். தமிழிலக்கியங்கள் பலவற்றில் இந்நிலை அமைந்துள்ளது. திருமாலின் கண்ணிற்கு உவமை கூறப் போந்த ஆழ்வார்கள் தாமரைமலரையே உவ மையாகக் கூறியிருப்பதை திவ்வியப் பிரபந்தப் பாடல்களில் காணலாம். இவ்வுவமை வண்ணமும் வடிவமும் பற்றி மட்டும் அமைந்ததன்று. பயன் பற்றி வந்த உவமையாகவும் இது அமைகிறது. தாமரை மலரில் தேன் நிறைந்து இருப்பதால் அவற்றை நாடி வண்டுகள் வந்து மொய்ப்பது இயல்பே. இறை வனின் கண்களாகிய தாமரை மலர்கள் அருளாகிய தேனைச் சுரக்கின்றமையால் அவ்வருள்தேனை உண்ணும் பொருட்டு இறையடியார்களும் இறைவனை நாடி அலைகின்றனர். இவ் வாறு இறைவனின் கண்களைத் தாமரை மலருடன் ஒப்பிட் டிருப்பது சாலப் பொருந்தும். சிலப்பதிகாரத்தில் எவ்வாறு 'மாமலர்நெடுங்கண்' என்பது மாதவியின் கண்களைக் குறிக் கும் குறியீடாக அமைந்ததோ அதுபோன்று 'தாமரைக் கண்' என்பது திருமாலின் கண்களைக் குறிக்கும் குறியீடாகத் தமி ழிலக்கியங்களில், குறிப்பாகக் கம்பராமாயணத்தில் அமைவ தைக் காண்கிறோம்.

## கடவுளரும் தாவரங்களும்:-

உவமை காரணமாகத் தாமரை மலர் திருமாலின் கண்களைக் குறிக்கும் குறியீடாக அமைந்த நிலையைக் கண்டோம். இதுமட்டுமன்றி ஆகுபெயர் நிலையிலும் குறியீடு அமையலாம். இந்த அடிப்படையில் தாமரை நான்முகனையும், திருமகளையும் துளசி திருமாலையும், கரந்தை, ஊமத்தை, எருக்கு, கூவிளை, கொன்றை என்பவை சிவனையும் குறிக்கும் குறியீடுகளாக அமைகின்றன.

## தாவரங்கள் - பறவைகளின் உறைவிடங்கள்:-

பறவைகள் உறையும் உறைவிடங்களாகச் சில தாவரங்கள் குறிக்கப்படுகின்றன. அன்னம் தாமரை மலரிலும் (பால : 2 : 33), நாரை தென்னை மரத்திலும் (கிட் : 913), அன்றில் பனைமரத்திலும் (பால : 21 : 5) உறைகின்றன. இவற்றையும் ஓரளவுக்குக் குறியீட்டு நிலையில் அமைக்கலாம்.

## காப்பியத் தொடர்பு:-

இயற்கையாக நிகழும் பல நிகழ்ச்சிகளையும் காப்பியத்தோடு தொடர்பு படுத்திப் பேசும் தன்மை கம்பரிடம் மிகுதியாக உள்ளது. காலையில் தாமரை மலர்வது இயல்பு; ஆனால் கம்பருக்கு இது இயல்பாக மலர்ந்த தாமரையாகத் தெரியவில்லை. இராமனின் முடிசூட்டு விழாவைக் காணுவதற்காக மலர்ந்த மகளிர் முகம் போலத் தோன்றுகிறது (அயோ:3:62) ஆம்பல் மலர்கள் குவிந்திருப்பது கண்டு காம்புயர் கானம் செல்லும் இராமன் வறுமை நோக்கி அவை வாடிக்குழைந்தன என்றுரைக்கிறார் அவர். இவ்மாறு அஃறிணைப் பொருட்களும் மனிதனின் இன்பதுன்பங்களில் பங்குபெறும் நிலையைக் காண்கிறோம்.

## ஓர் உளவியல் நோக்கு:-

கிடைப்பதற்கு எளிதான ஒரு பொருளுக்கு எப்போதுமே மிகுதியான சிறப்பு இருப்பதில்லை. அதே பொருள்

நமக்கு கிடைப்பதற்கரிதாகும் போது இயல்பாகவே அதன் சிறப்பு உயர்வதையும் காண்கிறோம். நம் வீட்டுத் தோட்டத்தில் மலர்ந்திருக்கும் முல்லையின் சிறப்பை நாம் உணர்வதில்லை. அதே முல்லை நமக்குக் கிடைக்காத நிலையில் இன்னொரு வீட்டில் மலர்ந்திருக்கும்போது அதன் சிறப்பு பன்மடங்கு உயர்ந்ததாக எண்ணுகிறோம். இங்ஙனம் ஒருபொருள் நம்மை விட்டகலும்போது தான் அப்பொருளின் அருமையை உணர்கிறோம். இது மனித உள்ளத்தின் இயல்பு. இந்த உளவியலைக் கம்பர் நன்கு உணர்ந்து அதற்கேற்பப் பல இடங்களையும் அமைத்துள்ளார். காட்டாக இரு இடங்களைக் குறிக்கலாம். சீதை உடனிருந்தபோது அவளழகை வியந்து பாராட்டி, பல உயர்ந்த பொருட்களையும் அவளுறுப்புக்களுக்கு உவமையாகக் கூறினான் இராமன். அவளைப் பிரிந்து விரகதாபத்தால் வருந்தும் வேளையில், அன்று உவமையான அதே பொருட்கள் இன்று உவமையாகா என்று மறுத்துரைக்கிறான். உடனுறைந்தபோது பிராட்டியின் கைகளுக்குக் காந்தள் மலரையும் (அயோ : 3 : 29) வாய்க்குத் தொண்டைக் கனியையும் (ஆர : 1127) ஒப்பிட்ட இராமன், அவளைப் பிரிந்த வேளையில் அவையிரண்டுமே அவளழகுக்கு ஒப்பாகா என்றுரைக்கிறான் (கிட் : 764, 768). உளவியல் பற்றிக் கம்பர் பெற்றிருந்த புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன இப்பகுதிகள்.

## முரண் :—

ஒரே பொருளை வைத்துக் கொண்டு இன்பத்தின் உயர்வையும் துன்பத்தின் பேரெல்லையையும் காட்டுகிறார் கம்பர். அகில் மரத்திலிருந்து எடுக்கப்படும் அகில் நறுமணமூட்டப் பயன்படுத்தப்பட்டது என்பது யாவரும் அறிந்ததே. அந்த அகிற்புகை எங்கும் பரவி நிற்பதைக் கூறி நாட்டின் இன்ப நிலையை (பால : 2 : 41) உணர்த்திய ஆசிரியர், பின்னர் அதே அகிற் புகையை இழந்து மாளிகைகள் துயரே உருவாக நிற்கும் காட்சியையும் காட்டுகிறார் (அயோ : 9 : 25)

## வருணனை:-

கம்பர் தாவரங்களைப் பெரும்பாலும் உவமையாகவே பயன்படுத்தியுள்ளார் என்பது முன்பு கூறப்பட்டது. இது மட்டுமன்றி, பல அழகிய வர்ணனைப்பகுதிகளையும் அமைத்துத் தந்துள்ளார் ஆசிரியர். கார்காலம் வந்தணைந்தது. எங்கும் செங்காந்தள் மலர்கள் மலர்ந்து கிடக்கின்றன. அவற்றில் அரும்புகளும் வண்டுகளும் நவமணிகள் போல மொய்க்கின்றன. இங்ஙனம் வண்டுகள் மொய்க்கும்படி செங்காந்தள் மலர்கள் மலர்ந்து விளங்குவது, நிலமடந்தை கார்ப்பருவ எழிலைக் கண்ணுற்று 'வசந்தகாலத்தையும் வெற்றி கொண்டது கார்ப்பருவம்' என்று வியந்து கைமறித்தாற் போன்றிருக்கின்றதாம் (கிட் : 459). இத்தகைய பல அழகிய பாடல்கள் இடையிடையே ஒளிவிட்டுக் காவியத்தைக் கவினுறச் செய்கின்றன.

## பொருட்கட்டுரை பற்றிச் சில சொற்கள் :-

இப் பொருட் கட்டுரைக்காக முதல் இரு காண்டங்களுக்குப் (பாலகாண்டம், அயோத்தியா காண்டம்) வை. மு கோ உரையுடன் கூடிய பதிப்பையும், ஆரணிய காண்டம் முதல் யுத்த காண்டம் ஈறாக உள்ள நான்கு காண்டங்களுக்கும் டாக்டர் உ. வே. சா பதிப்பையும் பயன்படுத்தியுள்ளேன். இந்த இரு பதிப்புக்களின் அடிப்படையிலேயே பாடல் எண்களும் தரப்பட்டுள்ளன. அவற்றில் முதல் எண் படலத்தையும் இரண்டாம் எண் பாடலையும் குறிக்கின்றது. ஏனைய காண்டங்களுக்கு ஒரு எண்ணே தரப்பட்டுள்ளது. அவ்வெண் பாடலைக் குறிக்கின்றது. கம்பனில் தாவரங்கள் பயிலும் இடங்கள் பட்டியலாகப் பின்பு தரப்பட்டுள்ளது.

## தாவரங்களின் பாகுபாடு:-

கம்பராமாயணத்தில் கூறப்பட்டுள்ள தாவரங்களை அறிவியல் முறைப்படி வகை செய்துள்ளேன். தாவரவியலார் தாவரங்களைப் பூக்கும் தாவரங்கள், பூவாத தாவரங்கள்

என்று இரு பெரும் பிரிவுகளாகப் பகுப்பர். பூக்கும் தாவரங்கள் மூடுவிதைத் தாவரங்கள், மூடாவிதைத் தாவரங்கள் என இருவகைப்படும். மூடாவிதைத் தாவரங்கள் என்ற பகுப்பில் அடங்கும் ஒரு மரம் மட்டுமே கம்பராமாயணத்தில் குறிக்கப்பட்டுள்ளது. மூடுவிதைத் தாவரங்களை ஒற்றை விதையிலைத் தாவரங்கள், இரட்டை விதையிலைத் தாவரங்கள் என்று இரண்டாகப் பகுப்பர். கம்பர் 76 இரட்டை விதையிலைத் தாவரங்களையும், 21 ஒற்றை விதையிலைத் தாவரங்களையும் கூறியுள்ளார். பூவாத தாவரங்கள் என்ற பகுப்பில் பாசி, காளான் என்ற இரண்டும் சுட்டப்படுகின்றன.

தொல்காப்பிய மரபியல் தாவரங்களைப் புல்லென்றும், மரமென்றும் இரண்டாகப் பகுக்கின்றது.

'புறக்காழனவே புல்லெனப் படுமே' (தொல்:மரபியல்;86)

அக்காழனவே மரமெனப்படுமே' (தொல் : மரபியல் ; 87)

இங்கு, புறக்காழன என்பது ஒற்றை விதையிலைத் தாவரங்களையும் அகக்காழன என்பது இரட்டை விதைத் தாவரங்களையும் குறித்தது எனலாம்.

## பெயரிட்டழைக்கும் முறை

தாவரங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் தாவரவியற் பெயர்கள் லத்தீன் மொழியின. ஒவ்வொரு இனப்பெயரிலும் இரண்டு (Binomial) அல்லது மூன்று (Trinomial) பகுதிகள் உள. பெயரின் முதற்பகுதி ஓர் இனம் இன்ன சாதியைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் சாதிப்பெயராகும். இரண்டாம் பகுதி அக்குறித்த இனத்திற்கே சிறப்பான பெயர். இனத்தின் உட்பிரிவையோ இனவகையையோ குறிப்பதற்குச் சில வேளைகளில் மூன்றும் பகுதியாக ஒரு பெயரைச் சேர்ப்பதுண்டு. இவ்வாறு பெயரிடும் முறையை அமைத்தவர் சுவீடன் நாட்டவரான கார்ல் லின்னேயஸ் (Carolus Linnaus- *1707- 1778*) என்ற விஞ்ஞானி.

## பொருட் கட்டுரையில் பயன்படுத்தியுள்ள பெயர்கள்

கட்டுரைத் தலைப்புகளாக, கம்பர் கூறும் பெயர்களே தரப்பட்டுள்ளன. சில தாவரங்களுக்குக் கம்பன் கூறும் பெயர்கள் இன்று வழக்கிலில்லை. அத்தகையவற்றின் தற்போதைய பெயர் அடைப்புக் குறியில் தரப்பட்டுள்ளன. கட்டுரைத் தலைப்பில் அமைந்துள்ள பெயர்கள் அகரவரிசைப் படுத்தப் பட்டு அவற்றிற்குரிய ஆங்கிலப் பெயர், தாவரவியற்பெயர் என்பவற்றுடன் பின்னால் தரப்பட்டுள்ளன. மேலும் படிப் போருக்கு எளிமை கருதி மற்றுமொரு பட்டியல் அமைந் துள்ளது. இதில், நூலில் இத்தாவரங்கள் பற்றிய கட்டுரை கள் இடம் பெறும் பக்கங்கள் குறிக்கப்பட்டுள்ளன. கம்பர் சில தாவரங்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்களைப் பயன் படுத்தியுள்ளார். இப்பெயர்கள் அகரவரிசையில், அவ்வவ் தாவரங்களை அடுத்து அமைக்கப் பெற்றுள்ளன.

## தாவரங்கள் இல்லையெனில்?

காவியத்தின் கதைப்போக்கிற்குத் தாவரங்கள் பெரு மளவில் துணைபுரிந்தன என்று கூறுவதற்கில்லை. எனினும் காவியத்தைக் கவின் பெறச் செய்வன இத்தாவரங்களே. தாவரங்கள் இல்லையெனில் இவ்வுலகம் வறண்ட பாலையாகக் காட்சியளிக்கும் என்று முன்பு கூறப்பட்டது. கம்பன் காவி யத்திலிருந்து தாவரங்கள் அகற்றப்பட்டாலும் இதேநிலை தான் ஏற்படும். மரஞ்செடி கொடிகளைப் பற்றிய கவினுறு காட்சிகள் இல்லையெனில் திலகமிழந்த நுதல் போலவும், மலரி ழந்த கூந்தல் போலவும், முறுவலிழந்த வாய்போலவும் காப் பியம் தன் அழகை இழக்கும் என்பதில் எள்ளளவும் ஐய மில்லை.

---

# கம்பனில் தாவரங்கள்

தாவர உலகத்தை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். அவை;—

1. பூக்கும் தாவரங்கள் (Phanerogams)
2. பூவாத தாவரங்கள் (Cryptogams)

## பூக்கும் தாவரங்கள் (Phanerogams)

மலர்களையும் விதைகளையும் தோற்றுவிக்கும் தாவரங்கள் (Flowering and seed bearing plants) இப்பகுப்புக்குள் அடங்கும். தாவர உலகத்தின் பெரும் பிரிவாக இது அமைகிறது. உலகிலுள்ள பெரும்பான்மையான தாவரங்களும் இப் பிரிவுக்குள் அடங்கும். பூக்கும் தாவரங்களை இரு பிரிவுகளாகப் பிரிப்பர். அவை:—

1. மூடுவிதைத் தாவரங்கள் (Angiosperms)
2. மூடாவிதைத் தாவரங்கள் (Gymnosperms)

## மூடுவிதைத் தாவரங்கள் (Angiosperms)

இப்பகுப்பிலுள்ள தாவரங்களில், விதைகள் கனியினுல் மூடப்பட்டிருக்கும். முழுநிலை வளர்ச்சி பெற்ற தாவரங்களாக இவை கருதப்படுகின்றன. பூக்கும் தாவரங்களுள், இவை உயர்ந்த இடத்தைப் பெறுகின்றன. உலகம் முழுவதையும் பரந்து போர்த்திருக்கும் மரஞ்செடிகொடிகள் இப்பிரிவைச் சேர்ந்தவையே. மூடுவிதைத் தாவரங்களை இரண்டாகப் பகுப்பர்: அவை:—

1. இரட்டை விதையிலைத் தாவரங்கள் (Dicotyledons)
2. ஒற்றை விதையிலைத் தாவரங்கள் (Monocotyledons)

# இரட்டை விதையிலைத் தாவரத்திற்கும் ஒற்றைவிதையிலைத் தாவரத்திற்கும் இடையே உள்ள வேறுபாடுகள்

1. இரட்டைவிதையிலைத் தாவரங்களில் இரு விதையிலைகள் உள. ஒற்றை விதையிலைத் தாவரங்களில் விதையிலை ஒன்றே.

2. இரட்டை விதையிலைத் தாவரங்களில் விதை முளைக்கும் போது முளைவேரானது ஆணிவேர் அல்லது தாய்வேராக வளர்ந்து, பூமிக்குள் நேரே கீழ் நோக்கி வளரும். அதிலிருந்து பக்கவேர்கள் கிளைக்கும். ஒற்றை விதையிலைத் தாவரங்களில் முளைவேர் தாய்வேராக வளர்வதில்லை. அது சிறிது வளர்ந்து, பிறகு குன்றிப் பட்டுப் போகும். தண்டின் அடியிலிருந்து பலவேர்கள் புதியனவாகத் தோன்றி நார் போல வளரும்.

3. இரட்டை விதையிலைத் தாவரங்களில் தண்டு, ஆண்டு தோறும் ஒழுங்காகப் பருத்துக் கொண்டே போகும் எனவே தண்டின் விட்டம் பெரிதாகும். ஒற்றைவிதையிலைத் தாவரங்களில் தண்டின் விட்டம் பெரிதாகாமல் சற்றேறக் குறைய நெடுக ஒரே அளவாக இருக்கும்.

4. இரட்டை விதையிலைத் தாவரங்களில், இலைகளிலுள்ள நரம்புகள் வலைபோல அமைந்திருக்கும் (reticulate) ஒற்றை விதையிலைத் தாவரங்களில், இலைகளிலுள்ள நரம்புகள் புல் அல்லது வாழையில் உள்ளது போல ஒரு போகாக (Parallel) அமைந்திருக்கும்.

5. இரட்டை விதையிலைத் தாவரங்களில் பூவின் உறுப்புக்கள், வட்டத்திற்கு (whorl) ஐந்தாக அமைந்திருக்கின்றன. அல்லது 10, 15 என்று ஐந்தின் மடங்குகளாக இருக்கின்றன. வட்டத்திற்கு நான்கு உறுப்புக்களாக அமைபவையும் உண்டு. வட்டத்திற்கு மூன்றாக இருப்பது ஒற்றை விதையிலைத் தாவரங்களின் சிறப்பான பண்பாகும்.

---

# அகில்

மிகப் பழங்காலந் தொட்டு தமிழ் மக்கள் அகிற்புகை, அகிற்கூட்டு என்பவற்றை மிக விரும்பிப் பயன்படுத்தினர். எகிப்து, அரேபியா, பர்மா முதலிய நாடுகளிலும் இதனை விரும்பிப் பயன்படுத்தினர்.

அகில் தோன்றும் மரம் 60-70 அடி உயரமும், 5-8 அடி சுற்றளவுமுடையது. இந்தியாவின் வடகிழக்குப் பாகங்களில், சிறப்பாக அஸ்ஸாமிலுள்ள காசி, காரோ, நாகா முதலிய மலைக்காடுகளில் இம்மரம் வளர்கிறது. இந்த மரத்தில் பிசின் வடிவதில்லை. ஆயினும் சற்று முதிர்ந்த மரத்திற்குள் அங் கங்கே சில இடங்கள் கறுப்பாக இருக்கும். அதில் ஒரு வித எண்ணெய்ப் பிசின் இருக்கிறது. அதுவே அகில். அகில் பற்றி யிருக்கும் மரம் நோயுற்றது போலத் தோன்றும். இந்தப் பிசின் சாதாரணமாகக் கிளைகள் தோன்றும் இடத்தில் உண் டாகும். ஒரு வகையான காளான் இந்த மரத்தில் பற்றிக் கொண்டு வளர்வதால் தான் பிசின் உண்டாகிறது. இவ்வாறு காளான் பற்றியிருக்கும் மரத்துண்டை நல்ல மரங்களில், முளை போல உள்ளே செல்லும்படி அடித்தால், இந்தக் காளான் வளர்ந்து பரவுவதால் அம்மரத்திலும் அகில் உண்டாகும் அகில் தரும் மரங்களில் சில இனங்களுண்டு. இந்தியாவிலுள்ள முதன்மையான மரம் Thymeliaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Aquilaria Agallocha என்னும் இனமாகும்.

கம்பர், அகில் பற்றிப் பல இடங்களிலும் குறிப்பிடு கிறார். இம்மரம் காடுகளில் வளரக் கூடியது என்பதை

*'சுரத்திடையகில்'* (பால : 10 : 10)

என்ற அடி சுட்டுகிறது. மலைக்காடுகளில் பிறக்கும் தன்மை யைப் பட்டினப்பாலை ஆசிரியரும்,

'குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்' (பட்டினப் பாலை : 188)

என்று கூறுகிறார். அகில் இருண்ட நிறமுடையது என்பதைக் 'காரகில்' ( பால : 3 : 36 ) என்று கூறுவதிலிருந்தும், அது வயிரத்தினையுடையது என்பதை 'இருண்ட காழகில்' (கிட் : 231) என்று கூறுவதிலிருந்தும் உணரமுடிகிறது.

அகிலை மக்கள் பல முறைகளில் பயன்படுத்தினர். அகிற் கட்டைகளை நெருப்பில் இட்டால் நறுமணமுள்ள புகை தோன்றும். இந்நறும் புகையை மகளிர் தம் கூந்தலுக்கு மண மூட்டப் பயன்படுத்தினர். சங்க இலக்கியங்களில் அகிலூட் டும் வழக்கம் பல இடங்களிலும் கூறப்படுகின்றது. குறிஞ்சி பாடிய கபிலர் மகளிர் கூந்தலுக்குப் புகையூட்டும் காட்சியை மிக அழகாக வர்ணிக்கிறார்.

'காழகில் அம்புகை கொளீஇ யாழிசை
அணிமிகு வரிமிஞிறார்ப்பத் தேங்கலந்து
மணிநிறங் கொண்டமாயிருங் குஞ்சியின்
...............................................................
நலம் பெறு சென்னி.... ........................ /

(குறிஞ்சிப் : 110-113)

கம்பரும் அகிலூட்டும் வழக்கத்தைப் பல இடங்களிலும் குறிப் பிட்டுச் செல்கிறார்.

'அகிலாவி புலர்த்து நல்லார்' (பால : 14 : 75)
'அகில்புனை குழல் மாது (அயோ : 7 : 11)

அகிற்கட்டைகளை ஓமம் வளர்ப்பதற்காக முனிவர்கள் பயன்படுத்தினர்.

'சந்தினடையிற் படலை வேதிகை தடந்தோ
றந்தியிடகிற் புகை ........ ..............'

(கிட் : 507)

இறந்த உடலை எரிப்பதற்காகவும் அகிற்கட்டைகள் பயன்படுத்தப்பட்டன. இராமனும் இலக்குவனும் சடாயுவிற்கு ஈமச்சடங்குகள் புரிந்ததையும் (ஆர : 1025), விபீடணன் இராவணனுக்கு ஈமச்சடங்குகள் செய்ததையும் (யுத் : 3888) கூறுமிடத்தில் கம்பர் இச் செய்தியைத் தருகிறார்.

'இந்தனமாக வேண்டுங்
காரகி லீட்டத் தோடும்' (ஆர : 1025)

அகிற்கட்டைத் தேய்வினலாகிய குழம்பையும் மக்கள் பயன்படுத்தினர்.

'செறியகிற் றேய்வை' (பால : 18 ; 13)

அகிற்கட்டையை எரிப்பதனல் தோன்றும் நறும்புகை மேகத்தைப் போன்று காட்சியளிக்கின்றது கம்பருக்கு.

'மஞ்செ(ன) அகிற்புகை வழங்கு மாளிகை',
(அயோ : 4 : 200)

இத்தகைய அழகிய அகிற்புகையை மயிற்பீலிக்கு உவமையாகக் கூறியிருப்பது உற்று நோக்கத்தக்கது.

'அகிலிடு தூப மன்ன வாய்மயிற் பீலி
(அயோ : 11 : 58)

நாட்டு வளத்தினைக் குறிப்பதற்காகக் கம்பர் கையாண்ட பொருட்களில் அகிற்புகையும் ஒன்று. கோசல நாட்டில் வேறு பல்வகையான புகைகளுடன் அகிற்புகையும் உயர்ந்தெழுந்து மேகத்துடன் கலந்து அந்நாட்டுச் செழிப்பினை நமக்குப் பறைசாற்றுகின்றது.

'அகிலிடும் புகை யட்டி லிடும்புகை
..................................................
முகிலின் விம்மி முயங்கின வெங்கணும்'
(பால : 2 : 41)

அயோத்தி நகர மகளிர் எழுப்பிய அகிற்புகையை யுண்ட மேகங்கள் படிந்த மாத்திரத்திலேயே புலால் நாற்ற முள்ள கடலும் அந்தத் தீநாற்றம் நீங்கி அவ்வகிற்புகையின் மணம் பெற்று வீசும் என்ருல் அம்மேகம் சொரிந்த மழைத் தாரையும் மணங்கமழும் என்று சொல்லவும் வேண்டுமோ என்ற விஞவையெழுப்பி அந்நகர மக்களின் செல்வச் சிறப் பினேயும், அவர்கள் தம் இன்பவாழ்க்கையையும் நமக்கு காட்டி விடுகிருர் கம்பர்.

'ஆய்ந்தமே கலேயவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகையுண்ட மேகம் போய்த்
தோய்ந்தமாக் கடனறுந் தூப நாறுமேல்
மாய்ந்ததா ரையினிலே பகர வேண்டுமோ'

(பால ; 3 ; 42)

இவ்வாறு நாட்டுவளங் கூறுமிடத்து அகிற்புகையைச் சுட்டிச் சென்ற கம்பர், மஞ்சென அகிற்புகை வழங்கும் மாளி கைகள் அப்புகையை இழந்து துயரே உருவாக நிற்கும் காட் சியை இரு இடங்களில் காட்டுகிருர். தந்தை சொல்லேக் காக்கும் பொருட்டு அரியணையைத் துறந்து, தம்பியுடனும் தேவியுடனும் இராமன் வனம் நோக்கிச் செல்கிருன். முடி புனேயத் தேரொடு உலாப் போனவன் அதனேப் பெருமல் மரவுரி தரித்து வீதி வழியே நடந்து வருவதைக் கண்ட அயோத்தி நகரமக்கள் சொல்லொண்ணுத் துயரத்தில் மூழ்கி நிற்கின்றனர். இந்நிலையில் அகிலுக்கு வேலேயுண்டோ. எனவே,

'.......................... அகிற்புகை
நெட்டிலு மிழந்தன ..........' (அயோ ; 9 ; 25)

இவ்வாறு நாட்டை ஆளுதற்குரிய இராமன் கானகம் சென்று

விட்டான். அத்துயரத்தைத் தாளாத மன்னனும் உயிர் நீத்தான். இத்தகு நிலையில் அந்நாடு பொலிவிழந்து காணப் பட்டது. நாடே பொலிவிழந்திருக்கையில் மாளிகைகள் அகிற் புகையை இழப்பது இயல்புதானே.

'... ................ .........நாறகிற்
புகையிழந்தன மாளிகை......' (அயோ: 9: 25)

இவ்வாறு இன்பத்தின் உயர்வைக் காட்டப் பயன்படுத்திய அகிலை வைத்தே, துன்பத்தின் உச்சநிலையையும் காட்டியிருக்கும் திறன் போற்றற்குரியதே.

முன்பு செங்காலன்னம் வளர்த்திய மழலைப்பிள்ளை எருமை பாலூட்ட, தேரை தாலாட்ட இனிது துயின்றது. இப்போதோ கார்காலம் வந்து விட்டது. பெருமழையில் அன்னங்கள் வருந்துகின்றன. இவ்வாறு வருந்தும் அன்னங்களின் குளிரை நீக்கி அவற்றின் வருத்தத்தை அகற்றுகின்றது அகிற்புகை. ஓமம் வளர்ப்பதற்காக முனிவர்களால் எரிக்கப்பட்ட அகிற்கட்டைகளின் புகையில் புகுந்து அன்னங்கள் குளிர்காயும் காட்சியைக் கம்பர் மிக அழகாக வர்ணிக்கிறார்.

'சந்தினடையிற் படலை வேதிகை தடந்தோ
றந்தி யிடகிற் புகை நுழைந்த குளிரன்னம்
(கிட்: 507)

நாட்டுவளத்தைக் காட்ட அகிற்புகை முன்பு கூறப்பட்டது. நாடுவளம் குலையும் போதும் அகில் எரிவதைக் காண்கிறோம். அனுமனின் வாலிலிட்ட கொடிய நெருப்பினால் இலங்கையெங்கும் எரியூட்டப்படுகிறது. இந்நிலையில் அகில், சந்தனம் முதலிய மரங்களும் தங்கள் மணம் எங்கும் பரவும்படியாக எரிந்தன. அகில் எரிந்தது. இவ்விடத்து இலங்கையின் அழிவைச் சுட்டினும், நறுமணம் பரப்பி எழுந்த அகிற்புகை. அறம் விரைவில் மறத்தை வீழ்த்தும் என்பதைக் குறிப்பாக உணர்த்துத் தவறவில்லை என்பது சுட்டற்குரியது. (சுந்: 1209)

# அசோகு

இது Leguminosae என்னும் குடும்பத்தில் caesalpincae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்தது இம்மரம் 20-30 அடி உயரம் வரை வளரும்: இம்மரத்தில் ஆண்டு முழுதுமே மலர் கள் மலர்ந்தாலும் பெப்ருவரி (February), மே (May) என்ற மாதங்களுக்கிடையில் தான் மலர்கள் மிகுதியாக மலர்ந்து மரத்தை அழகுபடுத்துகின்றன. இம்மரத்தைத் தோட்டங் களில் அழகுக்காக வளர்க்கிறார்கள். Saraca Indica என்பது இதன் பெயர். கம்பராமாயணத்தில் இம்மரம் அசோகம், பிண்டி என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றது.

'நாண் மலரசோகம்' (பால; 9: 64)

'பிண்டியந் தளிர்' (பால: 14. 54)

சங்க இலக்கியங்களில் இம்மரம் பிண்டி, செயலை என்றபெயர் களால் அழைக்கப்பட்டது.

'பிண்டி அவிழ்ந்த கா' (மதுரைக்: 500)

'சுனைசூழ் சினையெலாம் செயலை மலர (பரி: 15: 31)

பல மலர்கள் ஒன்று சேர்ந்து அடர்த்தியான கொத்துக் களாக மலரும்' இத்தகு பூங் கொத்துக்கள் எல்லாக் கிளை களிலும் செறிந்து காணப்படுவதால் மரங்கள் கவர்ச்சியான தோற்றத்துடன் விளங்கும். இவ்வாறு மலர்கள் செறிந்து விளங்குவதைக் கம்பர்,

'..... செறியித ழினசோகம்' (அயோ: 7; 8)

என்ற தொடரால் விளக்குகிறார். சினை தோறும் மலர்கள் பூத் துக் குலுங்கும் அழகை,

'சுனைசூழ் சினையெலாம் செயலை மலர '(பரி; 15: 31)

என்று பரிபாடல் பகர்கின்றது.

பொதுவாக மலர்களில் புற இதழ்களை (Sepals) நோக்க அக இதழ்களே (petals) அழகிய நிறம் பெற்று விளங்கும் அசோக மலர்களில் அக இதழ்கள் இல்லை. எனவே கவர்ச்சி யை அளிக்கும் பொருட்டு, புற இதழ்களே அழகிய நிறம் பெற்று அக இதழ்கள் போன்ற தோற்றத்தினைத் தருகின் றன. இப்புற இதழ்கள் முதலில் மஞ்சள் நிறமாக இருந்து இறுதியில் சிவப்பாக மாறும் (yellow when young, they become orange, then crimson with age and from the effect of the sun's rays) இவ்வாறு மஞ்சளும் சிவப்பும் கலந்து விளங்கும் அசோக மலர்களை, நெருப்புச் சுவாலைக்கு ஒப்பா கக் கூறியிருப்பது மிகப் பொருத்தமான உவமையாகும். அசோக மலரின் இடையில் செருந்திமலர் தங்கியிருக்க வண்டுகள் அவற்றின் மீது மொய்க்கும் காட்சி, பொன்னை மூடிவைத்து ஊதுகின்ற கரியில் மேலெழுந்து எரிகின்ற தீ போன்று இருக்கின்றது என்று கூறியிருப்பது, கம்பர் இயற் கையில் எத்துணை ஈடுபாடு கொண்டிருந்தார். என்பதைச் சுட்டுகிறது:

'செருந்தியின் மலர்தாங்குஞ் செறியித ழினசோகம்
பொருந்தின களிவண்டிற் பொலிவன பொன்னூதும்
இருந்தையி னெழுதீயொத் தெழுவதொரியல் காணாய்'

(அயோ: 7; 8)

அசோக மரங்கள் இத்தகு தீபோன்ற மலர்களைத் தாங்கியிருப்பதை நோக்கி அவை விளக்கேந்தி நிற்பதாகக் கூறுகிறார் கம்பர். விதேக நாட்டுச் சோலைகளில் மயில்கள் நடனமாடுகின்றன. அந்நடனத்திற்கேற்ப வண்டுகள் பாட, மதகுகள் மத்தளம் போன்று ஒலிக்கின்றன. எத்தகு சிறப் பான நடனமானாலும் ஒளியில்லையெனில் அதைக் கண்டு களிக்க இயலுமோ? இதையுணர்ந்தது போன்று அசோக மரங்கள் மலர்களாகிய விளக்குகளைத் தாங்கி நடனம் சிறக்க உதவு கின்றன. இவ்வாறு அசோக மரங்களை விளக்கேந்தும்

மகளிராகக் கூறியிருக்கும் கம்பரது கற்பனைத் திறத்தை என்னென்று சொல்ல!

'வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்பு நாண்மல ரசோகங்க ளலர்விளக் கெடுப்ப
................................ தோகைநின் றுடுவ சோலை'

(பால : 9 : 64)

மகளிர் அசோகின் தளிரிலைகளைத் துண்டுகளாகக் கிள்ளி அதை மார்பில் அணிந்ததாக ஓர் இடத்தில் குறிக்கப்பட்டுள்ளது

'பின்னங்க ளுகிரிற் செய்து பிண்டியந் தளிர்கைக் கொண்ட
சின்னங்கண் முலையி னப்பித் தேமலர் கொய்கின்றாரும்'

(பால : 14 : 54)

தளிரிலைகளைக் கிள்ளிக் கயல்மீன், காமவல்லி முதலிய வடிவம் பட மார்பில் அணிவது பண்டைக் கால மகளிர் வழக்கமென்பதை

'கொழுமடற் குமரிவாழைத் துகிற் சுருள் கொண்டு
தோன்றச்
செழுமலர்க் காமவல்லி செருக்கயற் சிற்பமாகக்
கழுமணிச் செப்பொனுழிக் கைவிர லுகிரிற் கிள்ளி
விழுமுலை சூட்டி நின்றார் விண்ணவர் மகளிரொத்தார்'

என்ற சிந்தாமணிப் பாடலால் அறியலாம். இவ்வாறு மார்பில் அணிவதற்கு அசோகின் தளிரிலைகளைத் தேர்ந்தெடுத்ததாகக் கம்பராமாயணத்தில் கூறியிருப்பது மிகப் பொருத்தமாக இருக்கின்றது. ஏனெனில் மென்மையான தளிரிலைகளை உடையதாகக் கூறப்படும் சில மரங்களுள் அசோகமும் ஒன்றாகும். இதன் தளிர்கள் மிக மென்மையானவை; நிமிர்ந்து

நிற்கும் ஆற்றலில்லாமல் தொங்கிக் கொண்டிருக்கும் இயல் பினையுடையவை. (ycung leaves are soft, red and limp and remain Pendent)

இத்தகைய மென்மையான அசோகின் தளிர்களும், கற்ப கத்தின் குழை, கமலப்பூ போன்றவைகளும் சீதாபிராட்டி யின் காலுக்கே தோற்றொழியுமாளுல் அவைகளைக் கைக்கு உவமை கூறுதல் பொருந்துமோ என்று கேட்டு சீதையின் கைகளின் மென்மையை எடுத்துரைக்க, அசோகின் தளிரைப் பயன்படுத்துகிருர் (கிட்: 765)

அசோகமரம் சமணர்களால் புனிதாமானதாகக் கருதப் படுகிறது. காமதேவனின் மலரம்புகள் ஐந்தில் அசோக மலரும் ஒன்ருகும்; இம்மரம் பெண்கள் கால் உதைபட்டால் மலரும் என்று கூறுவது இலக்கிய மரபு.

உருகிய பசும்பொன் அசும்ப வெயில் வீசுபொன்
னூசலே உதைந் தாடலும்
ஒண்தளி ரடிச்சுவ டுறப்பெறும் அசோகுநற
வொழுகு மலர் பூத்துதிர்வது'

(மீனுட்சி : பிள்ளைத்தமிழ் : ஊசல்வரி)

'Flowering Trees and shrubs In India' என்ற ஆங்கில நூலில் இந்த கருத்து குறிப்பிடப் பட்டிருக்கின்றது. (There is a quaint Indian belief that a tree will bloom more vigorously if kicked by a young lady).

1160 

# அடம்பு (அடும்பு)

இது Convolvulaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Ipomaea Biloba என்னும் கொடி. இக்கொடி கடற்கரை யோரங்களிலும் கழிகளின் கரையோரங்களிலும் படர்ந்து வளரும். சங்கப் பாடல்கள் இக்கொடியை 'அடும்பு' என்று குறிக்கின்றன.

அடும்பின் இலை ஏனைய செடிகளின் இலைகளைப் போலன்றி தனிப்பட்ட வடிவத்தையுடையது.

'ஒண்பல் மலர கவட்டிலை அடும்பின்
செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப' (அகம் : 80)

இப்பாடல் அடும்பின் இலை பிளவுபட்டிருக்கும் என்ற செய்தியைத் தெளிவாகத் தருகின்றது. இங்ஙனம் இலைகள் இரண்டாகப் பிளவுபட்டிருக்கும் காரணம் பற்றியே இது 'Biloba' என்ற பெயரைப் பெற்றது. இவ்வாறு இலை கவைத்து இருப்பதால் ஆட்டின் குளம்புக்கு ஒப்பிட்டு ஆங்கிலத்தில் இதனை 'Goats foot creeper' என்றழைப்பர். இதே அடிப்படையில் தான் குறுந்தொகைப் பாடலொன்று அடும்பின் இலையை மானின் குளம்படிக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றது.

மானடி யன்ன கவட்டிலை அடும்பின்' (குறுந் : 243)

அடும்பின் மலர் மிக அழகாக இருக்கும், இளஞ்சிவப்பான (pink) நிறமுடையது. இது ஒலியெழுப்பும் மணி போன்ற உருவமுடையது (companulate). இதனால் தான் 243-ஆம் குறுந்தொகைப் பாடல் 'தார் மணி யன்ன வொண் பூக்கொழுதி' என்று அடும்பின் பூவை மாட்டின் கழுத்தில் கட்டும் மணிக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றது. அடும்பின் மலரைப் பண்டை மக்கள் சூடினர்.

தம் அரும் பெரும் காவியத்தில் கம்பர் ஒரே இடத்தில் தான் அடம்பைப் பற்றிக் குறித்திருக்கிறார். இராமன் தம்பி யுடனும் வானரப்படையுடனும் கடற்கரையில் வந்து தங்கி யிருக்கிறான். அந்தக் கடற்கரையில் காணப்பட்ட பல பொருட் களையும் பற்றிக் கூறுமிடத்து அடம்பு குறிக்கப்படுகிறது.

'மேனிறை யன்னமும் அடம்பும் வேட்கைகூர்
பூநிறச் சோலையும் புரிந்து நோக்கினான்' (யுத் : 331)

---

# அல்லி

நீரில் வாழும் பலவகையான செடிகளையும் 'அல்லி' என்று பொதுவாகக் கூறுவதுண்டு. எனினும் ஆம்பல், சழுநீர் குவளை, நெய்தல், உற்பலம், குமுதம் முதலிய பல பெயர் களால் வழங்குவதும், நீர்ப்பூக்களிலெல்லாம் அழகுக்கும் மென் மைக்கும் இணையற்று விளங்குவதும், உலகப் பேரிலக்கியங்களி லெல்லாம் கொண்டாடப்பட்டுள்ளதுமான அல்லி அல்லது அல்லித்தாமரை என்பது, அணங்கு அல்லது அரமகள் என்று பொருள்படும் நிம்பியா (Nymphaea) என்னும் சாதியைச் சேர்ந்த செடிகளையே பொதுவாகக் குறிக்கும்.

அல்லி குளம், குட்டை, சுனை முதலிய ஆழமில்லாத அமைதியாகத் தெளிந்துள்ள நன்னீர் நிலைகளில் செழித்து வளர்கிறது. மெல்ல ஓடும் ஆறுகளின் ஓரங்களிலும் இதைக் காணலாம். நெய்தல் நிலச்சமவெளிகளிலும், கழிமுகத்தைச் சார்ந்த நிலங்களில் உள்ள சற்று உவர்ப்பான நீரிலும் சில இனங்கள் வாழ்கின்றன. அல்லிச் சாதியில் சுமார் நாற்பது இனங்கள் உள. அவற்றுள் பல உள்ளினங்களும் வகைகளும் உள.

அல்லி Nymphaeaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்தது. இது ஒரு பல பருவச்செடி (perennial). இதன் தண்டு கிழங்குவடிவமானது. நீர்வற்றிச் செடி காய்ந்து போனாலும் சேற்றில் புதைந்திருக்கும் கிழங்கில் உயிர் இருக்கும். மீண்டும் நீர்வந்ததும் கிழங்கிலுள்ள குருத்துக்கள் வளர்ந்து புதிய இலைகளும் பூக்களும் உண்டாகும். கிழங்கிலிருந்து வேர்கள் சேற்றுக்குள் வளரும். இலைகளும் பூக்களும் நீண்ட காம்புள்ளவை. நீர் மட்டம் சற்று உயர்ந்தால் இந்தக் காம்புகள் நீளும். இதனுல் நீருக்கு மேலேயே இலையும் பூவும் இருக்கும் நீர்மட்டம் தாழ்ந்தால் காம்பு அலகுடன் பொருந்தும் கோணம் மாறுபட்டு இலை நீரின் மேலேயே மிதக்கும். இத்தன்மையைத் தான் வள்ளுவர் 'வெள்ளத்தனைய மலர் நீட்டம்' என்று குறிக்கின்றுர். பூக்கள் இலைகளைப் போலவே கிழங்கிலிருந்து தனித்தனியாக எழுகின்றன. ஒரு பூவில் புற இதழ்கள் நான்கும், அகவிதழ்கள் பலவும், மகரந்தக் கேசரங்கள் மிகப் பலவும், சூலிலைகள் பலவும் காணப்படும். அல்லி சாதாரணமாக ஆண்டில் பெரும்பகுதியும் மலரும் ஆயினும் மழைக்காலத்தில் மிகுதியாக மலர்கள் தோன்றும். ஒவ்வொரு இனத்திற்கும் பூக்கள் மலர்வதற்கும் கூம்புவதற்கும் உரிய நேரம் உண்டு. ஒவ்வொரு மலரும் ஒன்று அல்லது இரண்டு முதல் ஐந்து அல்லது ஏழு நாட்கள் வரையில் பகலிலோ இரவிலோ தொடர்ச்சியாக ஒவ்வொரு நாளும் மலர்ந்து குவியும். பின் பூக்காம்பு சுருண்டு கொள்வதினுல் மலர் நீருக்குள் இழுத்துக் கொள்ளப்படும்.

அல்லியைப் பொதுவாக மூன்று வகையாகப் பகுக்கலாம் (கலைக்களஞ்சியம் : தொகுதி - 1) தென்னிந்தியாவிலுள்ள அல்லியினங்களில் Nymphaea stellata என்பது ஒருவகை. இது ஆம்பல், நீலம் அல்லது நீலோற்பலம், கருநெய்தல், கருங்குவளை, பானல், காவி எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. இப்பெயர்கள் அனைத்தையுமே கம்பர் தம் காவியத்தில் பயன்படுத்துகிறுர். இதன் இலைகள் மேலே பச்சையாகவும் கீழே நீலமான ஊதாநிறமாகவும் இருக்கும். பூ 3-7 அங்குல விட்டமுள்ளது; நீலநிறமானது இருள் போன்ற

நீலநிறத்தைக் கம்பர் 'எல்லியங் குவளை' (ஆர: 225) என்று குறிப்பிடுகிறார். சிவப்புக் கலந்தும் இப்பூ இருக்கும் என்பதை 'சேயரிக்குவளை' (ஆர: 791) என்று கூறுவதன் மூலமும்; மலர் நறுமணமுடையது என்பதை 'வாசக்குவளை' (கிட்: 25) என்று கூறுவதன் மூலமும் அறியலாம். மலர் மூன்று நாட்கள் தொடர்ந்து பூக்கும். மாலை 8மணிக்கு மலர்ந்து பகல் 2 மணிக்குமேல், மாலை வருவதற்கு முன் கூம்பி விடும். புற இதழ்களில் கரும்புள்ளிகள் உள. கேசரத்தாளும், கேசரப் பைகளும் வெளிர் மஞ்சள் நிறம்.

கருங்குவளையை மையுண்ட கண்ணுக்கு உவமையாகப் பல இடங்களில் கம்பர் கூறுகிறார்.

'நீலத்துண்கண் மங்கையர்' (பால : 15 : 34) இது சங்க காலத்திலிருந்தே பயிலப்பட்டு வரும் மரபுவமை ஆகும்.

'கண்ணென மலர்ந்த மாயிதழ் குவளை' (அகம்: 228)

கோதாவரி ஆற்றில் குவளை மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அவற்றிலிருந்து தேன் துளிகள் சிதறுகின்றன. இதைக் கண்ட கம்பர், இராமனும் இலக்குவனும் காட்டில் வந்து வசிக்கும் அவலநிலையைக்கண்டு, அந்நதியானது அவர்கள் மீது எழுந்த மாறா அன்பினால் அன்று மலர்ந்த குவளை மலர்களாகிய கண்களினின்றும் நீர்த்துளிகள் சோர அழுவதாகக் கூறித் தானும் கண்ணீர் வடிக்கிறார்.

'எழுவுறு காத லாரி
    விரைத் திரைத் தேங்கி யேங்கிப்
பழுவநாட் குவளைச் செவ்விக்
    கண்பனி பரந்து சோர
வழுவிலா வாய்மை மைந்தர்
    வனத்துறை வருத்த நோக்கி
அழுவது மொத்த தாலவ்
    வலங்குநீ ராறு மன்னோ' (ஆர: 222)

இராமனின் மேனி நிறத்திற்கும் உவமையாகக் காவி மலர் கூறப்படுகின்றது.

'காவியின் மலர்.........அனையானை'

(அயோ : 6 : 58)

குவளைமலர் இதழ் குவிவதைக் கண்ட கம்பருக்குத் தலைவனைப் பிரிந்த தலைவியின் நினைவு எழுகிறது. தன்னைப் பிரிந்த தலைவன் தேரின் மேலேறி வெகு தூரம், செல்ல: அதனுல் மகிழ்ச்சி நீங்கி உடலும் உள்ளமும் சோர ஒடுங்கப் பெற்ற தலைவியின் கண்களைப் போல கருங்குவளை மலர்கள் இதழ் குவியப் பெற்றனவாம்.

'தேரினன்னெடுந்திசை செலச் செருக்கழிந்தொடுங்கும்
கூரயின்னெடுங் கண்ணெனக் குவிந்தன குவளை'

(கிட் : 467)

நீலமலருக்கும் நீருக்கும் உள்ள தொடர்பைக் கம்பர் ஓரிடத்தில் தெற்றென விளக்குகிறுர். குளத்தில் நீர் உள்ள வரை வாழ்ந்து, அது அற்றதும் வாடிவிடும் இயல்பையுடையது நீலம். அதுபோல் இராமனைப் பிரிந்தால் இலக்குவனும் சிதையும் வாடிவிடுவர் என்று கூறி நீருக்கும் நிலத்திற்கும் உள்ள பிரிக்க இயலா உறவை உணர்த்தும் பகுதி பின்வருமாறு:-

'நீருளவெனினுள மீனு நீலமும்
...............நானுஞ் சிதையும்
ஆருள ரெனினுளே மருளு வாயென்ருன்'

(அயோ: 4: 157)

கட்சாடியில் மணத்திற்காகத் தாமரை, குவளை போன்ற மலர்களை இட்டு வைக்கும் வழக்கமிருந்ததாகத் தெரிகின்றது:

'தாட் கருங்குவளை தோய்ந்த தண்ணறைச் சாடியுள்'
(பால: 17: 13)

காவி, கருங்குவளை, நெய்தல், நீலோற்பலம், பானல் என்பவை ஒருமலரா அல்லது வெவ்வேறு மலர்களா என்பது பற்றி ஐயம் எழுகிறது.

'காவியும் கருங்குவளையும் நெய்தலும் காயாம்
பூவையும் பொருவானவன்'
(கிட் : 482)

'படர் பூங்குவளை நாண்மலரோ நீலோற்பலமோ
பானலோ'
(பால : 10 : 18)

என்ற பகுதிகளை நோக்கும்போது, இவை வெவ்வேறு மலர்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இவை எந்த நிலையில் வேறுபடுகின்றன என்பதற்குக் குறிப்புக்கள் இல்லை. உரையாசிரியர்கள் இவையனைத்தும் ஒன்றையே குறிக்கின்றன என்ற முறையிலேயே உரையெழுதிச் செல்கிறார்கள். குறிஞ்சிப் பாட்டிற்கு உரையெழுதுகையில் 'நெய்தல்' என்பதற்குக் கருங்குவளை என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுகிறார். 'காவி' என்பதற்குக் கருங்குவளை என்று உ. வே. சாமிநாதையர் அவர்களும் (கிட் : 833), 'நீலம், என்பதற்குக் கருங்குவளை என்று வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்களும் பொருள் கூறுகின்றனர். இவற்றை நோக்கும்போது நெய்தல், காவி, நீலம், கருங்குவளை என்றுஅனைத்தும் ஒன்றையே குறிப்பதாகக் கொள்ள வேண்டியிருக்கின்றது. சங்க இலக்கியங்களில் உள்ள தாவரங்களைப் பற்றி ஆய்வு செய்த திரு. பி. எல். சாமி அவர்கள் 'சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்' என்ற நூலில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார் :'நெய்தல் செடியைச் செடி நூலார் Nymphaea Stellata என்று பெயரிட்டழைப்பர். இதையே நீலோற்பலம். நீலம், கருநெய்தல், கருங்குவளை,

பானல் என்று பல பெயரால் மயங்கிக் கூறுவர்.'' இவற்றை யெல்லாம் ஆதாரமாகக் கொண்டு நோக்கும் போது இப் பெயர்கள் அனைத்தும் Nymphaea Stellata என்ற செடியைக் குறித்ததாகக் கொள்ளலாம். எனவே, இவை வெவ்வேறு செடிகள் என்று எண்ணும் முறையில் கம்பர் கூறியிருப்பது ஏன் என்று விளங்கவில்லை.

Nymphaea lotus Alba என்பது என்பது அல்லி யில் மற்றோர் வகை. இது வெள்ளல்லி, வெள்ளாம்பல் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றது. இதைக் குமுதம் என்றும் கூறுவதுண்டு. இலைகள் ஊதா கலந்த பச்சை. பூ வெண்மை யானது. புற இதழ் பச்சைநிறம். அக இதழ்கள் வெண்மை நிறமானவை. கேசரங்கள் மஞ்சள் நிறம். பூ, இரவில் ஏழு மணிக்கு மேல் தலையவிழும். மறுநாள் காலை பதினொன்று மணி வரையில் மலர்ந்திருந்து பின் மூடிக் கொள்ளும். இவ்வாறு நான்கு இரவுகள் பூக்கும்.

மாலைக்காலத்து, அழகிய நீர்நிலையில் எங்கும் மலர்ந்து விளங்கும் வெண்ணிற ஆம்பல்கள், விண்ணில் மலர்ந்து ஒளி வீசும் விண்மீன்கள் போலக் கம்பருக்குக் காட்சியளிக்கின்றன.

'........... .......... புலரிபோன பின்
மீனென விளங்கிய வெள்ளியாம்பல்வீ
வானென மணித்தடம் மலர்ந்த வெங்கும்'

(அயோ : 8 : 42)

செந்தாமரை முகத்தின் நடுவில் ஓர் ஆம்பல் மலர்ந்தது போல் பற்கள் தோன்ற அனுமன் நகைத்தான் என்று கூறு மிடத்தில், வெள்ளாம்பல் பற்களுக்கு உவமையாகக் கூறப் பட்டிருப்பதைக் காணலாம்.

'......................... தாழ்வதைத் தாமரை நாப்பண்
ஆம்பல் விரிந்தா லன்ன சிரிப்பா னறிவாளன்'

(கிட் : 997)

இவ்வுவமை புதுமையானது எனலாம். பிற பாத்திரங்களி னின்று வேறுபட்ட அனுமனைப் புது உவமையால் விளக்கியது பொருத்தமே.

செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், செங்குவளை அரக்காம்பல் என்றழைக்கப்படும் நிம்பியா ரூப்ரா என்பது அல்லியைச் சார்ந்த மற்றோர் இனம். இலை முதலில் செம்பு நிறமாக இருந்து பின் பச்சையாகும். மலர் சிவப்பு நிற முடையது. இரவு 8 மணியளவில் போதவிழ்ந்து மறுநாள் காலை 11 மணியளவில் குவியும். 3 அல்லது 4 நாட்கள் இவ் வாறு தொடர்ந்து மலரும். அக இதழ்கள் 12-20 கேசரங்கள் செந்நிறமானவை.

மகளிர் வாய்க்கு உவமையாகச் செவ்வாம்பல் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை மூன்று நிலைகளில் அமைகிறது.

'சேதாம்பற் போதனைய செங்கனிவாய்'

(அயோ : 4 : 101)

என வாயிதழின் செம்மை வண்ணத்தையும்,

'குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ'

(பால : 3 : 58)

என வாயிதழ்களின் இன்மண முடைப்பண்பையும்,

'ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்'

(பால : 19 : 31)

என இன்பந்தரும் அதரங்களின் இனிமைச் செவ்வியையும் காட்டுகிறார் கம்பர். இவ்வாறு மகளிர் வாயிதழுக்கு உவமை யாகக் கூறப்பட்ட செவ்வாம்பல் மலர்கள் இராமனின் கண் களுக்கு உவமையாகும் சிறப்பையும் பெறுகின்றன. பொது வாக இராமனின் கண்களுக்கு உவமையாகும் சிறப்பைக் கம்பர்

தாமரை மலருக்கே அளிக்கிறார். ஓரிடத்தில் இந்நிலை மாறு படுகிறது. வாலி சுக்ரீவனுக்கு இழைத்த கொடுமைகளை அனுமன் வாயிலாகக் கேட்டு சினம் கொண்ட இராமனின் கண்கள் தாமரையை விடவும் சிவக்கின்றது. இங்ஙனம் இராமனின் கண்தாமரைகள் செவ்வாம்பல் போல விளங்குகின்றன.

'—............................—.................. மலர்க்கண்

செய்ய தாமரை யாம்பலம் போதெனத் திகழ்ந்த'

(கிட் : 146)

இவ்வாறு உவமையாகக் கூறப்பட்ட செவ்வல்லி மலர்களை, நாட்டின் வளத்தைக் காட்டுவதற்காகவும் பயன்படுத்துகிறார் கம்பர். கோசல நாட்டில் கழனிகளின் வரம்புகளிலெல்லாம் முத்துக்களும், மதகுகளிலெல்லாம் சங்குகளும், நீர்க்கரைகளிலெல்லாம் பொன்னும் காணப்படுகின்றன. அவை மட்டுமன்றி, எருமைகள் வீழ்ந்து உழக்குகின்ற நீர்க்குழிகளிலெல்லாம் செங்கழுநீர் மலர்க்குவியல்கள் நிறைந்து காணப்படுகின்றனவாம்.

'வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம் பணில

மாநீர்க்

குரம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங்

கழுநீர்க் கொள்ளை

(பால : 2 : 2)

இயற்கை நிகழ்ச்சிகளைக் காப்பியத்தோடு தொடர்பு படுத்திப் பேசும் நிலையைக் கம்பரிடம் மிகுதியாகக் காண்கிறோம். கைகேயி வேண்டிய இரு கொடுவரங்களையும் அளித்த தசரதமன்னன் நினைவிழந்து வீழ்கின்றான். இரவு கழிகின்றது. காலை மலர்வதைக் கம்பர் வர்ணிக்கிறார். காலை நிகழ்ச்சிகளில் ஒன்றாகக் குமுதமலர்கள் குவிகின்றன. இவ்வாறு குமுதம்

குவிவது, கேகயன் மகள் தேடிக்கொண்ட பழியால் பெண்ணினமே தம் இனத்தவள் சூழ்ந்த தீமையை எண்ணி நாணி வாய்புதைத்ததை ஒத்ததாகக் காட்டுகிறுர் காப்பியப்புலவர்.

'சாய டங்க நலங் கலந்து தயங்கு தன்குல நன்மையும்
போய டங்க நெடுங்கொ டும்பழி கொண்டரும்புகழ்
சிந்துமத்
தீய டங்கிய சிந்தை யாள்செயல் கண்டு சீரிய
நங்கைமார்
வாயடங்கின வென்ன வந்து குவிந்த வண்குமு
தங்களே.'

(அயோ. : 3 : 53)

இராமன் வனம் நோக்கிச் செல்வதைக் கண்டு தசரதன் மனைவியர் வருந்துகின்றனர். இராமனது நிலைகண்டு வாய் திறந்து பரிதபிக்கின்ற அத்தேவியரது வாய்களால் அந்தப்புர மாளிகை, செவ்வல்லிகள் பகலில் மலரப்பெற்ற ஒரு கழனியைப் போன்று காட்சியளிக்கின்றது. (அயோ : 4 : 183)

பிராட்டியைப் பிரிந்து வருந்தும் இராமனுக்கு, காணும் காட்சிகளெல்லாம் சீதையை நினைவுபடுத்துகின்றன. பம்பைப் பொய்கையில் மலர்ந்து விளங்கும் செவ்வாம்பல்கள் சீதையின் துவரிதழ்களை நினைவூட்டி இராமனை வருத்துகின்றன.

'........................... துவரிதழ் காட்டுவ குமுதம்'

(கிட் : 18)

காப்பியத்தோடு தொடர்புடைய மற்றுமொரு குறிப்பை ஆரணிய காண்டத்தில் காண்கிறோம். இங்கு ஆம்பல் மலர்களை அற்பர்களுடன் ஒப்பிடுகிறுர் கவி. சூர்ப்பணகை வாயிலாக சீதாபிராட்டியின் அழகைக் கேள்வியுற்ற இராவணன் விரகதாபத்தால் வாடுகிறுன். குளிர்ச்சியைத் தரும் பொருட்களெல்லாம் அவனை வருத்தவே, அவன் முற்பகற்பொழுதில்

திங்களை வரவழைக்கின்ருன். மதியைக் கண்ட ஆம்பல்கள் அடாத பொருள்பெற்ற சிறியோர் போல் செருக்கி மலர்ந்தன. ஆனுல் திங்களும் இராவணனது வருத்தத்தை நீக்காததால் மீண்டும் கதிரவனையே அழைக்கின்ருன். செம்பொன்னை உருக்கியது போன்ற கதிர்களை வீசிக்கொண்டு கதிரவனும் உதிக்கின்ருன். திங்கள் விளங்கிய காலத்தில் விரிந்திருந்த செவ்வாம்பல்கள், அற்பர்கள் அறவழியல்லாத வழிகளில் பொருள் பெற்று, கர்வமுற்று வாழும்போது இடையில் தாம் பெற்ற செல்வத்தை இழந்து செருக்கடங்கியது போல் கூம்பின என்று அற்பர்களின் இயல்பை ஆம்பலின் மேலேற்றிக் கூறுகிருர் ஆசிரியர்.

'இருக்கின் மொழியா லெரிமுகத்தி
    னீந்த நெய்யி னெரிசெம்பொன்
உருக்கி யனைய கதிர்பாய
    வனல்போல் விரிந்த வுயர்கமலம்
அருக்க னெய்த வமைந்தடங்கி
    வாழா தடாத பொருளெய்திச்
செருக்கி யிடையே திருவிழந்த
    சிறியோர் போன்ற சேதாம்பல்' (ஆர : 670)

இங்கு, கம்பர் ஓர் உள்ளுறைப் பொருளையும் குறிப்பாக உணர்த்துகிருர் எனலாம். கதிரவனின் வெங்கதிருக்கு முன் ஆம்பல் எவ்வாறு கூம்பிற்ருே, அதுபோன்று சீதையின் கற்புக் கனலின் முன் இராவணனின் பேராற்றலும் அழிவது திண்ணம் என்பதைத் தான் ஆசிரியர் இங்கு உணர்த்த விரும்புகிருர் போலும்.

மலர்கள் நிறம் மாறி மலர்வதைத் தீய அறிகுறியாகக் கருதியிருக்கின்றனர். அரக்கமகளிரின் விழிகளாகிய நீலமலர்களும், வாய்களாகிய செவ்வாம்பல் மலர்களும் கள்ளுண்டதனுல்

நிறம் மாறப் பெற்று முறையே செந்நிறத்தையும், வெண் ணிறத்தையும் அடைந்து, தீய அறிகுறியாக நிறம் மாறி மலர்ந்த மலர்களைப் போன்று காட்சியளிப்பதாகக் கூறுவ திலிருந்து இக்கருத்தை அறியலாம் (யுத் : 2768)

ஆம்பல் மொட்டு, கூம்பியிருக்கும் கொக்கைப் போல காட்சியளிக்கும் என ஒரு நற்றிணைப் பாடல் கூறுகின்றது.

'கொக்கின் கூம்பு நிலையன்ன முகைய
ஆம்பல் ......................................................' (நற் : 280)

இதே ஆம்பல் அரும்பினைச் சாரைப் பாம்பின் நீண்ட தலை யாகக் காண்கிறார் கம்பர். தொண்டை நாட்டு வளத்தினைக் குறிக்குமிடத்து இந்த உவமையைக் கம்பர் பயன்படுத்துகிறார். நீர்நிலைகளில் ஆம்பல்கள் மலர்ந்து விளங்குகின்றன. மலர் களிலடையே அரும்புகள் காட்சியளிக்கின்றன. இவ்வரும்புகள் தோற்றத்தில் சாரைப்பாம்பின் தலையை ஒத்திருப்பதால், தேரைகள் தம் பகையான பாம்புகள் தாம் தம்மைக் கவ்வ வருகின்றன என எண்ணி அஞ்சிக் கதறுவதாக ஓர் அழகிய காட்சி வரைந்தளிக்கப்பட்டுள்ளது.

'தாரை வன்றலைத் தண்ணிள வாம்பலைச்
சேரை யென்று புலம்புவ தேரையே' (கிட்: 909)

அல்லிமலரை மகளிர் கூந்தலில் சூடியிருக்கின்றனர். இம்மலர் மருதநிலத்திற்குரிய கருப்பொருளாகும். எனவே மருத நிலப் பெண்களின் கூந்தலில் ஆம்பல் மணம் கமழ்வ தாகக் கூறியிருப்பது மிகப் பொருத்தமாக அமைகிறது.

'ஞாங்க ருற்பல முழத்தியர் பித்திகை நாற'
(கிட்: 479)

அரசர்கள் செங்கழுநீர்ப் பூவைக் கையில் பிடித்திருத் தல் மரபு என்பதைச் சீவக சிந்தாமணி, பெருங்கதை என்பவற்றிலிருந்து அறியலாம்.

'வாசவான் கழுநீர் பிடித்தாங்கரி
யாசனத் திருந்தானடன் மொய்ம்பினுன்'

(சீவக: 429)

பதிற்றுப்பத்து 52-ஆவது ப டலிலும் இதையொத்த ஒரு மரபு குறிக்கப்பட்டுள்ளது. கம்பரும் இம்மரபைக் குறிக்கின்ருர். இராவணன் தேனேயுடைய குமுதப் பூவைக் கையில் கொண்டிருந்ததாக அறிகிருேம்.

'புல்லுற மலர்ந்தகட் குமுதப் பூவினுன்' (சுந்: 1070)

மதுவைப் பருகுவதற்குக் கழுநீர்மலரின் நாளம் பயன் பட்டிருக்கிறது; வண்டுமொய்ப்பதனுல் வாயைத் திறந்து பருகினுல் வண்டுகள் அங்கும் வந்து மொய்த்து ஆர்க்கக் கூடுமென்று அஞ்சி ஒருபெண் செங்கழுநீர்த் தண்டினுல் மதுவை அருந்தினுள் என்று கூறியிருப்பது, தற்கால மக்கள் குளிர் பானம் அருந்தும் காட்சியை நினேவுபடுத்துகின்றது.

'வான்றுணேப் பிரித லாற்ரு வண்டினம் வச்சை மாக்கள்
ஏன்றமா நிதியம் வேட்ட விரவல ரென்ன வார்ப்பத்
தேன்றரு கமலச் செவ்வாய் திறந்தன ஞுகர நாணி
ஊன்றிய கழுநீர் நாளத் தாளிஞ லொருத்தி யுண்டாள்'

(பால : 17 : 19)

யானேயின் மதநீர் குமுதமலர் போன்ற மணத்தை யுடையது என்று கூறப்பட்டுள்ளது.

'குமுத நாறு மதத்தன' (யுத்: 3544)

# அவரை

Leguminosae என்ற குடும்பத்தில் papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இது Dolichos Lablab எனப்படுகிறது.

அவரையில் சிறப்பாக French Bean என்றும், country Bean என்றும் இருவகைகள் உள. Country Bean என்பதில் ஒருவகை, செடியாக வளரும். இதைத்தான் வயல்களில் பெருமளவிற்குப் பயிர் செய்கின்றனர். மொச்சை என்று அழைக்கப்படும் இதனை ஆங்கிலத்தில் Field Bean என்பர் மற்றொரு வகை வீட்டுத்தோட்டப் பயிராக வளர்க்கப்படுகிறது. இது கொடியாக படர்ந்து வளர்வதால் இதனைப் 'பந்தல் அவரை' அவரை என்று அழைப்பார்கள்.

இதன் இலைகள் கூட்டிலைகளாகும். பூக்கள் வெண்மை சிவப்பு, நீலம் முதலிய பல நிறங்களில் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் அவரையின் பூவைப்பவழத்திற்கும், கிளியின் வாய்க்கும் ஒப்பிட்டுக் கூறுகின்றன.

'பைந்நனை அவரைந் பவழங் கோப்பவும்'
(சிறுபாண் : 164)

'..................... பைங்கொடி அவரை
கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்'
(குறுந் : 240)

அவரை ஒரு சிறந்த உணவுப் பொருள். இதன் பசிய விதையையும், காய்ந்த கொட்டையையும், காய் முழுவதையும் உணவுப் பொருட்களாகப் பயன்படுத்தலாம்.

கம்பர் ஒரே இடத்தில் தான் அவரையைக் குறிக்கின்றார். சித்திரகூட மலையில் உறைகின்ற கிளிகள் அவரைகளைக் கொண்டு சென்று தவசிகளுக்கு அளித்துத் தங்கள் அன்பை வெளிப்படுத்துகின்றன.

'.............................................. அவரை
மெய் வணக்குறு வேயினமீன்றமெல் லரிசி
பொய் வணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்துன்
கைவணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணுய்'

(அயோ : 8 : 34)

---

# அனிச்சம்

பல இலக்கியங்களாலும் போற்றப் பெற்ற சிறப்புடையது இம்மலர். ஆனல் இது எந்த மலரென்ருே எங்குள்ளது என்ருே தற்போது சரியாகத் தெரியவில்லை. இப்பூவின் பெயரையே கேட்டிராத மாந்தர் பலருள்ளர். இவ்வனிச்சமலரைப் பற்றிச் சிறந்த ஆராய்ச்சியாளரும், இலக்கணப் பேராசிரியருமான திரு. மா. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிருர். (கரந்தைக் கட்டுரை திருக்குறள் மாண்பு - பக் - 118) ''இவ்வனிச்சமலர் இன்னதெனப் பலரும் அறியார். நீர்ப்பூ வென்பாரும் புதற்பூவென்பாரும் உளர். இது கோட்டுப் பூவே. வேதாரணியத்தை அடுத்த ஊர் (Railway Station) ஆகிய குறவப்புலம் என்பதன் மேல் பால்ஐயனர் கோயில் தோட்டத்தில் இப்பூக்கள் நிறைய உள்ளன. இதன் கிளையும் இலையும் சிறு சண்பகம் போல்வன. மாசி, பங்குனியில் நீர்க் கடம்பு போலக் கொத்துக் கொத்தாகப் பூக்கும்; மாலையில் மலரும்; விடியற் காலத்தில் மலர்கள் பொடியாய் உதிர்ந்துகிடக்கும். காய் முற்றில் வங்குஸ்தான் காய்போல வலிதாயிருக்கும். மலர்கள் வெண்கடம்பு போல நறுமணம் உள்ளவையாய் இருக்கும். சிவந்தகோடுகள் படர்ந்த வெள்ளைப் பூக்கள் இவை; கோயிலில் சிறுதேருக்கு அணியப் படும். அரசர் கோயிலில் அணையில் பரப்பப்படும். இம்மலரை

நேரில் பார்த்து அறிதல் வேண்டும்''. இப்பகுதி திரு. கு. கோதண்டபாணிபிள்ளை அவர்களின் 'முதற்குறள் உவமை' என்ற நூலில் மேற்கோளாகத் தரப்பட்டுள்ளது. இம்மேற் கோளில் கூறப்பட்டிருக்கும் மரம் தற்போது உண்டா என்பது தெரியவில்லை:

இலக்கியங்களில் மென்மைக்கு உவமையாகவே அனிச்ச மலர் கூறப்பட்டிருக்கிறது. இம்மலர் மோந்த அளவிலேயே குழைந்துவிடும் என்பதை,

'மோப்பக் குழையும் 'அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து' (குறள்: 90)

என்ற வள்ளுவர் வாக்கால் உணரலாம். இத்தகைய அனிச்ச மலரைக் காட்டிலும் மென்மையானது சிதா பிராட்டியின் திருவடிகள் என்று கூறி வியக்கிறுர் கம்பர்.

'ஐயவா மனிச்சப் போதி னதிகமு நொய்ய வாடல்
பையர வல்கு லாடன் பஞ்சின்றிப் பழுத்த பாதம்'

(பால : 20 : 14)

---

# ஆர் (ஆத்தி)

இது ஒரு வகையான மந்தாரையாகும். Leguminosae என்ற குடும்பத்தில் Caesalpineae என்னும் உட் குடும்பத்தைச் சேர்ந்த இது Bauhinia Racemosa எனப்படும்.

இரண்டு பிரிவாகப் பிளந்திருக்கும் இலைகளில் நரம்புகள் கைவடிவமாக ஓடும். பூக்கள் கிளைகளின் நுனியில் கொத் தாக உண்டாகும். அவை வெண்மையானவை. அகவிதழ்கள்

5. சற்றுச் சமமின்றியிருக்கும். மந்தார இனத்தைச் சேர்ந்த மலர்கள் இனிமையான மணமுடையவை. (Flowers sweetly scented) இத்தன்மையைச் சுட்டுவதற்காகத் தான் கம்பர் 'தாங்குமார்' (கிட்: 735) என்று கூறுகிறுர்.

தமிழ்நாட்டு மூவேந்தர்களும் தமக்கென அடையாள மாலையைக் கொண்டிருந்தனர். பாண்டியன் வேப்பம்பூ மாலையையும், சேரன் பனம்பூ மாலையையும் அணிய, சோழனுக்குரியதாக விளங்கியது ஆத்தி மாலையாகும். தம்முள் பகை கொண்டு மாறிமாறிப் போருடற்றித் திரிந்த சோழன் நலங்கிள்ளியையும், நெடுங்கிள்ளியையும் சந்து செய்விக்க முற்பட்ட கோவூர் கிழாரது பாடலில் இம்மூன்று மாலைகளும் குறிப்பிடப் படுகின்றன.

'இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே'

(புறம் : 45)

சூரியகுல இளவலான இராமன் போருக்குப் புறப்படுகையில் துளசிமாலை, தும்பைமாலை இவற்றுடன் சூரிய குலத்தவரான சோழர்க்குரிய ஆத்தி மாலையையும் அணிந்த செய்தியைக் கம்பர் குறிப்பிடுகிறுர்.

'இளவரிக் கவட்டிலை யாரொ டேர்பெறத்
துளவொடு தும்பையுஞ் சுழியச் சூடினுன்.

(யுத் : 1070)

---

# ஆலமரம்

Moraceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Ficus Bengalensis என்றழைக்கப்படுகிறது. ஆங்கிலத்தில் இதன் பெயர் Banyan என்பதாகும். பாரசீக வளை குடாவில் பந்தர் அப்பாஸ் என்னும் துறைமுகத்திற்கு அருகில் வளர்ந் திருந்த ஆலமரத்தினடியில் பனியர் (Banyas) என்னும் சில இந்து வணிகர்கள் கோயில் கட்டி வழிபாடு செய்துவந்தனர் என்றும், அதனுல் அந்தமரம் 'Banyan' என்று பெயர் பெற்ற தென்றும் கூறுவர். ஆலமரத்தின் பூக்கள் நுண்மையானவை. இவை வெளியே தோன்றுமல் குடம் போன்ற மஞ்சரித் தண் டின் உட்சுவரில் ஒட்டியிருக்கும். இவ்வாறு மலர்கள் வெளியே தோன்றுமல் இருக்கும் தன்மை பற்றி' கம்பர் 'கோளி' என்ற பெயரால் ஆலமரத்தைச் சுட்டுகிருர்.

'கோளி பங்சய மூழ்க' (பால: 14: 62)

'ஆர்' என்ற பெயரும் ஆலமரத்தைச் சுட்டுகின்றது.

'கோவையார் வட கொழுங்குவடொடிதர' (பால: 14:1)

ஆலமரம் சாதாரணமாகப் பனே முதலிய வேறு மரங் களின் மேல் வீழும்விதைகளிருந்து முளேக்கிறது. இவ்வாறு முளேத்த ஆலங்கன்றின் வேர்கள் ஆதாரமாக இருக்கும் மரத் தைச் சுற்றிக்கொண்டு பூமியை நோக்கியிறங்கி நிலத்தில் ஊன்றும். பின் பெரிதாக வளரும். அதன் பாரம் தாங்காமல் ஆதாரச் செடி பட்டுப் போகும். தொடக்கத்தில் தொற்றுச் செடியாக (epiphyte) இருந்து, பின் நிலத்தின் மேல் வளரும் இதுபோன்ற தாவரங்கள் அரைத் தொற்றுச் செடிகள் (Hemiepiphytes) எனப்படும்.

தொற்றுச் செடியாக இருக்கும் இளம்பருவத்திலும், ஒட்டுண்ணிகளாக (parasite) இராமல் இவை சுதந்திரமாகவே வளரும்.

இவ்வாறு ஒரு சிறு விதையிலிருந்து முளைத்த இம்மரம் மிகப்பெரிதாக வளரும். கிளைகளிலிருந்து விழுதுகள் என்னும் ஒட்டுவேர்கள் மிகுதியாக உண்டாகித் தூண் போலக் கிளைகளைத் தாங்கி நிற்கும். ஆலங்கிளைகள் விழுதுகளின் உதவியால் நெடுந்தூரம் கிடைமட்டமாக வளர்ந்து கொண்டே செல்லும். கல்கத்தா தாவர இயல் தோட்டத்திலுள்ள ஆலமரம் 464க்கு மேற்பட்ட விழுதுகளையுடையதென்றும், அது நிற்கும் நிலப்பரப்பு 1½ ஏக்கர் என்றும் கூறப்படுகிறது.

இத்தகு பெரும் மரத்தினை உள்ளே அடக்கியிருக்கும் ஆலமரத்தின் சிறுவிதையை, மகாபலியை அழிப்பதற்காகத் திருமால் எடுத்த வாமன அவதாரத்திற்கு ஒப்பாகக் கூறியிருப்பது மிகவும் ஏற்புடைத்தாக அமைகிறது. எவ்வாறு சிறு ஆலம்விதை பேருருவத்தைக் கொண்டதோ அதுபோன்று சிறு வடிவுடன் தோன்றிய வாமனனும் பேருருக் கொண்டு மண்ணையும் விண்ணையும் அளந்தானன்றோ.

'நீலநிறத்து நெடுந்தகை வந்து ஓர்
ஆலமர் வித்தி னருங்குற ளானான்'

(பால : 8 : 21)

திருமால் பிரளய காலத்தில் ஓர் ஆலிலை மீது சிறு பாலகனாய்ப் பள்ளிகொண்டருளிய புராணச் செய்தியை 'ஆலினிலைப் பாலகனா யன்றுலகமுண்டவனே' (பெருமாள் திருமொழி: 8:7) என்ற குலசேகராழ்வார் பாடலால் அறியலாம். இதைக் கம்பரும் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

'ஆலிலைப் பள்ளியானும்' (கிட்: 382)

போரில் படைக்கலங்களை இழந்து வறிய கரங்களைத் தொங்கவிட்டு நிற்கும் இராவணனை ஆலமரத்துடன் ஒப்பிட்டுக் கூறுகிறார் கம்பர். பல கைகளையும் தலைகளையும் உடைய

இராவணனுக்கு ஒப்பாகப் பல விழுதுகளையுடைய ஆலமரத்தைக் கூறியிருப்பது பொருத்தமான உவமையே.

'இறங்கு கண்ணின னெல்லழி முகத்தினன் றலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை யாலன்ன மெய்யன்'

(யுத் : 1204)

ஆலமரத்தினை நோக்க ஆலம் விதையும் இலையும் உருவத்தில் மிகச் சிறியவையே. இந்தச் சிறு பொருட்களைத் தான் இராமனோடு மிகுதியாகத் தொடர்பு படுத்திக் கூறுகிறார் கம்பர். விதையைத் திருமாலோடு ஒப்பிட்டும், இலையைத் திருமால் பள்ளிகொண்ட இடமாகவும் குறிக்கிறார். ஆனால் இராவணனுக்கு உவமையாகப் பல விழுதுகள் ஊன்றி நிற்கும் பெரும் ஆலமரத்தினைக் கூறுகிறார். இவ்வாறு சிறு பொருட்களைக் காவியத் தலைவனான இராமனோடு தொடர்பு படுத்தி, பெரும் பொருளை இராவணனோடு ஒப்பீட்டிருப்பது ஏன் என்ற வினா எழலாம். புறத்தோற்றத்தில் இராமன் மெல்லியன்; ஆயின் மெல்லிய தனது மானிட உருவில் வலிய அற ஆற்றலை உள்ளடக்கியவன். இராவணன் அரக்கர்கோன்; ஆலமரம் போன்ற பெரும்பேர் உருக்கொண்டவன்; ஆற்றல் மிக்கவன். ஆயின் அறமற்ற புலைப்பண்பால் அறவள்ளல் முன் நிலைகுலைந்து வீழ்கின்றான். அறம் மறத்தை வெல்லும்; புறத்தோற்றத்தைக் கண்டு மயங்கி விடல் வேண்டாம் என்பதைச் சுட்டத்தான் இக்குறிப்பைக் கம்பர் அமைத்தார் போலும்.

ஆலிலையை மகளிர் வயிற்றுக்கு உவமையாகக் கூறுவது இலக்கிய மரபு. கம்பர் கோசலையின் வயிற்றிற்கு உவமையாக ஆலிலையைக் குறிக்கின்றார்.

'..........................தன் காதலன்
வைகு மாலிலை யன்ன வயிற்றினை' (அயோ ; 4 ; 11)

பிரளயகாலத்தில் ஆலிலைமீது பள்ளி கொண்ட திருமால், இராமனாக அவதரித்த போதும் ஆலிலை போன்ற வயிற்றில் தங்கியிருந்ததாகக் கூறியிருப்பது ஏற்புடைத்தே.

இத்தகைய ஆலிலையும் சீதையின் வயிற்றிற்கு உவமை யாகாது என்று கூறி, தம் காவியத் தலைவியின் சிறப்பை நயம்பட உரைக்கிறார் கம்பர் (கிட் : 758)

இராமன்படையை அழிக்கும் பொருட்டு வேள்வி செய் வதற்காக இந்திரசித்து ஓர் ஆலமரத்தை நோக்கிச் சென்ற தாக ஓர் இடத்தில் கூறப்பட்டுள்ளது.

'கால மீதெனக் கருதிய விராவணன் காதல்
ஆல மாமர மொன்றினை விரைவினி னடைந்தான்'

(யுத் : 2538)

இங்ஙனம் ஆலமரத்தினடியில் யாகம் புரிந்ததாகக் கூறி யிருப்பதிலும் ஓர் ஆழ்ந்த கருத்து புதைந்திருப்பதாகத் தோன்றுகிறது. அசுவத்தாமன் பாண்டவரைக் கொல்லுமாறு ஆலமரத்தடியில் பெரும் வேள்வி புரிந்ததாகப் பாரதம் கூறு கின்றது. அங்கு அசுவத்தாமனின் எண்ணம் ஈடேறவில்லை. இங்கும் இராமனை அழிக்க எண்ணும் இந்திரசித்தின் எண்ண மும் நிறைவேறவில்லை. அதனை முன் சுட்டி விடுகிறது இக் குறிப்பு.

---

# இலஞ்சி (மகிழமரம்)

Sapotaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Mimusops Elengi (pointed leaved ape flower) என்றழைக்கப்படுகிறது. இது 50 அடி உயரம் வரையிலும் வளரும். பல வெண்ணிற அகவிதழ்கள் ஒன்று சேர்ந்து குழாய் போன்றிருக்கும். கம்பராமாயணத்தில் இம்மரம் 'இலஞ்சி' என்ற பெயரால் குறிக்கப்படுகிறது (சுந் : 534) இராமனின் திருவுந்திக்கு ஒப்பாகக் கூற வேறு உவமானம் இல்லாத காரணத்தால் மகிழமலரையொக்கும் என்று கூறுகிறார் கம்பர்.

'.................................. மணியுந்தி நேரினி
இலஞ்சியும் போலும்வே றுவமை யாண்டரோ'

(சுந் : 534)

---

# இலவங்கம்

Myrtaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இச்சிறுமரம் Eugenia Ganyophyllata என்று அழைக்கப்படுகின்றது. கிழக்கிந்தியத்தீவுகளிலும், தென்னிந்தியாவிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும், மடகாஸ்சுர், கயாளு, பிரேசில் ஆகிய இடங்களிலும் இது பயிரிடப் படுகிறது. இதில், பூக்கள் கிளைகளில் கொத்துக் கொத்தாக மலரும். விரியாத பூ மொட்டுகளைப் பறித்து, காயவைத்து வெற்றிலையோடும், தின்பண்டங்களோடும் வாசனைப் பொருளாகப் பயன்படுத்துகின்றனர். காயவைத்து இவ்வாறு பயன்படுத்தப்படும் பூமொட்டு கிராம்பு என்றழைக்கப்படுகிறது.

கம்பரது காவியத்தில் இலவங்கம் என்ற சொல் ஓரிடத்தில் மட்டுமே பயிலப்பட்டிருக்கிறது. சுரபுன்னை மலர்களோடு இலவங்க மலர்களையும் சேர்த்து அணிந்ததாகக் கூறப்படுகின்றது.

'கோடுலா நாகப் போதோ டிலவங்க மலருங் கூட்டிச்

சூடுவார்......................................................'

(பால : 14 : 46)

---

# இலவு

சங்க இலக்கியத்திலும், பிற்கால இலக்கியங்களிலும் குறிக்கப்படும் இலவமரம் தற்காலத்தில் முள்ளிலவம் என்று அழைக்கப்படுகிறது. Malvaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Bombax Malabaricum என்றழைக்கப்படுகிறது. இதன் ஆங்கிலப்பெயர் Red Silk Cotton என்பதாகும்.

இது மிகப் பெரிதாக வளரும் ஓர் இலையுதிர் மரமாகும். கிளைகள் மரத்தைச் சுற்றிலும் அடுக்காக ஏறக்குறையக் கிடைமட்டத்தில் வளரும். இலைகள் பெரியவை. இதன் பூக்கள் ஒள்ளிய சிவப்பாக (brilliant crimson) இருக்கும். வெயிற்காலத்தில் இலவ மரம் பலநாட்கள் இலையின்றித் தோற்றமளிக்கும். அக்காலத்தில் இலையில்லாத கிளை முழுவதும் வரிசை வரிசையாகப் பூக்கள் மலர்ந்து காணப்படுவது கார்த்திகை விளக்கு வைத்தாற்போல் இருப்பதாகச் சங்கப் புலவர்கள் கூறியிருப்பது மிகப் பொருத்தமான உவமையாக அமைகின்றது

'இலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாய மலிபுதொகு பெடுத்த
வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி
கயந்துக ளாகிய பயந்தபு கானம்' (அகம்: 11)

இலவின் பூக்களைச் சிவப்பு நிறம் காரணமாக நெருப்புக்கு உவமித்துள்ளனர்.

'எரியுரு உறழ இலவ மலர' (கலி; 33)

'எரிநிறத் திலவுமுல்லையு மன்றியும்' (சிலப் : 5 : 214)

இலவமலரின் இதழ்கள் தடித்து இருக்கும் (petals are fleshy) இத்தன்மையைக் கம்பர். 'துவள்வில விலவம்' (கிட்: 668) என்று குறிப்பிடுகிறார்.

இத்தகு சிவந்த, தடித்த இலவ மலரை மகளிர் வாயிதழோடு ஒப்பிட்டிருப்பது பொருத்தமானதே.

'இலவச் செவ்வாய்' (பால: 5: 38) சிலப்பதிகாரத்திலும் இந்த உவமை கையாளப் பட்டிருக்கிறது.

இத்தகைய சிவந்த இலவமலரும் சீதையின் அழகிய வாயின் செந்நிறத்துக்கு முன் வெட்கி வெண்ணிற மடைகின்றனவாம்.

'துவள்வில விலவம்...................
..............................சாலத்
தவள மென்றுரைக்கும் வண்ணஞ்
சிவந்துதேன் றதும்பு மாவின்
குவளையுண் கண்ணி வண்ண
வாயது கூறியு மஃதே' (கிட் : 768)

# உழிஞை

Sapindaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Cordiospermum Halicacabum என்றழைக்கப்படும் ஒரு கொடி. இதனை முடக்கொற்றான் என்றும் கூறுவதுண்டு. கொடியாக வளர்வதால் சங்கப்பாடல்கள் இதனை 'நெடுங் கொடியுழிஞை' (புறம் : 76) என்றழைக்கின்றன.

இது இந்தியா நெடுகிலும் சமவெளிகளில் வளர்கிறது. கொடியாக வளரும் இதன் தண்டும் கிளைகளும் கம்பி போன்று மெல்லியவாகவும், வலியனவாகவும் இருக்கும். மூன்று சிற்றிலைகளையுடைய கூட்டிலைகள் மாற்றொழுங்கில் அமைக்கப்பட்டிருக்கும். இலை விளிம்புகள் பல்போன்று இருக்கும். பூக்கள் சிறியவை. பூக்காம்புகள் மெல்லியவை. பூவிற்குக் கீழே இரண்டு சுருள் வடிவான பற்றுக் கம்பிகள் இருக்கும். கனி பலூன் போல உப்பிக்கொண்டிருக்கும். இதனால்தான் இதனை ஆங்கிலத்தில் Balloon vine என்றழைக்கின்றனர். விதைகள் கறுப்பாகவும் உருண்டையாகவும் இருக்கும். ஒவ்வொரு விதையிலும் இதயவடிவான ஒரு வெள்ளை அடையாளம் இருக்கும். இதிலிருந்து தான் இக்கொடியின் சாதிப்பெயர் (cardiospermum) வந்தது.

போரின் ஒவ்வொரு நிலைகளையும் தனித் தனிப் பெயரால் அழைத்தனர் தமிழ்ப்பெருங் குடிமக்கள். பகைவர் அரணை முற்றுகையிடுவது உழிஞைப் போர் என்றழைக்கப்பட்டது. இப்போருக்குச் செல்வோர் உழிஞை மலர்களினால் ஆன மாலையைச் சூடிச் செல்வதால், இம்மலரின் பெயரையே இத் திணைக்கும் அமைத்தார்கள். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உழிஞை சூடிப் போர்க் கோலம் கொண்டு நிற்கும் காட்சியை வியந்து பாடுகிறார் இடைக்குன்றூர் கிழார்.

'நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியன் மாலையொடு பொலியச் சூடி' (புறம் : 76)

இராமனுடன் வந்த வானரப் படை இராவணனது அரணின் எல்லா வாயில்களையும் முற்றுகையிட்டு விட்டது. இந்நிலையில் இராவணன் மனதில் சிறிது கலக்கம் ஏற்படுகிறது. இதைக்கண்ட நிகும்பன் 'நமது பகைவர் சூடிய மதில் முற்றுகைக்குரிய உழிஞைப் பூக்களை அழித்தற்கு ஆயிரம் வெள்ளம் இலங்கைப்படை நொச்சி சூடியிருக்கையில் கலக்கத்திற்கு இடமுண்டோ? என்று கேட்கிறான். இதன் மூலம் இராவணன் நகரை முற்றுகையிட வந்த இராமனது படைகள் உழிஞை சூடினதை அறிகிறோம்.

'எழுபது வெள்ளத் துற்ற குரக்கின மெயிலை முற்றும்
தழுவின வென்று செய்யத் தக்கது சமைதி போலாம்
அழுவநீர் வேலை யன்ன வாயிர வெள்ள மன்றே
உழிஞையைத் துடைக்க நொச்சி யுச்சியிற் கொண்ட
துன்னூர்.

(யுத் : 896)

---

## ஊர்மத்தம் (ஊமத்தை)

இந்த இனத்தில் பெரும்பான்மை செடிகளாகவே வளரும். வெப்பமான பகுதிகளில் உலகில் எங்கும் இது பரவியுள்ளது. Solanaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இச்செடி Datura எனப்படும். இவை பெரும்பாலும் குப்பை மேடுகளிலும், பாழிடங்களிலும், விளைபுலங்களில் களைகளாகவும் வளரும். சிலவற்றைத் தோட்டங்களில் பூவின் அழகுக்காக வளர்ப்பதுண்டு.

இதன் இலைகள் பெரியவை. இவற்றின் விளிம்பு அலை போன்றிருக்கும். பூ மிகப் பெரிதாக, எக்காள வடிவினதாக

இலேக்கக்கங்களில் தனித்தனியாக நிமிர்ந்தோ அல்லது கீழ் நோக்கித் தொங்கிக் கொண்டோ இருக்கும். மலர் பெரும் பாலும் வெண்ணிறமாகவோ சிறிது ஊதா நிறம் கலந்தோ காணப்படும். சில இனத்தில் கனியின் புறத்தில் கூரிய முட் கள் இருக்கும். இச்செடிக்கு ஒருவித அருவருப்பான நாற்றம் உண்டு. வேர் முதல் விதை வரையில் எல்லாப் பாகங்களும் நஞ்சுள்ளவை. இதனுல், இதன் கனியை உண்டால் ஒருவித மான மயக்கநிலே ஏற்படும். இத்தன்மையை உணர்த்த விரும் பிய கம்பர், யானேமேல் ஏறிப் போர்க்களம் நோக்கி வரும் போர்மத்தனே வர்ணிக்குமிடத்து, அவன் ஊமத்தங்காயைத் தின்ருல் ஒத்த மயக்கத்தையுடையவனுக இருந்தான் என்று கூறுகின்ருர்.

'ஊர்மத்த முண்டாலன்ன
மயக்கத்தா னுருமைத் தின்பான்
போர்மத்த னென்பான் வந்தான்
புகர்மத்தப் பூட்கை மேலான்'

(யுத் : 1875)

உமையொருபாகர் எருக்கு, கூவிளே இவற்றுடன் ஊமத்தமலரையும் தம் சடைமுடியில் அணிந்த செய்தி கூறப் பட்டுள்ளது.

'கரந்தை மத்தமோ டெருக்குலர் கூவிளே கடுக்கை
நிரந்த பொற்சடை ... ......................................'

(பால : 9 : 52)

---

# எருக்கு

Asclepiadaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த calotropis Gigantea என்றழைக்கப்படும் இது ஒரு குற்றுச் செடியாகும். இந்தியாவெங்கும் தரிசாகக் கிடக்கும் இடங்களிலெல்லாம் எருக்கு வளர்கிறது. இச்செடியின் எந்தப் பாகத்தை ஒடித்தாலும் வெண்மையான பால் வடியும். இலைகள் எதிரொழுங்கின; காம்பில்லாதவை. மலர்கள் வெண்மை அல்லது சற்று ஊதா கலந்த நிறமாக இருக்கும். பொதுவாக, இக்குடும்பத்தில் உள்ள மலர்கள் பூச்சிகளால் மகரந்தச்சேர்க்கை (Pollination by Insects) நடைபெறுவதற்கு ஏற்றவாறு தனிப்பட்ட அமைப்பினையுடையவையாய் விளங்குகின்றன. காய் வெடித்து மெல்லிய விதைகள் பட்டுப்போன்ற பஞ்சின் உதவியால் காற்றில் பறந்து பரவும். இப்பஞ்சினை மெத்தை, தலையணைகளில் அடைக்கிறார்கள். இதன் பாலில் ரப்பர் சத்து உள்ளதால் இதைப்பல முறைகளில் பயன்படுத்துகிறார்கள்.

வெள்ளெருக்கினைச் சிவபெருமானுக்கு உரியதாகக் கூறுவர். கம்பராமாயணத்தில் மூன்று இடங்களில் எருக்கு பற்றின குறிப்பு வருகின்றது. இம்மூன்று இடங்களிலுமே சிவபெருமானது சடைமுடியில் எருக்கமலர் அணிந்திருந்த செய்தி தான் கூறப்படுகிறது.

'வெள்ளெருக்கஞ் சடைமுடியான்' (யுத் : 3878)

அனைத்தையும் அழித்தாடும் ஆற்றலுடை சிவபெருமானுக்கு வறண்ட பாழிடங்களில் ஆட்சி புரியும் எருக்கமலர் ஏற்புடையதாகியதில் வியப்பில்லை.

மடலேறும் தலைவன், எருக்கம்பூவை இணைத்துக் கட்டப்பட்ட கண்ணியை அணிந்ததாகக் கலித்தொகை கூறுகின்றது.

'அணியலங்கு ஆவிரைப் பூவொடு எருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து' (கலி : 139)

---

# எள்

இது உலகத்தில் உள்ள ஏனைய எண்ணெய் வித்துக்கள் எல்லாவற்றையும் விடச் சிறந்தது; பழமை வாய்ந்தது; சம வெளிகளிலும், 4000 அடிக்கு மேற்படாத உயரமுள்ள நிலத்திலும் எள் விளைகிறது. இஃது ஒரு கோடை காலப்பயிர். எள் பயிரிட மெல்லிய மணல் கலந்த நிலமே மிகவும் ஏற்றது.

pedaliaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த, Gingelly என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் இதன் தாவரவியற் பெயர் Sesamum Indicum. இச்செடி 2 முதல் 4 அடி உயரம் வரை வளரும். இதன் தண்டு சதுரமாகவும், நேராகவும் இருக்கும். மலர்கள் தனியாகவோ, இரண்டு மூன்று சேர்ந்தோ உண்டாகும். இவை தூய வெள்ளை முதல் இருண்ட ஊதாவரை பலவகையான நிறங்களைக் கொண்டிருக்கும். இப்பூக்களுக்கேயுரிய தனிப்பட்ட உருவ அமைப்பினால் இவற்றை மகளிர் மூக்கிற்கு உவமையாகக் கூறுகின்றனர் புலவர் பெருமக்கள்.

'எள்ளொத்த கோல மூக்கி னேந்திழை'

(பால : 17 : 18)

காய்களில் பலவிதைகள் இருக்கும். இவை தலைப்பக்கம் வெடித்து விதைகளை இலேசாகக் கொட்டி விடுகின்றன.

விதைகள் கரிய நிறமுடையவை. இதனையே கம்பர் 'காரி எள்' (யுத்: 2539) என்று குறிக்கிறார். எள்ளின் விதைகள் உருவத்தில் மிகவும் சிறியவையாகும். சிறுமை அளவைக் குறிக்க ஒரு சின்னமாகப் பயன்படுவதை 'எள் போட்டால் எள் விழாது' என்ற வழக்கில் காண்கிறோம். இவ்வழக்கை ஒட்டியே கம்பரும், எள்ளினை இடவும் இடமில்லாதவாறு கார் காலத்தில் இந்திர கோபப் பூச்சிகள் மிகுதியாக எழுந்தன என்று பேசுகிறார்.

'எள்ளிட விடமொன் றின்றி
யெழுந்தன விலங்கு கோபம்'

(கிட் : 460)

இதே பழமொழியைக் கம்பர் மக்கட் பெருக்கத்தை உணர்த்தவும் (அயோ: 5 : 8) படைப்பெருக்கத்தை உணர்த்தவும் (யுத்: 2469) பயன்படுத்தியுள்ளார்.

இறைவனின் இயல்பை உணர்த்துவதற்கும் கம்பனுக்கு இப்பழமொழி கைகொடுத்து உதவுகிறது. திருமால் எல்லா இடங்களிலும் நிறைந்து இருக்கும் தன்மையைத் தான் கம்பர் இப்பழமொழியால் விளக்குகிறார்.

'எள்ளுறையு மொழியாமல் யாண்டையினு முளனாகி
உள்ளுறையும் ஒருவன்.........................................'

(சுந் : 329)

எள் மிகச்சிறந்த எண்ணெய்விதை. இதன் எண்ணெய்க்காகவே இது பயிர் செய்யப்படுகிறது. எள்ளும் எண்ணெயும் இணைந்தமைந்த தன்மையை அடிப்படையாகக் கொண்டு அழகியதொரு தத்துவப் பொருண்மையைக் கம்பர் விளக்கி விடுகிறார். எள்ளினுள் எண்ணெய் இருப்பது போல எல்லாப் பொருட்களிலும் இறைவன் நிறைந்து நிற்கும் தன்மையைப்பிரகலாதன் வாயிலாகக் எடுத்துரைக்கிறார் கவிஞர்.

விளக்கற்கரிய பெரும்பொருளாம் திருமாலின் தன்மையை, அவனை நோக்க மிகச் சிறிய எள்ளை வைத்து விளக்கிய நயம் சாலச் சிறந்துள்ளது.

'.................................. எள்ளி
வெண்ணெயும் போல வெங்கும்
அலகில்பல் பொருளும் பற்றி
முற்றிய வரிகா ணத்தா' (யுத் : 249)

வேள்வி செய்யும் போது வேள்வித் தீயில் எள்ளினைச் சொரியும் வழக்கமிருந்தது என்பதை ஒரு பாடலால் உணர லாம். இந்திரசித்து புரிந்த வேள்வியைக் குறிப்பிடுங்கால் இச்செய்தியைத் தருகிறார் கம்பர்.

'அம்பினுற் பெருஞ் சமிதைக ளமைத்தன னனலில்
தும்பை மாமலர் தூவினன் காரியெட் சொரிந்தான்'
(யுத் : 2539)

---

# ஏலம் (சடாமாஞ்சிகை)

Valerianeae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Nardostachys Jatamansi (spikenard herb) என்னும் செடி சடாமாஞ்சிகை எனப்படுகிறது. இக்குடும்பத்தில் உள்ள செடிகள் சிறு செடிகளாகும். இவை ஒரு பருவம் அல்லது பல பருவம் வாழ்வன, இவற்றின் மட்டத்தண்டுக் கிழங்கு நல்ல மண முள்ளது. இலைகள் எதிரொழுங்கின. பூக்கள் நுனிமஞ்சரிகளாக உண்டாகும்.

கம்பராமாயணத்தில் இது ஒரே இடத்தில் தான் சுட்டப்படுகிறது. இராமனும் இலக்குவனும் சுக்ரீவன், அனுமன்

என்போருடன் கிட்கிந்தைக்குச் செல்லும் வழியில் பல மரங்கள் அடர்ந்து வளர்ந்திருப்பதைக் காட்டும் ஆசிரியர், 'ஏலம்' என்ற பெயரால் சடாமஞ்சிகையையும் குறிக்கிருர். 'ஏலம்' என்ற இச்சொல்லுக்கு உரையெழுதுகையில் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் 'இது ஏலம் என்னும் நறுமணக் காய்களைத் தரும் செடி அன்று, சடாமாஞ்சில் என்னும் ஒருவகை மரமாகும்' என்று கூறுவதிலிருந்து, இது எலத்தினின்று வேறுபட்டது என்பதை உணரலாம். உ. வே. சா. அவர்கள் இதை மரம் என்று குறிப்பிட்டிருக்கிருர் ஆனல் இன்று சடாமாஞ்சிகை என்ற பெயரால் அறியப்படும் spikenard herb என்பது செடியாகும். எனவே இச்செடியைத் தான் கம்பர் 'ஏலம்' என்ற பெயரால் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

---

# ஏழிலம்பாலை

இது நடுத்தர அளவுள்ள ஒருமரம். மேற்கே ஆப்பிரிக்கா முதல் கிழக்கே பசிபிக் வரையிலும் இது பரவியிருக்கிது. Apocynaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதன் தாவரவியற் பெயர் Alstonia scholaris.

இம்மரத்தின் மணம்பற்றி, கம்பராமயணத்தில் குறிக்கப் பட்டுள்ளது. மலர்கள் மலர்ந்துள்ள ஏழிலம்பாலையிலிருந்து வீசும் மணம் யானையின் மதமணம் போன்றிருக்கின்றதாம். இம்மணத்தை மோப்பத்தால் உணர்ந்து, மதயானையைக் காணின் வெறிகொண்டு அதனை அடக்க எழுவது போல் எழுகின்றது ஒரு யானை. பாகனுக்கு அடங்காமல் மதமணம் வந்த வழியை நாடிச்சென்று அவ்வேழிலம் பாலை மரத்தைப் பொடிப் பொடியாகுமாறு முன்னங்கால்களால்

தேய்த்து அழிக்கின்றது. இக்காட்சியைக் கம்பர் மொழியில் காண்போம்.

'பாத்த யானையின் பதங்களிற் படுமத நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலம் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு'

(பால : 14 : 6)

---

# கண்டில் வெண்ணெய்

இது umbelliferae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த pimpinella Anisum என்னும் ஒரு செடி. இதைக் கம்பர் ஒரே இடத்தில் குறித்துச் செல்கிறார். குறிஞ்சி நிலம் வழியாகப் பாய்ந்து செல்லும் சரயு நதியில் பல நறுமணப் பொருட் களின் மணமும் வீசிற்று என்று கூறும் கம்பர் கண்டில் வெண் ணெயையும் குறிக்கிறார்.

'கடுக்கைநாள் வேங்கை கோங்கு பச்சிலை கண்டில்
(வெண்ணெய்
அடுக்கலி னடுத்த தீந்தே னகிலொடு நாறு மன்றே'

(பால : 1 : 13)

கண்டில்வெண்ணெய், ஓமாலிகை முப்பத்திரண்ட னுளொன்று என்று உரையில் குறிக்கப்பட்டுள்ளது.

---

# கரந்தை

இது Compositae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு புதர்ச்செடி. இதன் தாவரவியற் பெயர் Sphaeranthus Indicus இது கம்பரால் ஒரே இடத்தில் மட்டுமே பயன் படுத்தப்பட்டுள்ளது. இங்கு, சிவபெருமானின் சடைமுடியில் கரந்தை அணிந்திருந்த செய்தி குறிக்கப்படுகிறது.

'கரந்தை மத்தமோர பெருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து....'

(பால : 9 : 52)

---

# கருவிளை

இது Leguminosae என்ற குடும்பத்தில் papilionaceae என்றும் உட்குடும்பத்தைச் சேர்ந்த Clitoria Ternatea என்னும் கொடியாகும். இது ஆங்கிலத்தில் Mussell Shell creeper என்று அழைக்கப் பெறும். இதன் மலர்கள் நீலநிறமானவை. இத்தகைய நீலமலர்கள் நிறைந்து நிற்கும் தோற்றம், மயில் தோகையை விரித்தது போன்றிருப்பதாக நற்றிணை நவில் கின்றது. (நற் : 262) கருவிளை மலரைக் கண்ணுக்கு ஒப்பிட்டுக் கூறுவது பயின்று வரும் உவமையாகும்.

'கண்ணெனக் கருவிளைமலர.....................................'

(ஐங் : 464)

இதே உவமையைப் பயன்படுத்தி ஒரு அழகான காட்சியை அமைத்துத் தருகிறார் கம்பர். சோலையின் ஒரு புறத்தே மயில்கள் நடனமகளிரைப் போன்று ஆடுகின்றன. அந்நடனத்திற்கேற்றவாறு இசைக்கப்படும் யாழ் போன்று வண்டுகள் பாட, மத்தளங்கள் போன்று மேகங்கள் ஒலிக்கின்றன. செங்காந்தட் பூக்கள் ஆடல் அரங்கின் எழில் கூட்டும் தீபங்களைப் போன்று ஒளிவீசுகின்றன. இத்தகைய அழகிய நடனக் காட்சியைக் கண்டு களிப்போரது கண்கள் போன்று கருவிளை மலர்ந்து விளங்குகின்றன. கம்பர் காட்டும் இக்காட்சி என்றும் நம்மனதை விட்டகலாது என்பது உறுதி.

'..........காஞ்போர் விழியொத்த விளையின் மென்பூ'

(கிட் : 463)

இராவணனை அழித்து வெற்றிமாலை சூடி நிற்கும் இராமன், சீதையை அலங்காரத்துடன் அழைத்து வருமாறு விபீடணனை அனுப்புகிறான். இராமனின் ஆணைக்கேற்ப, சீதைக்கு ஒப்பனை செய்ய தேவமகளிர் வருகின்றனர். சிவந்த திருமேனியை உடைய பிராட்டிக்கு அணியும் உடை இருண்ட நிறத்தில் இருப்பதன்றோ பொருத்தமாக அமையும். இதை உணர்ந்த அவர்கள் பிராட்டியின் சிவந்த திருமேனியில் கருவிளைமலர் போன்ற நிறமுடைய பட்டாடையை அணிவிக்கின்றனர். ஒவ்வொருவரின் மேனி நிறத்திற்கேற்ற ஆடைகளை அணியும் வழக்கத்தை இன்றும் காண்கிறோம். கம்பரின் உலகியல் அறிவினை இங்குக் காண்கிறோம்.

'கருவிளை மலரின் காட்சிக்
காசறு தூசு காமன்
திருவிளை யல்குற் கேற்ப
மேகலை தழுவச் செய்தார்'
'..............................

(யுத் : 3937)

---

# கவிர்

முருக்க மரத்தோடு மிகவும் ஒத்துள்ள மற்றொரு மரம் 'கவிர்'. இது தற்காலத்தில் முள் முருங்கை என்றும் கல்யாண முருங்கை என்றும் அழைக்கப்படுகிறது. Leguminosae என்னும் குடும்பத்தில் papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் ஆங்கிலத்தில் Indian Coral Tree என்றழைக்கப்படுகிறது. இதன் தாவரவியற் பெயர் Erythrina Indica என்பதாகும்.

முருக்கும் கவிரும் ஏறக்குறைய ஒரே வடிவான இலைகளையும் ஒரே நிறமான பூக்களையும் உடையவை. இதனால் முருக்கும் கவிரும் ஒன்றேயென்று மயங்கி உரை எழுதலாயினர். கம்பராமாயணத்தில் உள்ள குறிப்புக்களை வைத்துக் கொண்டு இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை அறிய இயலவில்லை. ஆனால் சங்க இலக்கியத் தாவரங்களை ஆயும் பி. எல். சாமி அவர்கள், இவை இரண்டும் வேறு என்றும், சங்ககாலப் புலவர்களால் இவை நன்ருகப் பிரித்துணரப் பட்டிருந்தன என்றும் குறிப்பிடுகிருர். அவர் கருத்துப்படி முருக்கு என்பது Butea Frondosa என்ற மரம்; Erythrina Indica என்பதே கவிர்.

இது நடுத்தர அளவுள்ள ஓர் மரமாகும், 60 அடி உயரம் கூட வளர்வதுண்டு. கிளைகளின் மேல் சிறிய முட்கள் அமைந்திருக்கும். இலைகள் மூவிலைக் கூட்டிலைகள். பூக்கள் பெரியவை. கவிரின் பூ முருக்கம்பூவை விடச் செக்கச் சிவந்து கருஞ்சிவப்பாகத் (crimson) தோன்றும். மகளிரின் வாய் கவிர்ப்பூவின் இதழ் போலச் சிவந்திருப்பதாக அகப்பாடலொன்று கூறுகிறது.

'கவிரித ழன்ன காண்பின் செவ்வாய்
அந்தீங் கிளவி ஆயிழை மடந்தை'. (அகம் : 4)

கம்பரும் 'கவிர் வாய்ச் சீதை' (அயோ : 1 : 61) என்று வாயித ழுக்கு உவமையாகக் கவிர்ப்பூவைக் குறிப்பிடுகிறார். கவிரின் செம்மலரைச் செக்கர் வானத்திற்கும் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

'கவிரொளிச் செக்கர் கூற்றை' (சுந் : 277)

---

## கழற்சி

இது அகன்று படரும் கிளைகளுள்ள பெரிய முட்செடி யாகும். Leguminosae என்ற குடும்பத்தில் caesalpineae என் னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இது caesalpina crista அல்லது caesalpinia Bonducella என்றழைக்கப்படுகிறது. இந் தியா, இலங்கை, பர்மா முதலிய நாடுகளில் சிறப்பாக வெப் பப் பகுதிகளிலும் கடற்கரையை அடுத்த பகுதிகளிலும் வளர்கிறது. கிளைகள் நெடுகவும், இலைக்காம்புகளிலும் வளைந்த முட்கள் உண்டு. காயின் மேலும் கம்பி போன்ற முட்கள் நிறைந்திருக்கும். இந்திரசித்தின் வாளிகளால் தைக்கப்பெற்ற சுக்கிரீவனின் உடலுக்கு உவமையாக முட்கள் நிறைந்த கழற் சிக்காயைக் கூறுகிறார் கம்பர். வாளிதைத்த உடம்பிற்கு இதைவிடப் பொருத்தமாக வேறு உவமை கூற இயலுமா என்பது ஐயமே.

'கதிரவன் காதன் மைந்தன்
கழலிளம் பசுங்கா யன்ன
எதிரெதிர் பகழி தைத்த
யாக்கையன்..................' (யுத் : 2136)

இராமனது சரங்களால் தாக்கப்பட்ட அரக்கர்களின் தோற்றமும் கம்பருக்கு கழற்சிக் காய்களையே நினைவுக்குக் கொண்டு வருகிறது.

'மொய்த்தாரையொ ரிமைப்பின்றலே
முடுகத்தொடு சிலேயால்
தைத்தானவர் கழற்றிண்பசுங்
காயொத்தனர் சரத்தால்' (யுத் : 3344)

கழற்சிச் செடியின் இலேகள் இரட்டைக் கூட்டிலேகளா கும். பூக்கள் நீண்ட பூத்தண்டில் கதிர் போல அடர்ந்திருக் கும். கனிக்குள் ஒன்ருே இரண்டோ விதைகள் காணப்படும். இவ்விதைகள் சிறந்த மருந்தாகப் பயன்படுகின்றன. சிறுவர் கள் விளேயாடுவதற்கு இக்காய்களேப் பயன்படுத்துவர்.

---

## கள்ளி

Eubhorbiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Euphorbia என்னும் இனம் பொதுவாகக் 'கள்ளி' என்ற ழைக்கப்படுகிறது. இந்த இனத்தில் செடிகளும், புதர்ச் செடி களும், மரங்களும் உண்டு. இவற்றுள் கள்ளி மரத்தினைப் பற்றிக் கம்பர் குறித்துள்ளார். இராமனும், இலக்குவனும், விசுவாமித்திரனும் ஒரு கடும்பாலே வழியாகச் செல்கிருர்கள். அப்பாலேயின் வெம்மையை ஆசிரியர் மிகச் சிறப்பாக வர்ணிக் கிருர். அங்கு, பெரும் கள்ளிமரத்தின் அடிப்பகுதி பேய் உடல் பிளந்து நின்ருற் போலப் பிளவுபட்டு, அதினின்று தோன்றிய அகிற்கட்டைகள் எங்கும் சிதறிக் கிடக்கின்றன. கள்ளியினின்று அகில் தோன்றும் என்ற செய்தியை இப் பகுதி உணர்த்துகிறது.

'பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்கசு ரகில்களும்...............'
(பால : 7 : 8)

இவ்வாறு கள்ளியினின்று அகில் பிறக்கும் என்பதை,

'கள்ளி வயிற்றின் அகில் பிறக்கும்'

(நான்மணி : 6)

என்ற நான்மணிக்கடிகை பாடலாலும் அறியலாம்.

---

# கற்பகம்

புலவர்களால் படைக்கப்பட்ட ஒரு கற்பனை மரமே கற்பகம். தெய்வலோகத்தில் உள்ளதாகவும் தெய்வத் தன்மை பொருந்தியதாகவும் கூறப்படும் இம்மரம் இராமாயணத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது. இதைப்பற்றிக் கம்பர் 52 இடங்களில் கூறியுள்ளார். இம்மரம் தேவருலகத்தில் உள்ளதாகக் கருதப்படுவதால் தேவருலகைக் 'கற்பக நாடு' (பால: 6, 1) என்று அழைக்கிறார் கம்பர்.

கையில் கடகமென்னும் வளைகளை அணிந்திருக்கும் இராமனைக்கண்ட கம்பருக்கு, தன் எதிரில்வந்து விரும்பிக் கேட்போருக்குக் கொடுப்பதற்காகச் சிறந்த பொன்னினாலும், இரத்தினங்களாலும் ஆகிய அழகிய வளைகளைத் தனது கொம்புகளில் ஏந்தி நிற்கும் கற்பகமரம் நினைவிற்கு வருகிறது.

'மாண்ட பொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை யீன்ற தாமெனக்
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே'

(பால: 21 : 58)

கற்பகம் கேட்போருக்குக் கேட்டவற்றையெல்லாம் அளிக்கும் தெய்வமரம். இராமனும் அதுபோன்று தன்னிடம்

உண்டாகும். நடுவிலுள்ள மண்டலச் சிறுபூக்கள் (Disc florets) காவிச் சிவப்பு நிறமுள்ளவை. வெளியே சுற்றியுள்ள கதிர்ச் சிறுபூக்கள் Ray florets) மலட்டுத் தன்மையுள்ளவை. மண்டலச் சிறுபூக்கள் இருபாலின (Bisexual)

குசும்பைச் செடியின் மகரந்தத் தூள்கள் மட்டுமே கம்பரைக் கவர்ந்தன போலும். ஏனெனில் குசும்பைச் செடியின் மகரந்தப் பொடிகளைப் பற்றியல்லாது வேறு செய்திகள் ஒன்றும் கம்பராமயணத்தில் கூறப்படவில்லை. அதிகாயன் சேனையும் இலக்குவன் சேனையும் கைகலக்கின்றன. இதனால் போர்க்களத்தே எழுந்த புழுதியானது குசும்பையின் சுண்ணத் தொகுதி போன்று விண்ணையும் கடந்து சென்றதாம்.

'பசும்படு குருதியிற் பண்டு சேறுபட்
டசும்புற வுநகிய வுல்கு மார்த்தெழக்
குசும்பையி னறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையுங் கடந்தது விரிந்த தூளியே'

(யுத் : 1749)

குசும்பை விதைகளில் 30% எண்ணெய் அடங்கியுள்ளது. இது தானாகவே உலரும் தன்மையுடையதாகையால், மெழுகுத்துணி தயாரிக்க இதைப் பயன்படுத்துகிறார்கள்.

---

# குமிழ்

இது Verbenaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்தது Gmelina என்பது இதன் பெயர். இந்த இனத்தில் மரங்களும் புதர்களும் உள. இவற்றுள் சில முள்ளுடையவை.

இலைகள் எதிரொழுங்கின. பூக்கள் பெரியவை; மஞ்சள் நிற முடையவை; அழகிய கொத்துக்களாகப் பூக்கும். புற இதழ் கள் 4-5. மணி வடிவாக இருக்கும். அகவிதழ்கள் 4-5. இவை ஒருபக்கம் வளைந்து புடைத்துக் கொண்டிருக்கும். இவ்வாறு இருப்பதால் இம்மலரை வடிவம் பற்றி, பெண்களின் மூக்கிற்கு உவமையாகக் கூறியிருப்பது மிகப் பொருத்தமாக அமைகின் றது.

'... ... ....................குமிழேர் மூக்கு' (சிட் : 628)

சிலப்பதிகாரத்திலும் 'இடைக்குமிழ் எழுதி' (சிலம்பு : 5 : 205) என்று இந்த உவமை கையாளப்பட்டிருப்பதைக் காணலாம்.

இக்குமிழமலர் சீதையின் மூக்கிற்கு வடிவால் ஒப்புமை பெற்றாலும், ஒளியின்மையால் அவ்வொப்புமையினை இழந்து நிற்கிறது.

'.......................— தொன்மைக்
குமிழுமூக் கொக்கு மென்றால்
சோதிசெய் பொன்னு மின்னு
மணியும்போற் றுளங்கித் தோன்று'

(சிட் : 771)

மகளிர் குமிழமலர் போன்ற காதணியை அணிந்த தாக நற்றிணைப் பாடல் ஒன்று கூறுகின்றது.

வந்தோர்க்கெல்லாம் வாரிவழங்கும் கொடைவள்ளல். இத்தகைய இராமனைக் கற்பகத்தோடு ஒப்பிட்டுக் கூறுவதில் வியப்புமுண்டோ.

'கற்பக மனைய வள்ளல்' (யுத் : 2831)

அவரவர் நாட்டில் உண்டாகும் மலர்களை அணிவது தானே வழக்கம். மண்ணுலகில் தோன்றும் மலர்களை மண்ணுலக மங்கையர் சூடினர். விண்ணுலக அரம்பையர் அங்கு மலரும் கற்பக மலர்மாலையைக் கூந்தலில் அணிந்தனர்.

'.........அரம்பைய ரறல்புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக நறுமலர் காணாய்'

(அயோ : 8 : 21)

---

# காயா

Melastomaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Ironweed Tree எனப்படுகிறது. Memecylon Edule என்பது இதன் தாவர வியற் பெயர். ஒரு சிறு மரமான இது சாதாரணமாகத் தென்னிந்தியாவில் கடற்கரைப் பரப்பு முதல் 4500 அடி உயரம் வரையில் காணப்படுகிறது. இலங்கையிலும் பர்மாவிலும் இது உண்டு.

கம்பராமாயணத்தில் பூவை, காயாஎன்ற பெயர்கள் இம்மலரைக் குறிக்கின்றன.

'பூவை போனிறத்தினற்கு' (பால : 8 : 3)

'சேயா நறும்போதோ' (பால : 10 : 65)

இதன் பூக்கள் சிறியவை; இலைக்கக்கத்திலும் (leaf axil) மரக்கிளை நெடுக உதிர்ந்து போன இலைகளின் கக்கங்களிலும் சிறு கொத்துக்களாக உண்டாகும். பூக்கள் கருநீல நிறத்துதுடன் விளங்கும் இதன் காரணமாகப் பூத்திருக்கும் கிளை, மயிலின் கழுத்துப் போல இருக்குமென்பர். குறுந்தொகைப் பாடலொன்று (193)' கருநீல காயாம்பூக்கள் நிறைந்த சினையை மயிலின் கழுத்தோடு ஒப்பிட்டுக் கூறுகின்றது.

'புல்லென காயா பூக்செழு பெருஞ்சினை
மென்மயில் எருத்திற் தோன்றும்' (குறுந் : 183)

இத்தகு காயாம்பூவும் மயிற்கழுத்தும் திருமாலின் மேனி நிறத்தோடு ஒப்புமை பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளன, கம்பர், இராமன் மேனி நிறத்திற்கு ஒப்புமையாகக் கூறமட்டுமே காயாம்பூவைப் பயன்படுத்துகிறார்.

'பூவை போனிறத்தினன்' (பால : 8 : 3)

---

## குசும்பை

குசும்பைச் செடி எண்ணெய் தரும் பயிர்களில் ஒன்று. இதன் எண்ணெய் உணவுப் பொருளாகப் பயன்படுகிறது. ஆயின் சிறந்த தரமுடையதாகக் கொள்ள இயலாது.

Compositae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதன் பெயர் Carthamus Tinctorius. இதன் தண்டு பல கிளைகளாகப் பிரிந்து மெலிந்திருக்கும். இது 1½ முதல் 2 அடி உயரம் வரை வளரும். இலைகள் தண்டையொட்டியனவாகவும் (Adnate) பல் போன்ற விளிம்புள்ளனவாகவும், கூரிய முனையுள்ளவையாகவும் இருக்கும். மலர்கள் கிளைகளின் நுனியில்

# குரவம்

Rubiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Chomelia Asiatica அல்லது Webera Corymbosa என்றழைக்கப் படும் ஒரு புதர்ச்செடியாகும் (குற்றுச் செடி). இவ்வாறு குற்றுச் செடியாக வளரும் தன்மையைக் 'குறுங்காற் குரவு' (நற் : 266) 'குறுநிலைக் குரவு' (அகம் : 237) என்று சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. இங்ஙனம் குற்றுச் செடியாக மட்டுமன்றி, சிறு மரமாகவும் இது வளரும்.

இதன் கிளைகள் உருண்டு கணுக்களில் சற்றுப் பருத்திருக்கும். இலைகள் எதிரொழுங்கின (opposite). கிளை நுனிகளில் பூக்கள் கொத்துக்களாக உண்டாகும். குரவு முன்பனிக் காலத்தில் கொழுந்துவிட்டுப் பின்பனிக் காலம் சென்று இளவேனிலில் பூப்பதாக நற்றிணை கூறுகிறது. மலர்கள் வெண்மையானவை; நறுமணம் கமழ்பவை. குராமலரும், பிடவ மலரும் சிந்திக் கிடக்கின்ற இடத்தில் துயின்று எழுந்ததனால் அம்மலர்களின் மணம் படியப் பெற்ற ஆண்மயிலைக் கண்டு, பிரிந்திருந்த பெண்மயில் ஊடல் கொண்டு திரிந்ததாகக் கூறுவதிலிருந்து குராமலர்களின் நறுமணத்தை உணரலாம்.

'பூவலர் குரவொடும் புடைதவழ் பிடவீனும்
மாவலர் சொரிசூழற் றுயிலெழு மயிலொன்றின்
தூவியின் மணம்நாறத் தூணைபிரி பெடை தானச்
சேவலொ டுறவூடித் திரிவத னியல் காணாய்'

(அயோ : 7 : 7)

குரவின்பூ, வண்டுகளைத் தருவிக்கின்ற நறியநாற்றத்தைக் காற்றில் கலந்து ஈவதாக நற்றிணைப் பாடலொன்றும் (நற்:56) கூறுகிறது.

கம்பர் தம்காவியத்தில் 'குரவலர் குழலி' (அயோ:9:99) 'குராவருங்குழலி' (சுந் : 680) என்றெல்லாம் குறிப்பிடுவதி லிருந்து குராமலரைத் தலையில் சூடும் வழக்கமிருந்தது என் பதை உணரலாம். இங்ஙனம் இது சூடும் பூவாகப் பயன் பட்டது என்ற செய்தி, இடைமகன் தலையில் சூடவே பூக்கும் குரவம் என்று கூறும் நற்றிணைப் பாடலால் உறுதியாகின் றது.

'கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்'

(நற் : 266)

குராவின் அரும்பைப் பாம்பின் கூரிய பல்லிற்கு ஒப் பிட்டுக் கூறியிருப்பது சிறந்த உவமையாகும்.

'குராவரும் பனைய கூர்வா
ளெயிற்றுவெங் குருளை நாகம்'

(கிட் : 490)

சங்க இலக்கியங்களும் இவ்வுவமையைப் பயன்படுத்தியுள்ளன.

'அரவெயிற்று அன்ன அரும்புமுதிர் குரவு'

(அகம் : 237)

குரவமலரைப் பாவையென்று வைத்து விளையாடும் வழக்கம் சங்ககாலத்து மகளிரிடம் இருந்ததாகத் தெரிகின் றது.

'நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே'

(ஐங் : 334)

---

# குருந்த மரம்

Rutaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Atlantia Missionis என்று வழங்கப் பெறும்.

இம்மரம் வறட்சியான பகுதிகளில் காணப்படும். இதன் இலை மென்மையற்று இருப்பதால் 'வல்லிலை' என்று அக நானூறு கூறுகின்றது. குருந்தின் பூ நறுமணமுடையது. 'நனைப் பசுங் குருந்தின் நாறுசினை விருந்து' என்ற அகநானூற் றுப் பாடல்அடி இதன் நறுமணமான பூங்கொம்பைச் சுட்டு கிறது

கண்ணன் குருந்தொசித்த செய்தியைப் பல இலக்கியங் கள் குறித்துச் செல்கின்றன. ஆழ்வார்ப் பாசுரங்களுக்கு உரை யெழுதியவர்கள். அரக்கரின் சூழ்ச்சியால் தன்மேல் வீழ்ந்து தன்னைக் கொல்ல இருந்த குருந்த மரத்தைக் கண்ணன் முறித் ததாகக் கூறுவர். குருந்த மரமொசித்ததற்கு மற்றொரு வர லாறும் கூறுவதுண்டு. ஒரு நாள் கண்ணன் யமுனாநதியில் கோபியரோடு விளையாடிக் கொண்டிருக்கையில் அவர்க ளுடைய துகில்களையெல்லாம் கவர்ந்துகொண்டு கரையிலுள்ள குருந்த மரத்திலேறி நிற்க, அவன் தமையனான பலராமன் அங்கு வருகிறான். தன் செயலை அண்ணன் அறிந்தால் தன்னை மிகவும் பழிப்பானென்று எண்ணிய கண்ணன், யமுனையாற் றில் வீழுமாறு அக்குருந்த மரத்தை முறித்துத் தள்ளித் துகிலை யமுனை நதியிலிருந்த கோபியர் எளிதில் பெறுமாறு செய்து தானும் அந்நீரிற் குதித்து நீந்தி வேறிடம் சென்றான் என் பது அந்த வரலாறு கூறும் சுவையான நிகழ்ச்சி. இவ்வாறு கண்ணன் செய்த செயலை, சரயு நதியும் செய்கிறது. மிக்க சிறப்பினையுடைய சரயு நதியானது மலைப்பகுதிகளையெல்லாம் கடந்து முல்லை நிலத்தினூடே பாய்ந்து செல்கிறது. அந்நதி யின் ஆற்றல் வாய்ந்த நீர்ப்பெருக்கால் வழியிலுள்ள குருந்த மரங்கள் ஒடிந்து வீழ்கின்றன. இக்காரணத்தால் சரயு நதி கண்ணனைப் போன்று கம்பருக்குக் காட்சியளிக்கின்றது.

'... ......................... குருந்தொடு மருதமுந்தி
பொறிவரி யரவினுடும் புனிதனும் போலுமன்றே'
(பால ' 1 : 15)

இவ்வாறு கண்ணனுடன் மிகுந்த தொடர்பு கொண்டிருந்த காரணம் பற்றியே இம்மரத்தினை முல்லைத் திணைக்குரிய மரமாகக் கொண்டனர் போலும். மேலும் கோவலர் குருந்த மலராலான கண்ணியைச் சூடினுர்கள் என்பதையும் அறிகிறோம்.

'குருந்தம்பூங் கண்ணி பொதுவன்' (கலி : 111)

தற்காலத்தில் இம்மரத்தைப் புனலெலுமிச்சை என்றும் காட்டு நாரத்தை என்றும் கூறுவர்.

---

# குன்றிமணி

Leguminosae என்ற குடும்பத்தில் Papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த Abrus Precatorius என்பது புதர்போல வளரும் அழகிய ஒரு சுற்றுக்கொடி,

இதன் பூக்கள் அவரைப்பூ வடிவின. விதைகள் பளபளப்பாக, சிறிய பட்டாணியளவு உருண்டையாக, ஒள்ளிய சிவப்பு நிறமாகவும், ஒரு முனையில் கரும்புள்ளியுடையதாகவும் இருக்கும் (seeds bright red with black dot). யானைக் குண்டுமணி என்பது ஒரு மரத்து விதையாகும். அது பெரியதாகவும், முற்றிலும் சிவப்பாகவும், இருபுறக் குவி வடிவாகவும் இருக்கும். இரண்டே இடங்களில் தான் கம்பராமாயணத்தில் இது குறிக்கப்படுகிறது.

அரக்கர்க்கும் வானரர்கட்கும் நடைபெற்ற போரினல் தோன்றிய இரத்தப் பெருக்கு கடல் நீரோடு கலந்ததால், கடலிலுள்ள வெண்முத்துக்கள் நிறம் மாறிச் செந்நிறம் பெற்று, குன்றிமணியைப் போன்று காட்சியளிக்கின்றன.

'......................முத்தினங் குன்றியிற் றேன்ற'

(யுத் : 2289)

இராவணனும் இராமனும் ஏறிவருகின்ற தேர்களில் கட்டப்பட்ட குதிரைகளின் கண்கள் குன்றிமணி போன்று சிவந்து நமக்கு அச்சத்தையூட்டுகின்றன.

'சென்ற தேரொ ரிரண்டொடுஞ் சேர்த்திய
குன்றி வெங்கட் குதிரை....... .............'

(யுத் : 3674)

மிகப்பழைய காலம் முதலே குன்றிமணியின் விதையைப் பொன்வேலை செய்வோர் ஒரு நிறையாகப் (அளவு) பயன் படுத்தி வருகின்றனர்.

இச்செடியின் வேரிலும், இலையிலும் Glycerine என்னும் இனிப்பான பொருள் உண்டு. இதுவே அதிமதுரத்தில் (Liquorice) உள்ள பொருள். இந்தப்பொருள் இருப்பதனுல் குன்றிமணி இந்திய அதிமதுரம் (Indian Liquorice) என்றழைக்கப்படுகிறது.

---

# கூதாளம்

இது Convolvulaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Ipomaea என்னும் சாதியைச் சேர்ந்த ஒரு செடி. பொதுவாக

இந்தச் சாதியில் உள்ள மலர்கள் மணிபோன்ற வடிவமுடையவை (Companulate). இத்தகைய கூதாள மலர்கள் மலர்ந்து விளங்குவது ஆரியக் கூத்தர்களின் இனிய பாடல்கட்கேற்ப நட்டுவர் கைத்தாளம் கொட்டுவது போன்றிருக்கின்றது.

'..................................

ஆரிய வமிழ்தப் பாடற்
கோடியர் தாளங் கொட்டன்
மலர்ந்தகூ தாள மொத்த.'

(கிட் : 464)

பிறிதோரிடத்து, கூதாள மலரில் அமைந்துள்ள துளையை, பிராட்டியின் உந்திச்சுழிக்கு ஒப்பாகக் கூறின் பொருந்தாத உவமையே என்று சீதையின் எழிலைச் சுட்டுகிறார் ஆசிரியர் (கிட் : 759)

---

## கூவிளை

Rutaceae என்னும் இக்குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Aegle Marmelos என்றழைக்கப்படுகிறது. இது 20 முதல் 25 அடி உயரம் வரை வளரும். இலக்கியங்களில் மிக அரிதாகவே இம்மரம் பேசப்பட்டிருக்கின்றது. கூவிளத்தைக் 'கூவிரம்' என்று குறிஞ்சிப்பாட்டுக் கூறுகின்றது. கூவிள மலரை மாலையாகக் கட்டி அணிந்ததை நற்றிணை குறிப்பிடுகின்றது. இவ்வாறு கூவிளம் பற்றிச் சில குறிப்புக்களே சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

கம்பரும் கூவிளத்தை ஒரே இடத்தில் தான் பயன் படுத்துகிறார். சிவபெருமானின் சடை முடியில் கூவிளை சூட்டப்பட்டிருப்பதாகக் குறிக்கப்படுகின்றது.

'......................................................கூவிளை கடுக்கை

நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து'

(பால : 9 : 52)

இங்குக் கூவிளை என்பது அதன் இலையைத் தான் குறிக்கும். ஏனெனில், சிவனுக்குரிய மரமாகக் கருதப்படும் கூவிளை மரத்தின் இலைகளைத் தான் வழிபாட்டிற்குப் பயன்படுத்துவர். மிகப் புனிதமாகக் கருதப்படும் இம்மரம் பட்டுப்போன இடம் அழிந்துவிடும் என்ற நம்பிக்கை மலையாள நாட்டில் நிலவுவதைக் காணலாம்.

கூவிளத்தைப் பிற்காலத்தில் 'வில்வம்' என்றழைத்தனர். ஆனால் மலையாளநாட்டில் இன்றும் பழந்தமிழ்ப் பெயரான கூவிளம் என்பது வழக்கிலிருக்கிறது.

---

# கொவ்வை

இது Cucurbitaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Coccinia Indica என்னும் கொடி. இந்தியாவெங்கும் இது வளர்கிறது. கம்பன் காவியத்தில் 'தொண்டை' என்ற பெயரும் கொவ்வையைக் குறிக்கின்றது (அயோ : 1 : 91). மேலும் 'மலர்' என்ற சொல் எவ்வாறு தாமரையைக் குறிக்கின்றதோ அது போன்று 'செங்கனி' என்ற சொல் கொவ்வைக்கனியைக் குறிக்கும் இடங்கள் உள. (பால : 11 : 15)

கொவ்வையின் கனிகள் ஒள்ளிய சிவப்பாக இருக்கும் (Fruit bright scarlet). இத்தகைய சிவந்த கொவ்வைக் கனியை மகளிரின் வாயிதழுக்கு ஒப்பிடுவது பயின்று வரும் உவமை. கம்பரும் இம்மரபையொட்டி இவ்வுவமையைப் பல இடங்களில் தருகிறார்.

'தொண்டைவாய்க் கேகயன்ருேகை'

(அயோ : 2 : 41)

இவ்வாறு பிற மகளிரின் வாயிதழுக்கு ஒப்பான கொவ்வைக் கனி சீதாபிராட்டியின் வாய்ச்சிவப்புக்கு முன் நாணி வெண்ணிறமடைகின்றது. (கிட் : 768)

---

# கொள்ளு

Legnminosae என்ற குடும்பத்தில் Papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இது Dolichos Biflorus என்றழைக்கப்படுகிறது. Horsegram என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் இது, ஒரு பருவப்பயிராகும். வெப்பமண்டல நாடுகள் அனைத்திலும் இது பயிர் செய்யப்படுகிறது. இந்தியாவில் பண்டைக்காலத்திலிருந்தே பயிராகும் இது ஒரு சிறு செடி.

கொள்ளில் கறுப்புக் கொள்ளு, சிவப்புக் கொள்ளு என்று இரு வகைகள் உள. இவற்றில் கறுப்புக் கொள்ளுதான் தரத்தில் உயர்ந்தது. நெடுநல்வாடை ஆசிரியர் கரிய சாத்தம்மிக்கு உவமையாகக் கொள்ளினைக் குறிப்பிடுகிருர்.

'கொள்ளுறழ் நறுங்கல்' (நெடுநல் : 50)

குதிரை, மாடு இவைகளுக்குச் சிறந்த உணவாக இது பயன்படுத்தப்படுகிறது. மக்களும் இதை உண்கின்றனர். வேறு பல தானியங்களுடன் கொள்ளினையும் கோசல நாட்டிற்குக் கொண்டு வந்த செய்தியைக் கம்பர் குறிக்கின்ருர்.

'எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையும்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்'

(பால : 2 : 54)

கோசல நாட்டில் கொள்ளினை மக்கள் உண்டார்களா அல்லது கால்நடைகளுக்கு உணவாக அளித்தார்களா என்பது தெரிய வில்லை. அகப்பாடலொன்று கொள், பயறு இவற்றைப் பாலொடு விரவிச் சமைத்த கூழினை மக்கள் உண்டனர் என்று கூறுகின்றது.

'கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல் வரைந்தன்ன வாலவிழ் மிதவை'

(அகம் : 37)

எள் தான் விளையும் நிலத்தில் உள்ள வளத்தினை எடுத்து விடுகின்றது. ஆனாலும் தற்காலப் பயனை நம்பி வாழும் ஏழை மக்கள் எள்ளையே பயிர் செய்வர் கொள்ளானது தான் விளை யும் நிலத்தின் சத்தினை மிகுவிக்கின்றது. எனவே பிற்கால லாபம் கருதி வாழும் செல்வந்தர்கள் கொள்ளினைப் பயிர் செய் வார்கள். இந்த அடிப்படையில்தான் 'இளைத்தவன் எள்ளு விதைப்பான்; கொழுத்தவன் கொள்ளு விதைப்பான்' என்ற பழமொழியே ஏற்பட்டது.

---

# கொன்றை

கொன்றை, Leguminosae என்னும் குடும்பத்துள் Caesalpineae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்தது. கொன் றையில் பல இனங்கள் உள. சங்க இலக்கியங்களிலும் பிற் கால இலக்கியங்களிலும் கூறப்படும் கொன்றை மஞ்சள் பூவையுடையதாகும். இது Cassia Fistula என அழைக்கப்படு கின்றது. சரக்கொன்றை, திருக் கொன்றை, பெருங்கொன் றை, பிரணவக் கொன்றை என்ற பெயர்களாலும் இது அறி யப் படுகின்றது. கம்பன் காவியம் கொன்றையைக் 'கடுக்கை' என்றும் கூறுகின்றது.

'நறைவிரி கடுக்கை மென்பூ' (கிட் : 461)

சங்கப்பாடல்களிலும் இப்பெயர் பயன்படுத்தப்பட்டது என்பதை,

'ஒல்கு நிலைக் கடுக்கை அல்கு நிழல் அசைஇ'
(அகம் : 399)

என்ற பகுதியால் அறியலாம் கொன்றையை இதழி என்று தேவாரம் கூறுகின்றது.

கொன்றை நடுத்தர அளவுள்ள மிக அழகான ஒரு மரம். பொன்னிறமான பூக்கள் சரஞ்சரமாக மாலைபோல் மரமெங்கும் பூத்துக்குலுங்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். இதன் பூக்கள் விரிவதற்கு முன் உருண்டை வடிவமாகத் தொங்கிக் கொண்டிருக்கும். பூக்கும் பருவத்திவ் அரும்பும் மொக்கும் பூவுமாக மாலையில் கோக்கப்பட்டன போல் தொங்கிக் கொண்டிருப்பதால் கொன்றையின் பூங் கொத்துகளைச் சங்க இலக்கியங்கள் பொன்னிழையோடும், பொன்மாலையோடும் ஒப்பிட்டுக் கூறுகின்றன.

'வண்டுபடத் ததைந்த கொடியிணரிடை யிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற்றோன்றும் புதுப்பூங்கொன்றை'
(குறுந் : 21)

கொன்றையின் இத்தகு பொன்மலர்கள் எங்கும் சொரிந்து நிற்க, அவற்றின் மீது இந்திர கோபங்கள் பரவியிருப்பதைக் கண்ட கம்பருக்கு இரத்தினங்கள் இழைக்கப்பட்ட பொன்னாரங்கள் நினைவுக்கு வருகின்றன

'இன்றுயில் வதிகோபத் தினம் விரி வனவெங்கும்
கொன்றைகள் சொரிபோதின் குப்பைகள் குலமாலை
பொன்றிணி மணிமானப் பொலிவன பலகாணாய்'
(அயோ : 7 : 3)

கார்காலம் வந்தடைந்தது. எங்கும் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இத்தகு அழகிய இயற்கைக் காட்சிகளால் கானகமெங்கும் கவின் பெற்று விளங்குகிறது. ஒரு புறத்தே செங்காந்தள் மலர்கள் கைபோன்று மலர்த்து கிடக்கின்றன. அவற்றில் கொன்றையின் மென்பூக்களும், இந்திர கோபப் பூச்சிகளும் நிறைந்து காணப்படுகின்றன. இவ்வாறு செங் காந்தட்பூவில் கொன்றை மலர்களும் இந்திர கோபங்களும் பரவியிருப்பது, இனிய இசையைப் பாடுவனவாய்த் தம்மிடம் வரும் வண்டுகளை நோக்கி நிலமகள் காந்தளாகிய கைகளை உயர்த்தி நீட்டிப் பொன்னையும் மாணிக்கத்தையும் அளிப்ப தை ஒத்திருக்கின்றது என்று கூறியிருப்பது நினைத்து நினைத்து இன்புறத் தக்க உவமையாகும்.

'நன்னெடுங் காந்தட் போதி
　　னறைவிரி கடுக்கை மென்பூத்
துன்னிய கோபத் தோடுந்
　　தோன்றிய தோற்றந் தும்பி
இன்னிசை முரல்வ நோக்கி
　　யிருநில மகள்கை யேந்திப்
பொன்னெடுங் காசை நீட்டிக்
　　கொடுப்பதே போன்ற தன்றே'

(கிட் : 461)

இவ்வாறு கொன்றை மலர்களையும் பொன்னையும் இணைத்துப் பேசுவது மரபாகக் காணப்படுகின்றது. ஆங்கிலத் தில் கொன்றையை 'Laburnam' என்றழைப்பர். இந்த ஆங்கி லச் சொல்லுக்குப் பொருள் பொன்மாலை என்பதாகும். மேலும் இதன் பூங்கொத்தை ஆங்கிலத்தில் 'Golden shower' என்றும் 'Streaming gold' என்றும் கூறியிருப்பது உற்று நோக் கத்தக்கது.

மலையாள நாட்டில் சிறப்பாகக் கொண்டாடப்படும் 'விசு' (விஷு) என்ற விழாவன்று, காலையில் கண்விழித்ததும்

பல சிறப்பான பொருட்களையும் பார்ப்பது வழக்கம். இந்தச் சடங்கை 'விஷுக்கணி' என்பர். இவ்வாறு பார்க்கப்படும் பொருட்களில் கொன்றைமலர்கள் இன்றியமையாதவையாகும். எழுந்ததும் கொன்றைப் பூக்களைப் பார்த்தால் வாழ்க்கை வளமாக அமையும் என்று நம்பினர். இது. கொன்றையைப் பொன்னுக்கு உவமித்துப் போற்றியதின் அடிப்படையில் தோன்றிய நம்பிக்கையாக இருக்கலாம் என்று பி. எல். சாமி கருதுகிறார். ('சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்').

கொன்றையின் முற்றிய காய்கள் கறுப்பு நிறத்தில் நீண்டு தொங்கும். இவை 1-2 அடி நீளமுள்ளவையாக இருக்கும். இத்தகு காய்கள் மகளிர் கூந்தலுக்கு உவமையாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

'கொன்றை துன்று கோதை யோடோர்
கொம்பு வந்தெ னெஞ்சிடை
நின்ற துண்டு.........................................' (ஆர : 647)

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையிலும்,

'கொன்றையம் பூங்குழலாள்'

என்று இந்த உவமை கையாளப்பட்டிருப்பதைக் காணலாம். கொன்றைக் காய்களின் நீட்சி பற்றியும் கருநிறம் பற்றியும் அவற்றைக் கூந்தலுக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளது பொருத்தமாக அமைகின்றது.

கோவலர்கள் கொன்றையின் முதிர்ந்த காய்களைத் துருவித் துளையிட்டுக் குழலாகப் பயன்படுத்தினர் என்பதை

'கொன்றை வேய்ங்குழற் கோவலர்' (அயோ : 7:34)
என்ற பகுதியால் அறியலாம்.

'கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி'

என்ற சிலப்பதிகாரப் பகுதியும்,

'ஒழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்'

(கலி : 106)

என்ற கலித்தொகைப் பகுதியும் இக்கருத்தை உறுதிப்படுத்து கின்றன

கொன்றை கார்காலத்தில் மலரும் என்று சங்க நூல்களிலும், பிற்கால நூல்களிலும் பல இடங்களிலும் கூறியிருப்பதைக் காணலாம்.

'கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்'

(அகம் : 1 : கடவுள் வாழ்த்து)

'கார்விரி கொன்றை கலந்த கண்ணுதலான்'

(தேவாரம் : திருஞானசம்பந்தர்)

கார்காலம் பிரிந்த தலைவனுக்குப் பெரிதும் துயரத்தை உண்டாக்கும். இவ்வாறு தலைவன் வருந்தியிருக்கையில், கொன்றை தன் பொன்னிற மலர்களை விரித்து அவன் வருத்தத்தையுணராது அழகுற நிற்பது கண்டு, தலைவன் அதனைச் சினந்து கூறுவதாக அமைப்பது நூன்மரபு. கம்பராமாயணத்திலும் இராமன் கொன்றையை நோக்கி வருந்துவதாக இரு இடங்களில் கூறப்பட்டுள்ளது. (கிட் : 33, 489) கார்காலப் படலத்தில் கார்கால நிகழ்ச்சிகள் பல கூறப்படுகின்றன. கொன்றை மலர்ந்து விளங்குகின்றது. இதைக் கண்ட இராமன், சீதையின் கூந்தலுக்குத் தோற்ற காரணத்தால்தான் அவளிடத்து மட்டுமின்றித் தன்னிடத்தும் பகைமை கொண்டு விடை பகராமல் இருப்பதாகக் கூறி வருந்துகிறான்.

'ஒன்றைப் பகராய் குழலுக் குடைவாய்
வன்றைப் புறுநீள் வயிரத் தினையே
கொன்றைக் கொடியாய் கொணர்கின் நிலையே
என்றைக் குறவா கவிருந் தனையே!

(கிட் : 489)

சிவபெருமான் சடையில் கொன்றை அணித்திருப்பதை

'.................................... சடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து'

(பால : 9 : 52)

என்பதாலும் அறியலாம். பொன்னார்மேனியனின் மார்பில் தவழும் தாரும் கொன்றை, தலையில் அணியும் கண்ணியும் கொன்றை என்பதை

'கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை' (புறம் : 1)

என்ற புறப்பாடலாலும் அறியலாம்.

---

# கோங்கு

Cochlospermaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Cochlcspermum Gossypium என்னும் மரமே கோங்கு என்றழைக்கப்படுகிறது. இதைத் தற்காலத்தில் மஞ்சள் இலவு, மலைப்பருத்தி, காட்டிலவு, காட்டுப்பஞ்சு, மஞ்சள் தணக்கு என்றெல்லாம் அழைக்கிறார்கள், இதை ஆங்கிலத்தில் yellow Silk Cotton Tree என்பர்.

கோங்கு மரங்கள் உயர்ந்த குன்றுப் பகுதிகளில் தழைத்து வளருகின்றன. இலவமரத்தைப் போலவே கோங்கும் இலையில்லா நிலையில் பூக்கின்றது. இலையின்றிக் கிடக்கும் கரிய கொம்புகளில் பிப்ரவரியில் (February) மலர் விரியத் தொடங்குகிறது. இளவேனிலில் கோங்கு பூக்கத்தொடங்கியும் தலைவன் வரவில்லையென்று தலைவி ஏங்குவதை ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.

'அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே'

(ஐங் : 343)

கோங்கின் பூ தட்டையான கிண்ணம் போல் அகன்று காணப்படும். இதனால் ஆங்கிலத்தில் கோங்கு மரத்தை Buttercup tree என்றழைத்தனர். இதன் பூவை 'குடைப்பூ' என்று அகநானூறு கூறுகின்றது. மலர்கள் ஒள்ளிய பளபளப்பான பொன் னிறமானவை. இதனால்தான் கம்பர்

'பொன்னனி நிற..............கோங்கு' (அயோ : 7 : 14)

என்று கூறுகிறார். இதன் பொன்னிறத்தை

'கோங்கின் பொன்மருள் பசுவீ' (ஐங் : 367)

என்று ஐங்குறுநூறும் கூறுகின்றது.

இத்தகைய பொன்மலர்களில் உறங்கும் கருநீல வண்டுகள் பொற்றகட்டில் பொறிக்கப்பட்ட நீலரத்தினங்களை ஒத்து விளங்குகின்றனவாம்.

'முற்றுறு முகை கிண்டி முரல்கில சிறுதும்பி
விற்றிரு நுதன் மாதே யம்மலர் விரிகோங்கின்
சுற்றுறு மலேரறித் துயில்வன சுடர்மின்னும்
பொற்றக டுறுநிலம் புரைவன பலகாணாய்'

(அயோ : 7 : 12)

கோங்கின் அரும்பு குவிந்திருக்கும். இத் தன்மையை குவிகோங்கு' (ஆர : 74) என்ற தொடரால் உணர்த்துகிறார் கம்பர். இத்தகு குவிந்த அரும்பிற்கு உவமையாக மகளிர் நகில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

........கொங்கையன்ன பொருவில் கோங்கரும்பின்'
(பால : 14 : 47)

அகப்பாடலொன்றும் கோங்கின்' முகையை மகளிர் நகிலுடன் ஒப்பிடுகின்றது.

'கோங்கு முகைத் தன்ன குவிமுலை யாகத்து'
(அகம் : 240)

கோங்கு மரத்தில் ஊசல் கட்டி அதிலிருந்து கொண்டு குறிஞ்சி நிலப் பெண்கள் குறிஞ்சிப் பண்ணோடு கூடிய பாடலைப் பாடின செய்தியை,

'...............கோங்கினில் வயின் றொறுந் தொடுத்துக்
குனிந்தவூசலிற் கொடிச்சிய ரெடுத்த வின் குறிஞ்சி
கனிந்த பாடல்கேட் டசுணமா வருவன காணாய்'
(அயோ : 8 : 24)

எனத் தருகிறார் கம்பர்.

---

# சண்பகம்

Magnoliaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம் மரம் Michelia Champaca என்றழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Golden Champa என்பர். இந்திய மகளிர் சண்பக மலரை மிகுதியாகப் போற்றுகின்றனர். இம்மரத்தைப்

பொதுவாகக் கோயில்களின் சுற்றுப் புறங்களிலும், தோட்டங்களிலும் காணலாம். மலேயா, இந்தோனேஷியா, பிலிப்பைன்ஸ் முதலிய நாடுகளிலும் இம்மரம் மிகுந்த செல்வாக்கினைப் பெற்றுள்ளது. ஏற்ற சூழ்நிலைகளும், தேவையான மழையும் உள்ள இடங்களில் இம்மரம் 100 அடி உயரம் வரைகூட வளர்வதுண்டு.

இதன் இலைகள் 6-10 அங்குல நீளமுடையவை; அலை போன்ற ஓரங்களையுடையவை. இதன் பூக்கள் பொன்மஞ்சள் அல்லது கிச்சிலி நிறமுடையவை. இப்பூக்களில் 12 முதல் 15 இதழ்கள் வரை காணப்படும். பூக்கள் மிகுந்த நறுமணமுடையவை. பூக்கும் காலத்தில், இம்மரத்தைச் சுற்றியுள்ள இடம் எல்லாம் நறுமணத்தால் நிறைந்திருக்கும் (The air for many yards around the tree is filled with the scent of the flowers during May and October) இந்த நறுமணத்தை அனுபவித்து மகிழ்ந்த கம்பர் சண்பக மரங்கள் நிறைந்த சோலையை 'சம்பக நறும் பொழில்' (அயோ : 5 : 15) என்று குறிக்கிறார். பரிபாடலும் 'மணங்கமழ் சண்பகம்' என்று பகர்கின்றது (பரி : 12:77)

கம்பர் 'சண்பக வனம்' (பால : 2 : 48) 'சண்பகக் காடு' (பால : 1 : 20) என்றெல்லாம் நாட்டுவளத்தைச் சுட்டுவதிலிருந்து, இம்மரங்கள் மிகுதியாக நெருங்கி வளர்ந்திருந்தன என்பதை அறியலாம்.

இம்மரங்களில் மிகுதியான விதைகள் உண்டாகின்றன. இவ்வாறு மிகுதியான விதைகளை உண்டாக்குவதன் காரணமாக, இவற்றின் வலிமை குறைந்து போவதால் இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு தான் மீண்டும் மலர்களைத் தோற்றுவிப்பதற்குள்ள ஆற்றலைப் பெறுகின்றன. இக்காரணத்தால் தோட்டங்களில், சண்பகமரத்தின் கனிகளை நன்றாக வளர்ச்சியடைவதற்கு முன் அகற்றிவிடுவர்.

---

# சந்தனம்

இது இந்தியாவில் வளரும் ஒரு சிறுமரம். Santalaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதனைத் தாவரவியலார் Santalum album என்பர். தென்னிந்தியாவில் மைசூர், குடகு, கோயம்புத்தூர், சேலம், வேலூர் ஆகிய பகுதிகளில் இம்மரம் வளர்கிறது. இது ஓர் அரை ஒட்டுண்ணி (Semi Parasite) இதன் வேர்கள் அருகிலுள்ள மரஞ்செடிகளின் வேர்களிலிருந்து சில பொருட்களை உறிஞ்சி எடுக்கும்.

கம்பராமாயணத்தில் சந்தனம், சந்து, ஆரம் என்ற பெயர்களால் இம்மரம் குறிப்பிடப்படுகின்றது.

'தழைத்த நிழலுற்ற குளிர் சந்தனம்' (யுத் : 695)

'சந்தொடுந் தேய்க்குமால்' (பால : 14 : 56)

'இணையிலாரமும்' (பால : 1 : 7)

சந்தனத்தின் நறுமணத்தையும் தண்மையையும் 'தண்ணறுஞ் சந்தனம்' (கிட் : 735) என்ற சொற்றொடரால் உணரலாம்.

அயோத்தியில் உள்ள மாளிகைகளில் தூண்களாகச் சந்தன மரங்கள் பயன்படுத்தப்பட்டன என்று கூறி அந்நகரின் வளத்தினைக் காட்டுகிறார் ஆசிரியர்.

'..........................................சந்தனப்
பந்திசெய்தூண்...............................' (பால : 3 : 30)

இதுபோன்று, சந்தன மரங்களை வேலியாக உடையது என்று கூறி விதர்ப்பநாட்டின் செழிப்பினையும் குறிப்பிடுகிறார்.

'........................................தண்ணறுஞ் சந்தனம்
வீங்குவேலி விதர்ப்பமும்..........................'

(கிட் : 735)

இங்ஙனம் சந்தனமரம் வளத்திற்குச் சான்ருக அமை கின்றதைப் பல இடங்களிலும் கூறுகின்ருர் ஆசிரியர். இராமன் சித்திரகூட மலையின் பல்வகை வளங்களையும் சீதைக்குக் காட்டுகிருன். அம்மலையில், தழைத்து வளர்ந்த சந்தனச் சோலை தன் பார்தையைத் தடுப்பதால் மதியானது அச்சோலைக் குள் புகுந்து போவது போலத் தோன்றும் அழகினைக் கண்டு வியக்கிருன் இராமன்.

'தழைத்த சந்தனச் சோலைதன் செலவினைத் தடுப்ப
நுழைந்து போகின்ற தொக்கின்ற மதியினை நோக்காய்'
(அயோ : 8 : 9)

அடுத்து, பம்பைப்பொய்கையின் சிறப்பைக் கூறப் புகுந்த கம்பர், ஆறுகள் பெரிய மலைகளினின்று கொணர்ந்து தள்ளிய அகில், சந்தனக் கட்டைகள் என்பவை ஊறி அவற் றின் சாறுபடிந்திருப்பதால் அப்பொய்கை, சிறப்புமிக்க நகர மக்கள் அமைத்த களபக் குழம்பு வைக்கப்பெற்ற செப்பைப் போன்றிருப்பதாகக் கூறுகிருர் (கிட் : 16).

பெண்கள் சந்தனக் குழம்பையும் அகில் தேய்வையை யும் மார்பில் அணிவது இயல்பே. சோணை நதியாகிய பெண் ணும் தன் தனங்களாகிய மணற்குன்றுகளில் சந்தனத்தையும் அகிலையும் அணிந்திருக்கின்ருளாம். மணற்குன்றுகளில் சந்த னக் கட்டையும் அகிற்கட்டையும் ஆற்றிஞற் கொணர்ந்து கொழிக்கப்பட்டிருப்பதைத் தான் கம்பர் இத்துணைக் கற்பனைத் திறத்துடன் எடுத்துரைக்கின்ருர்.

'அலம்பு மாமணி யாரத்தோ டகிலலை புளினம்
நலம்பெய்பூண் முலை.............................................
.......................சோணையாந் தெரிவையைச் சேர்ந்தார்'
(பால : 9 : 1)

சந்தனத்தை வாசனைப் பொருளாகப் பயன்படுத்தியது மட்டுமன்றி வேறு வகையிலும் அதனைப் பயன்படுத்தினர்.

ஈமச்சடங்கு புரிகையில் விறகாகச் சந்தனக் கட்டைகள் பயன் படுத்தப்பட்டன.

'இந்தனமாக வேண் டுங்
காரகி லீட்டத் தோடும்
சந்தனங் குவித்து..............' (ஆர : 1025)

சந்தன மரத்தின் இலைகளால் குடில்கள் வேயப்பட்டன என்பதை 'சந்தினடையிற் படலே' (கிட் : 507) என்ற தொடரால் கம்பர் உணர்த்துகிறார்.

கம்பன் காவியத்தில் உயிரினங்கள் ஒன்றுக்கொன்று உதவிபுரிந்து வாழும் நிலையைப் பல இடங்களிலும் காணலாம். இங்கும் அத்தகு காட்சி ஒன்று அமைகின்றது. மாரிக்காலம் வந்துவிட்டது. எங்கும் பெருமழை பொழிகின்றது. மலர்த் தவிசுகளிலிருந்த வண்டுகள் குளிரால் பெரும் துன்பமடைகின்றன. இவைகளின் துன்பத்தைக் கண்டு மனமிரங்கிய சந்தன மரங்கள் தம் பொந்துகளில் இடமளிக்க, வண்டுகள் மகிழ்ந்து உறங்கின.

'தளித்தகு மலர்த்தவிசி கந்துறகு சந்தின்
தொளைத்துயிலு வந்துதுயில் வுற்றகுளிர் தும்பி'
(கிட் : 511)

---

## சிஞ்சுபம்

இது Loganiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மரம். இதன் தாவரவியற் பெயர் Strychnos Nux-Vomica என்பது. கம்பர் இதனை ஒரே இடத்தில் மட்டுமே சுட்டுகிறார். சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன், இலங்கை நகரிலுள்ள

அசோக வனத்தில் சிஞ்சுபம் என்னும் இம்மரத்தின் கீழ் சிறை வைக்கிறான்.

'வஞ்சியை யரக்கனும் வல்லே கொண்டுபோய்ச்
செஞ்செவே திருவுருத் தீண்ட வஞ்சுவான்
நஞ்சிய லரக்கியர் நடுவ ணாயிடைச்
சிஞ்சுவ மரத்திடைச் சிறைவைத் தானரோ'

(ஆர : 950)

இவ்வாறு ஒரே இடத்தில் மட்டும் கூறப்பட்டிருந்தாலும், சீதா பிராட்டியார் இருந்த இடம் என்ற முறையில் சிஞ்சுப மரம் தனிச்சிறப்பைப் பெறுகிறது.

---

## சிந்து (புளி)

இது மிகப்பெரும் நிலையும் அழகிய தோற்றமும் கொண்ட ஓர் மரம். அத்துடன் நெடுங்காலம் வாழக்கூடியதும் பெரும்பயனைத் தரக்கூடியதும் ஆகும். Leguminosae என்ற குடும்பத்தில் Caesalpineae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Tamarindus Indicus என்று அழைக்கப்படுகிறது. Tamarindus என்ற சாதிப்பெயர், இந்தியப் பேரீந்து எனப் பொருள் படும் அரபுப் பெயரினின்றும் வந்தது.

புளிய மரம் 80 அடி உயரம்வரையில் வளரும். இதன் அடிமரம் 25-30 அடி சுற்றளவுடையதாகவும் இருப்பதுண்டு. 42 அடி சுற்றளவுள்ள மரமும் உண்டு. மரம் மிக உறுதியானது. இத்தகைய உறுதியான பெரும் மரத்தினைப் பறித்து எறிந்ததாகக்கூறி அனுமனின் ஆற்றலைக் காட்டுகிறார் கம்பர்.

அசோகவனத்திலுள்ள சோலையை அழிக்க முற்படுகிறான் அனுமன். அவனால் எடுத்தெறியப்பட்ட புளியமரங்கள் கடலில் வந்து விழ, அத்தாக்குதலால் சங்குகள் தம் முத்துக்கள் சிதற அங்குமிங்கும் அலைந்தன. கம்பர் புளிய மரத்தைக் குறிக்கும் இடம் இதுவொன்றே.

'சிந்த வானந் திரிந்துகச் செம்மணி
சிந்த வானந் திரிந்த திரைக்கடல்' (சுந் : 725)

இங்கு, கம்பர் புளியமரத்தைச் 'சிந்து' என்ற பெயரால் குறிப்பிடுகிறார். இப்பெயர் 'சிஞ்சா' என்ற வடசொல்லின் திரிபாகும்.

புளிய மரத்தின் இலைகள் இரட்டைக் கூட்டிலைகள். பூக்கள் கிளைகளின் நுனியில் உண்டாகும். கனி நீள்சதுர வடிவில் இருக்கும். புளியங்கனி, உணவுப் பொருள் என்ற நிலையில் மிகுந்த பயனையுடையதாக விளங்குகிறது.

---

# சுரபுன்னை

நாகம், வழை என்ற பெயர்கள் சுரபுன்னை மரத்தைக் குறித்தன. நாகம் வேறு சுரபுன்னை வேறு என்று கூறுவதும் உண்டு. எனினும் பெரும்பாலான உரையாசிரியர்களும் 'நாகம்' என்பதற்குச் சுரபுன்னை என்று பொருள் எழுதியிருப்பதை நோக்கும்போது இரண்டும் ஒன்றையே குறித்தது என்று கொள்வது பொருத்தமாகத் தோன்றுகின்றது. சுரபுன்னை என்பது புன்னைமரத்தைப்போன்றதே. ஆனால் இரண்டும் வெவ்வேறான மரங்களே. 'நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்' (மணி ; 3 : 162) என்ற பகுதி இக்கருத்தைத் தெளிவு படுத்துகின்றது. 'புன்னாகம்' என்ற பெயரும் சுரபுன்

னையைக் குறித்தது என்பதை உரையாசிரியர்கள் கூற்றால் (ஆர : 649) உணரலாம்.

புன்னைமரத்தைப் போன்று சுரபுன்னையும் Guttiferae என்ற குடும்பத்தைச் சேர்ந்ததே. இம்மரம் Ochrocarpus longifolius என்றழைக்கப்படுகிறது. இது நடுத்தரமான ஒரு மரமாகும்.

இதன் இலைகளும், மலர்களும் புன்னைமரத்தின் இலைகளை யும், மலர்களையும் போன்றவையே. சுரபுன்னையின் வெண்மை யான மலர்கள் வானத்துத் தாரகைகள் போன்று காட்சியளிக் கின்றன. வேங்கை மலர்களின் தேனையுண்ட தும்பிகள் அவ் வேங்கை மலர்களை வெறுத்து, புதிய தேனைத் தருகின்ற சுர புன்னைமரத்தின் குளிர்ந்த மலரென்று நினைத்து வானத்தில் விளங்கும் தாரகைகளின் மீது தாவுகின்றன.

'......................................................... வேங்கை
உண்மலர் வெறுத்த தும்பி புதியதே னுதவு நாகத்
தண்மல ரென்று வானத் தாரகை தாவு மன்றே'

(பால : 14 : 33)

சுரபுன்னை கடற்கரைப் பகுதியில் வளர்வது. இவ்வாறு நெய்தல் நிலத்தில் வளரும் சுரபுன்னை மலர்களின் மணம், நுளைச்சியர் கூந்தலில் வீசுவதாகக் கூறியிருப்பது இயல்பன்றோ

'...................நாகமு நாறின நுளைச்சிய ரைம்பால்'

(கிட் : 479)

சுரபுன்னை மரம் வித்தியாதர உலகில் உள்ள மரமாகக் கூறப்படுகிறது. (ஆர : 567) இவ்வாறு விஞ்சையர் (சுரர்) உலகில் உள்ள காரணத்தினால் தான் இது 'சுரபுன்னை' என்ற பெயர் பெற்றது போலும்.

# செங்கிடை

இது Leguminosae என்ற குடும்பத்தில், Papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த Aeschynomene aspera என்னும் செடி. இது நீரில் வளர்வது. கம்பர் இதனை மகளிர் வாய்க்கு ஒப்பாகக் கூறுகிறார். சீதையைப் பிரிந்து வருந்தும் இராமன், பம்பைப்பொய்கையில் செவ்வாம்பல் மலருக்கு அருகே கிடக்கும் செங்கிடையை நோக்கி, தன் உள்ளத்து உணர்ச்சிகளை வெளியிடுகிறான். செங்கிடையின் நிறம் சீதா பிராட்டியின் வாயிதழை இராமனுக்கு நினைவு படுத்துகிறது அச்செங்கிடையை நோக்கி இராமன் "நீ சீதையின் இதழை மட்டும் காட்டினால் போதாது; அவள் வாயிற்பிறக்கும் இன்னமிர்தத்தையும், இன்மொழியையும் காட்டித் தந்தருள்வாய்" என்று வேண்டுகிறான்.

'ஒருவா சகுத்தை வாய்திறந்திங்
குதவாய் பொய்கை யுள்ளொடுங்கும்
திருவா யனைய சேதாம்பற்
கயலே கிடந்த செங்கிடையே
வெருவா வெதிர்நின் றமுதுயிர்க்கும்
வீழிச் செவ்விக் கொழுங்கனிவாய்
தருவா யவ்வா யின்னமிழ்துந்
தண்ணென் மொழியுந் தாராயோ'

(கிட் : 30)

பிறிதோரிடத்தும் செங்கிடை வாயிதழுக்கு உவமையாகக் கூறப்படுகிறது. கார்கால நிகழ்ச்சிகள் பலவற்றையும் வர்ணித்த கம்பர், தலைவரோடு கூடின மகளிரின் சிவந்த அதரம் போல செங்கிடை விளங்குவதைக் காட்டுகிறார்.

'கூடினர் துவரிதழ்க் கோலங் கொண்டன
சேடுறு நறுமுகை விரிந்த செங்கிடை'

(கிட் : 545)

# செருந்தி

செருந்தி என்பது எந்தத் தாவரத்தைக் குறிக்கின்றது என்பது சரியாகத் தெரியவில்லை. செருந்தி என்பதற்குத் தமிழ்ப் பேரகராதியில் மூன்று செடிகளின் பெயர்கள் தரப்பட்டுள் ளன. அவற்றுள் Panicled Golden - Blossomed Pear Tree என் பது தான் செருந்தி என்று அழைக்கப்பட்டது என்று தோன்று கிறது. செருந்தியைப் பற்றிக் கம்பராமாயணத்தில் ஒரு குறிப் பே வந்துள்ளது. இந்த இடத்தில் செருந்தியின் மலருக்கு உவ மையாகப் பொன்னைக் குறிக்கின்றார் கம்பர். அசோக மலரின் இடையில் செருந்திமலர் தங்கியிருக்க, வண்டுகள் அவற்றின் மீது மொய்க்கும் காட்சி, நெருப்பில் பொன்னை வைத்துக் கரியால் மூடி; ஊது குழல் கொண்டு ஊதுகையில் அக்கரியின் இடைவழியாக நெருப்புச் சுவாலை வெளிவருவது போன்றிருக் கின்றதாம். கம்பரின் கற்பனைத் திறம் வெளிப்படும் பகுதி களில் இதுவும் ஒன்று.

'செருந்தியின் மலா தாங்குஞ் செறியித ழினசோகம்
பொருந்தின களிவண்டிற் பொலிவன பொன்னூதும்
இருந்தையி னெழுதீயொத் தெழுவதொ ரியல்காணுய்'

(அயோ : 7: 8)

---

# தாமரை

'பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை' என இலக்கி யங்களில் போற்றப் பெறுவது தாமரை. பல சமயத்தினரா லும் தூய்மைக்கு அடையாளமாகக் கருதப்படுவது தாமரை. தெய்வங்களுக்கு உறைவிடமாகவும், அவர்களுக்கு அணியாக வும், அவர்கள் முகம், கண், வாய்; கை, திருவடி, திருமேவி

முதலியவற்றிற்கு வண்ணம், வடிவம், மென்மை, மணம், அழகு, கவர்ச்சி முதலிய பண்புகளால் உவமமாகவும் அமையும் சிறப்புடையது. பூமிக்கே பெருமையையும் அழகையும் தருவது பூத்துக் குலுங்கும் தாமரை மலர்தான். ஏனைய எல்லா மலர்களையும் விடத் தாமரைதான் கம்பரை மிகக் கவர்ந்தது என்பதற்குச் சான்றாகத் திகழ்கிறது அவர் தம் காவியம். கம்ப ராமாயணத்தில் ஐந்நூறுக்கு மேற்பட்ட இடங்களை முற்று கையிட்டுத் தன் சிறப்பை நிலைநாட்டி விட்டது இத்தாமரை.

தாமரை Nymphaeaceae என்னும் அல்லிக் குடும்பத்தைச் சேர்ந்தது Nelumbium என்னும் இனத்தது. இது குளங்களிலும், மெல்ல ஓடிக் கொண்டிருக்கும் ஓடைகளிலும், நீர் தேங்கியுள்ள சதுப்புகளிலும் வளரும். அதிக ஆழமில்லாத நீரின் அடியில். படுகைச் சேற்றில் புதைந்து, ஊர்ந்து படர்ந்து கிடக்கும் ரைசோம் (Rhizome) என்னும் மட்டத்தண்டுக் கிழங்கு இதற்குண்டு. இந்தத் தண்டிலிருந்து உண்டாகும் நீளமான காம்புகளில் இலைகளும் மலர்களும் உண்டாகும். காம்பில் முள் போன்ற எழுச்சிகள் உண்டு. இலை வட்டமானது. மலர் மிகப் பெரியது. புற இதழ்கள் சிலவே. (4-5) அக இதழ்களும், கேசரங்களும் பல. பூக்காம்பின் முனையிலுள்ள அச்சின் பாகம் தடித்து இருக்கும். இது பொகுட்டு எனப்படும். இப்பொகுட்டின் மேற்பரப்பில் பல சூலிலைகள் பொருந்தி அமையும்.

கம்பர் தாமரையை அம்புயம், அரவிந்தம், அல்லி, கஞ்சமலர், கந்தமலர், கமலம், தாமரை, நளினம், பங்கயம், பதுமம், புண்டரீகம், முண்டகம், முளரி என்ற 13 பெயர்களால் குறிக்கிறார்.

1. ‘அம்புயக் கண்ணன்...............’ (யுத்: 2356)
2. ‘அரவிந்த மலருணி ங்கு ......’ (ஆர்: 280)
3. ‘.........அல்லி மலர்ப் புல்லும்’ (பால: 20; 32)

4. '......,............அடியன்ன

கஞ்ச நீரிலொளிப்ப..........' (அயோ : 6 : 20)

5. 'நந்தமலரிற் கடவுள் தன் வரவு காணும்' (பால: 6: 4)

6 'கண்டனனிரவியுங்கமலவாண் முகம்' (அயோ: 4:186)

7. .........தாமரை விளக்கந் தாங்க' (பால, 2; 4)

8. '..............நளினம் பூத்ததோர்

பாற்கடல்..................' (அயோ : 2 : 42)

9. 'பள்ளிகொள்வன பங்கயத் தன்னமே' (பால : 2 : 38)

10. 'பாடகச் செம்பதும மலர்ப்பாவையர்' (பால ; 5 : 61)

11. புண்டரிகத் தடங்காடு..... ............... (ஆர : 953)

12. 'தழையின் முண்டகந் தழுவு கானிடை'(அயோ:9:140)

13. '.......... ............ முளரிப் போதினும்

குற்றமில் முகத்தினன்..................' (அயோ:4:171)

இவை மட்டுமன்றி மலர் என்ற சொல்லே தாமரையை குறிக்கும் இடங்கள் பல.

'வாசநான் மலரோன்' (பால : 7 : 75)

இவ்வாறு மலர் என்றாலே, தன்னை உணர்த்தும் சிறப்பினைப் பெற்றது தாமரை. சங்க இலக்கியங்களில் நளினம், பதுமம் அரவிந்தம், கமலம், தாமரை என்ற பெயர்களே தாமரையைக் குறித்தன.

தாமரை என்ற சாதியில் பல இனங்கள் உள. மேற்கிந்தியத் தீவுகளிலும், அமெரிக்காவின் சில பகுதிகளிலும் வளரும் இனம் Nelumbium Lutea எனப்படும். இந்த இனத்தில் பூ மஞ்சள் நிறமானது. உலகின் மற்றப் பகுதிகளில் வளரும் இனம் Nelumbium Nucifera அல்லது Nelumbinm Speciosum எனப்படும். இதில் சில வகைகளில் பூ வெண்மை

யாக இருக்கும். அது வெண்டாமரை எனப்படும். ஏனைய வகைகளில் இதழ்களில் சற்றுச் செந்நிறம் படர்ந்து செவ்வரிகள் ஓடியிருக்கும். அது செந்தாமரை எனப்படும். கலைமகள் வீற்றிருப்பது வெண்டாமரையிலென்றும், திருமகள் வீற்றிருப்பது செந்தாமரையிலென்றும் புராணங்கள் கூறுகின்றன. இவ்வெண்டாமரையையும் (பால:10:71), செந்தாமரையையும் (பால : 14 : 71) கம்பர் குறிப்பிடுகிறார்.

தாமரையின் சில இயல்புகளைக் கம்பர் குறிப்பிடுகிறார். சேற்றில் வளரும் தன்மையை

'செஞ்சவே சேற்றிற்றோன்றுந் தாமரை'

(அயோ : 6 : 56)

என்று குறிப்பிடுகிறார். தாமரையின் இலை நீரின் மேல் படிந்திராமல் நீருக்கு மேல் பல அங்குலம் உயர்ந்திருக்கும். பூக்காம்பு இலையின் காம்பைவிட நீண்டிருக்கலாம். இவ்வாறு நீருக்கு மேல் உயர்ந்து நிற்கும் தன்மையைத் தான் கம்பர், 'தாளுயர் தாமரை' (ஆர : 235) என்று குறிக்கிறார். இலை பசுமை நிறமுடையது. இதனை 'பச்சிலைத் தாமரை' (சுந்:537) என்று குறிப்பிடுவதிலிருந்தும், காம்புகளில் முள் போன்ற எழுச்சிகள் உள்ளதை 'முள்ளுண்ட முளரி' (யுத் : 2757) என்று கூறுவதிலிருந்தும் அறிகிறோம். தாமரையின் வெண்ணிற முளையைப்பற்றி ஓர் இடத்தில் கூறுகிறார்.

'முள்ளரை முளரி வெள்ளி முளையிற' (பால : 2 : 18)

பொதுவாக அல்லிக்குடும்பத்தைச் சேர்ந்த மலர்கள் இனிய நறுமணமுடையவை. இத்தன்மையும் இங்கு சுட்டப்படுகின்றது.

'விரைசெறி கமலம்' (பால : 5 : 5)

தாமரையின் எண்ணற்ற இதழ்களை,

'நூற்றிதழ் கமலம்' (யுத் : 705)

எனக் கம்பர் புலப்படுத்தியுள்ளார். இதழ்களின் செம்மை நிறம் 'சேயிதழ்த் தாமரை' (யுத் : 705) என்று கூறுவதிலிருந்தும், மகரந்தப் பொடிகளின் பொன்னிறம் 'பொன்பால் பொருவும் விரையல்லி புல்லிப் பொலிந்த பொலந்தாது' (கிட் : 29) என்று கூறுவதிலிருந்தும் புலனாகின்றது.

ஒரு மலரின் வளர்ச்சியில் பல நிலைகள் உள்ளன. அவை முகை, மொட்டு (மொக்கு) அரும்பு, போது, மலர், பூ எனப் படும். பூவின் இந்த வளர்ச்சி நிலைகளை வள்ளுவர் மிக அழகாக வேறுபடுத்திக் காட்டுகிறார். ஒரு தலைவன் களவுக்காலத்தே தலைவியைப் பிரிய எண்ணினான். இதை உணர்ந்த தலைவி தான் உணர்ந்ததைத் தலைவனுக்குச் சொல்ல இயலாது தவிக்கிறாள். தலைவிக்கு ஏதோ ஓர் உள்ளக் கருத்து உள்ளது; அதை அவள் வெளிச்சொல்ல நாணுகிறாள் என்பதை உணர்ந்த தலைவன் தான் கண்டு கொண்டதை நயமாக,

'முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகை மொக்குள் உள்ளதொன் றுண்டு'

என்று தோழிக்குத் தெரிவிக்கிறான். தலைவியின் புன்முறுவல் கண்ட தலைவனுக்கு முகைமொக்கு நினைவுக்கு வருதல் பெரிதும் இயல்பானதே. இனி, அரும்பு - போது - மலர் என்ற பூவின் மூன்று நிலைகளை மற்றுமோர் குறள் வேறுபடுத்திக் காட்டுகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி மிக வருந்துகிறாள். நேரம் செல்லச் செல்லப் பிரிவுத்துன்பம் அவளை வாட்டுகிறது. மாலைக் காட்சிகள் அனைத்தும் அவளை வருத்தி அலைக்கழிக்கின்றன. இதற்குக் காரணத்தை வினவிய தோழியிடம் தலைவி தன்காம நோயின் படிப்படி வளர்ச்சியை,

'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்'

என உரைக்கின்றாள். காமநோயின் இயல்பான படிப்படி வளர்ச்சியைக் காட்ட இதனினும் பொருத்தமான உவமை

கிடைத்தல் அருமை. இக்குறள்களினின்றும் முகை, மொட்டு, அரும்பு, போது, மலர் என்பவை பூவின் பல நிலைகளைக் குறிக்கும் வெவ்வேறு சொற்கள் என்பதை உணரலாம். முகை என்பது பூவின் முதற்பருவமாகும். ஓரளவு வெளித்தோன் றித் தெரிகின்ற பருவம் மொட்டு. நிறம் பெற்று நீண்டு நன்றாகத் தன்னைக் காட்டிக் கொண்டிருக்கும் பருவம் அரும்பு. நன்கு வளர்ந்து இன்னும் சிறிது நேரத்தில் மலரவிருக்கின்ற பேரரும்பிற்குப் போது என்று பெயர். மலர்ந்தவுடன் மலர் என்றழைக்கப்படுகிறது. மரத்தினின்று கீழே விழும் நிலையில் வீ என்றும், வாடின நிலையில் செம்மல் என்றும் அழைக்கப் படுகிறது.

பூவின் வேறுபட்ட இந்நிலைகளைக் கம்பரும் குறிப்பிடு கிறார். இராமன் தாமரையின் முகையைப் போன்ற முகமுள்ள அம்பினைச் செலுத்தினதாக ஓர் இடத்தில் குறிக்கப்பட்டுள் ளது.

'புண்டரிகத்தின் முகையன்ன புகர்முகம் விட்டான்'

(யுத் : 3748)

இந்திரனது தேரிலுள்ள மொட்டு என்னும் உறுப்பு தாமரை மொட்டை ஒத்திருந்ததாகக் குறிப்பு வருகிறது.

'பண்டரி தனுந்தியயன் வந்தபழ முந்தைப்
புண்டரீக மொட்டனைய மொட்டினது' (யுத் ; 3627)

அடுத்த நிலையிலுள்ள தாமரை அரும்பு மகளிர் நகிலுக்கு உவமையாகக் குறிக்கப்படுகின்றது.

'அரும்பு கொங்கையர்' (பால : 6 : 22)

மகளிர்தம் கைகளும் முகமும் செங்கமலப் போதினை ஒத்திருந் ததாகக் கம்பர் கூறுகிறார்.

'............................... செங்கமலப் போதும்
கைகளும் முகமும் ............................ காட்ட'

(பால : 13 : 54)

இவ்வாறு முகை, மொட்டு, அரும்பு, போது என்று பல நிலைகளை அடைந்த தாமரை இப்போது மலர்ந்துவிட்டது. ஆனால் அவை பொய்கையில் மலரவில்லை. வாயில்களிலும், உபரிகைகளிலும், சாளரங்களிலும் மலர்ந்தன. வீதியில் செல்லும் இராமனைப் பார்க்கும் பொருட்டு வாயில்களிலும், சாளரங்களிலும் வந்து நின்ற பெண்களின் முகங்களைத்தான் தாமரை மலர்கள் பூத்ததாகக் கம்பர் கூறுகிறார்.

'நீளை பூத்தொடர் வாயினுங் குழையொடு நெகிழ்ந்த
வாள கத்தினெ டரமியத் தலத்தினு மலர்ந்த
வாள ரத்தவேல் வண்டோடு கெண்டைகண் மயங்கச்
சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்'

(அயோ : 1 : 56)

இவ்வாறு அப்போதுதான் மலர்ந்து ஒளிவீசும் தாமரையையும் வென்றுவிட்டது ஒருமுகம். பரதன் அரசு புரிய, நீ தவக்கோலம்பூண்டு வனம் செல்ல வேண்டுமென்பது அரசர் கட்டளை என்று கைகேயி கூறியதைக் கேட்ட இராமனது முகத்தின் தன்மையைத் தான் கம்பர் இவ்வாறு வர்ணிக்கிறார்.

'இப்பொழு தெம்மனோரா லியம்புதற் கெளிதோ யாரும்
செப்பருங் குணத்திராமன் றிருமுகச் செவ்விநோக்கின்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசக முணரக் கேட்ட
அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா'

(அயோ : 3 : 108)

மலர்ந்த மலர்கள் இரண்டொரு நாட்கள் கழிந்தால் ஒளிகுறைந்து வாடுவது இயல்பன்றோ. இவ்விதம் முதிர்ச்சி பெற்ற செந்தாமரைகள், தலைவரோடு ஊடல் கொண்ட மகளிருடைய முகத்தைப் போன்று ஒருபுறம் சாய்ந்து ஒளி குறைந்ததாகக் கம்பர் உரைக்கின்றார்.

'ஊடிய மடந்தையர் வதனமொத்தன
தாடொறு மலர்ந்தன முதிர்ந்த தாமரை' (கிட் : 545)

இவ்வாறு கம்பர் தாமரைமலரின் பல்வேறு நிலைகளையும் அழகாக வேறு படுத்திக் காட்டுகிறார்.

தெய்வங்களின் உறுப்புக்கள் பலவற்றிற்கும் உவமிக்கப் பெறும் சிறப்பையுடையது தாமரை என்பதை முன்பே கண்டோம். இராமனின் முகம், கண், கரம், பாதம், உள்ளம் ஆகிய அனைத்தும் தாமரையை ஒக்கும் என்று கம்பர் கூறுகிறார்.

'அண்ணறன் றிருமுகங் கமல மாமெனில்' (சுந் : 540)

'அம்புயமன்ன கண்ணன்' (யுத் : 3651)

'செய்ய தாமரைத்தாள் பண்டு தீண்டலால்'
(அயோ : 6; 25)

'............நளினச் செங்கை' (யுத் : 1067)
'உள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதால்'

இவ்வாறு தன் மேனியிலேயே பல தாமரைகள் மலர்ந்திருக்கும் இராமனைத் 'தாமரைக் காடு' 'புண்டரீகத்தடம்' என்றெல்லாம் கூறுவதில் வியப்புண்டோ!

'கண்டனன் வதனம் வாய் கண்கை காலெனப்
புண்டரீ கத்தடம் பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்துமண் வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத் தான்றனை'
(யுத் ; 1483)

'கருமுகி ருமரைக் காடு பூத்து' (பால : 5 : 12)

இராமனுக்கு மட்டுமேயன்றி, காவியத்தில் வரும் பெரும்பான்மையான பாத்திரங்களுக்கும் தாமரையின் தன் மைகளை அளித்திருக்கிறார் கம்பர்:

காணும் காட்சிகள் பலவும் கம்பருக்குத் தாமரையை நினைவூட்டுகின்றன. இராவணனின் சபையில் ஏற்றப்பட்ட விளக்குகள், கயத்தில் மலர்ந்து விளங்கும் தாமரைகளாகக் கம்பன் கண்களுக்குக் காட்சியளிக்கின்றன.

'கயங்களின் மரைமலர்க் காடுபூத்தென
வயங்கெரிக் கடவுளும் விளக்கமாட்டலே'

(ஆர : 571)

இராமன் கானகம் நோக்கிச் செல்வதைக் காணும் பொருட்டு அழகிய மகளிர் யாவரும் வீதியை அடைந்ததினால் அவர்களி ருந்த மாளிகைகள் திருமகளால் நீங்கப்பெற்ற தாமரை மலர் களைப் போலக் காட்சியளிக்கின்றனவாம்.

'தேமரு நறுங்குழற் றிருவி னீங்கிய
தாமரை யொத்தன தவள மாடமே'

(அயோ : 4 : 203)

குருதிப் புனலில் வீழ்ந்த துண்டிக்கப்பட்ட கைத்தொகுதியை அம்புகள் கவ்வ, அவை துடிக்கின்றன. இக்காட்சி, சுறுமீன் கள் துடிப்பது போல் இருக்கின்றதாம். அச்சுறுமீன்களோ, முட்களையுடைய தாமரைத்தண்டு போன்றிருக்கின்றதாம். கம்பர் இயற்கையை எத்துணை கூர்ந்து நோக்கியிருக்கிறார் என் பதையே இந்த உவமை உணர்த்துகின்றது.

'முண்டக்கிளர் தண்டன முட்டொகுவன்
துண்டச்சுற வொத்த துடித்தனவால்'

(யுத் : 3437)

தாமரை காலையில் மலர்ந்து மாலையில் கூம்பும் தன்மைத்து. இரவெல்லாம் தன் தலைவனான கதிரவனுக்காகக் காத்திருந்து, காலையில் அவன் கிழ்த்திசையில் காலடி வைக்க ஆரம்பித்ததும் முகம் மலர்ந்து சிரிக்கின்றது. பின் அவன் செல்லும் திசையெல்லாம் தானும் திரும்புகிறது. மாலையில் அவன் மேற்றிசையில் மறைந்தவுடன் கூம்பி விடுகிறது. அன்றாடம் நடைபெறும் இந்நிகழ்ச்சி பல இடங்களில் கம்பன் காவியத்தில் இடப்பெற்றுள்ளது. சூரியனைக் கண்டு கமலம் மலர, இராமனைக் கண்டு சீதையின் முகமாகிய தாமரை மலர்கிறது.

'செஞ்செவே சேற்றிற் றோன்றுந் தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கிய விரிந்த வேறோர்
அஞ்சன நாயி றன்ன வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந் தாமரை மலர்ந்த தன்றே'
(சுயோ : 6 : 56)

புராண அடிப்படையில் நோக்கும்போது இரு செய்திகள் தாமரையுடன் தொடர்புடையனவாய்க் கம்பராமாயணத்தில் கூறப்படுகின்றன. திருமாலின் உந்தி அம்புயத்துதித்தவன் பிரம்மன் என்ற கருத்துப் பல இடங்களில் கூறப்படுகின்றது.

'உந்தியம் புயத் துதித்தவன்' (பால : 9 : 55)

திருமகள் தாமரையை உறைவிடமாகக் கொண்டவள் என்ற கருத்தும் பலமுறை கூறப்பட்டுள்ளது.

'செய்ய தாமரைச் செல்வி' (பால : 25 : 3)

சில மரங்களைக் குறிப்பிடுங்கால், அவற்றை உறைவிடமாகக் கொண்ட சில பறவைகளும் உடன் பேசப்படுவதைச் சங்க இலக்கியங்களில் பல பகுதிகளிலும் காணலாம். வேங்கையொடு மயிலும் (ஐங் : 294), மாவொடு குயிலும்

(அகம் : 341), பனையொடு அன்றிலும் (அகம் : 305), யாவொடு பருந்தும் (அகம் : 19) தொடர்புடையவையாய்ப் பேசப்படுகின்றன. இதைப்போன்று தாமரையுடன் தொடர்புடைய பறவையாய் அன்னம் இராமாயணத்தில் பல இடங்களிலும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

'பள்ளிகொள்வன பங்கயத் தன்னமே'

(பால : 2 : 33)

---

# தும்பை

Labiatae என்ற குடும்பத்தைச் சேர்ந்த Leucas Aspera என்றழைக்கப்படும் இது ஒரு சிறு செடி. இலைகள் 3 அங்குலம் வரையில் நீண்டு, சுமார் அரை அங்குலம் அகலமுடையதாய் பல் போன்று விளிம்புள்ளவையாக இருக்கும். பூக்கள் வெண்மையானவை. பூங்கொத்துக்கள் ஒரு கணுவைச் சுற்றிலும் தண்டைச் சூழ்ந்து இருப்பது போலத் தோன்றும். இத்தகைய பூங்கொத்து Verticillaster எனப்படும். தும்பைப் பூக்கள் நறுமணமுடையவை. அதனால்தான் 'கமழ் பூந்தும்பை' (புறம் : 283) என்று புறப்பாடலொன்று கூறுகிறது.

போருக்குச் செல்வோர் தும்பைமாலை சூடுதல் பண்டைத் தமிழ் மரபாகும். இக்காரணம் பற்றியே இருபெரு வேந்தரும் ஒரு களத்துப் பொருதலைக் கூறும் திணை தும்பைத் திணை என்றழைக்கப்பட்டது. பெருவீரனான அதியமான் நெடுமான் அஞ்சி தும்பை சூடி நிற்கும் காட்சியைக் கண்டு மனமுவந்து ஔவை,

'அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்
திரண்டுநீடு தடக்கை என் ஐ' (புறம் : 96)

என்று ஏத்திப் பாடுகிருர். கம்பர் இம்மரபை ஒட்டிப் பாடியுள்ளார். யுத்தகாண்டத்தில் மட்டுமே இம்மலர் பற்றிய குறிப்புக்கள் அமைகின்றன.

திருமாலின் அவதாரமான இராமன் துளவொடு தும்பையுஞ் சூடிப் போருக்கெழுந்த காட்சியைக் கம்பர் பெருமிதத்துடன் பாடுகிருர்.

'துளவொடு தும்பையுஞ் சுழியச் சூடினுன்'

(யுத் : 1070)

'இராவணனும் தும்பை சூடினுன்' (யுத் : 1186)

வேள்வி செய்கையில், வேள்வித் தீயில் தும்பைமலர்களை இடும் வழக்கமிருந்ததை, இந்திரசித்தின் வேள்வி பற்றிய குறிப்பினின்று அறிகிருேம்.

'அம்பி ஞற்பெருஞ் சமிதைக ளமைத்தன னனலில்
தும்பை மாமலர் தூவினன்.......................................'

(யுத் : 2539)

---

# துழாய் (துளசி)

இந்துக்களால் மிகப்புனிதமாகக் கருதப்பட்டு வரும் துளசி, Labiatae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு சிறு செடியாகும். Ocimum Sanctum என்பது இதன் தாவரவியற் பெயர். கம்பராமாயணத்தில் துழாய், துளவம் என்ற பெயர்களும் துளசியைக் குறிக்கின்றன. இச்செடி 1½ அடி முதல் 2 அடி உயரம் வரையிலும் வளரும். பூக்கள் கொத்துக்களாக

இலைக்கக்கங்களில் அல்லது கிளை நுனிகளில் உண்டாகும் பூங் கொத்து Thyrsus எனப்படும். பூக்கள் கொத்தாக மலர்வதை யும், மணம் பொருந்தியிருப்பதையும் 'நாறிணர்த் துழாய்' என்று பரிபாடல் (15 : 15) பகர்கின்றது. கம்பரும் 'இணர்த் துழாய் தொங்கல்' (யுத் : 3990) என்று குறிக்கிறார்.

துழாய்மாலை திருமாலுக்குரியதாகப் பண்டு தொட்டு இன்றுவரை கருதப்பட்டு போற்றப்படுகிறது. இராமனும் திருமால் அவதாரமாகையால் அவன் துளசிமாலையை அணிந் திருந்தமையைப் பல இடங்களில் கம்பர் சுட்டுகிறார்.

'இலைகொள் தண்டுழா யிலங்குதோ ளிராமன்'

(யுத் : 1166)

இலக்குவனும் இராமனைச் சார்ந்திருந்தமையால் தான் அவன் துளசிமாலையை அணிந்திருந்தான் போலும் (யுத் : 2859) இராமபக்தனாகிய அனுமனும் துழாய் மாலையை அணிந்திருந் தான் என்பதை 'அரும்பியர் துளவப் பைந்தார் அனுமன்' என்ற தொடரால் உணரலாம். இன்றும் திருமால் கோயில் களில் துளசி மிகவும் போற்றப்படுகிறது.

---

## தூதுளம்

Solanaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இச்செடி Solanum Trilobatum என்றழைக்கப்படுகிறது. இதனை ஆங்கி லத்தில் Climbing Brinjal என்பர்.

இதனைச் சிறு புதர்ச்செடி எனலாம். தண்டில் சிறிய முட்கள் உண்டு. இதன் கனி, கம்பராமாயணத்தில் ஒரே இடத்தில் மட்டும் சுட்டப்படுகிறது. இலங்கை வந்தடைந்த

அனுமன் அங்கு கண்ட பல காட்சிகளையும் ஆசிரியர் வர்ணிக்கிறார். இலங்கையிலுள்ள அரக்கியரின் வாய் தூதுளங்கனியை வென்றது போன்று செந்நிறம் பெற்று விளங்குகிறது. இத்தகைய சிவந்த வாய்கள், கணவருடன் கூடின காரணத்தால் வெண்ணிறமாக மாறுகின்றன.

'தூதுளங் கனியைவென்று துவர்த்தவாய்
[வெண்மை தோன்ற'
(சுந் : 203)

---

# தேக்கு

இது மிகப் பெரிதாக வளரும் ஒரு மரம். Verbenaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்தது. Tectona Grandis என்பது இதன் தாவரவியற்பெயர். ஆங்கிலத்தில் இதனை Teak Tree என்பர். கோடைகாலத்தில் இம்மரம் தன் இலைகளை உதிர்த்து விட்டுப் பல மாதங்கள் இலைகளில்லாமல் நிற்கும். மூவாயிரம் அடி உயரம் உள்ள மலைகளில் இது நன்றாக வளர்கிறது. இவ்வாறு மலையில் சிறப்பாக வளரும் தன்மையை 'தேக்குறு சிகரக் குன்றம்' (சுந் : 8) என்பதால் அறியலாம்.

தேக்கின் இலைகள் பெரிதாகவும் உறுதியாகவும் இருக்கும். இத்தகு இலைகளைக் கூரையாக வைத்து இலக்குவன் பர்ணசாலை அமைத்ததாகக் கூறப்படுகிறது.

'தேக்கடைப் படலையிற் கூரைசெய்து'
(அயோ : 8 : 47)

இலைகள் பெரிதாக இருப்பதால், மக்கள் அவற்றில் உணவுண்ட செய்தியைச் சங்கப்பாடல்களால் அறியலாம்.

'புகரரைத் தேக்கின் அகலிலே மாந்தும்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்'

(அகம் : 107)

---

# நந்தி (நந்தியாவட்டை)

Apocynaccae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Tabernaemontana Coronaria என்றழைக்கப்படுகிறது. இது ஒரு சிறு புதர்ச்செடி. இலைகள் நல்ல பச்சைநிறமாகவும், ஓரங்கள் அலைபோன்றும் இருக்கும். மலர்கள் தூய வெண்மை நிறத்தவை. அகவிதழ்கள் இணைந்து குழாய் போன்றிருக்கும். இதழ்க் குழாயின் நடுவிலுள்ள துளை மஞ்சள் நிறத்தில் இருக்கும். இத்துளையைக் கம்பர் 'நந்தியின் றிரட்பூச் சேர்ந்த பொங்கு பொற் றுளை' (கிட் : 759) என்று குறிக்கிறார். நந்தியாவட்டையின் இத்தகு பொன்துளைகளைச் சீதையின் உந்திச் சுழிக்கு ஒப்பாகக் கூறினாலும் அது பொருந்தாத உவமையே என்று கூறி, கங்கையின் நீர்ச்சுழி ஒன்றே அவளுந்திக்கு ஒப்பாகும் என்று மொழிகிறான் இராமன்.

'சிங்கலில் சிறுகூ தாளி
நந்தியின் றிரட்பூச் சேர்ந்த
பொங்குபொற் றுளையென் றாலும்
புல்லிய வுவமைத் தாமால்
அங்கவ ளுந்தி யொக்குஞ்
சுழியெனக் கணித்த துண்டால்
கங்கையை நோக்கிச் சேறி
கடலினு நெடிது கற்றோய்' (கிட் : 759)

---

## நரந்தமரம்

கம்பன் காவியத்தில் இரு இடங்களில் நரந்தமரம் பற்றிய குறிப்பு வருகிறது. நரந்தம் என்பது ஒரு நறுமணப் புல்லையும் குறிக்கும் ஆனல் இந்த இரு இடங்களிலும் 'நரந்தம்' என்பது நாரத்தை என்னும் மரத்தைக் குறிக்கின்றது என்பதை உரையால் உணரலாம். நாரத்தை என்பது Rutaceae என்னும் குடும்பத்தினுட்பட்ட Citrus என்னும் இனத்தைச் சேர்ந்த மரம். இராமனும் இலக்குவனும் சுக்கிரீவன், அனுமன் என்பவர்களுடன் சேர்ந்து புகுந்த சோலையில் நாரத்தை மரங்கள் அடர்ந்து வளர்ந்திருக்கின்றன. (கிட்:107)

பிரிந்தவர் நெஞ்சை வருத்தும் நடுயாமத்தில் மலர்ந்த மலராக நரந்த மலர் பேசப்படுகிறது.

'விரிந்தன நரந்தமுதல் மென்மலர் களாகத்
..............................................................
எரிந்தன பிரிந்தவர்த மெஞ்சுதனி நெஞ்சம்'

(சுந் ; 258)

---

## நறைக்கொடி

Asclepiadaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதன் பெயர் Hemidesmus Indicus என்பது. கம்பர் இதைப்பற்றி ஒரே இடத்தில் மட்டுமே குறித்துள்ளார். கிட்கிந்தைமலையில், பலவித நறுமணப் பொருட்களிலும் தோய்ந்த தென்றல் தன் மீது வீச, சுக்கிரீவன் இனிது துயில்கின்றான். இத்தகைய தென்றல் எந்தெந்தப் பொருட்களில் தோய்ந்து வந்தது என்று கூறுமிடத்துக் கம்பர் நறைக் கொடியைக் குறிக்கிறார்.

'சிந்து வாரந் திருநறை தேக்ககில்
.................................................தாவிய
மந்த மாருதம் வந்துற வைகுவான்'

(கிட் : 572)

---

# நாவல்

கண்ணைக் கவரும் அழகுடன் மிளிரும் கனிகளையுடைய இது Myrtaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Eugenia Jambolana என்னும் மரம். இதனை ஆங்கிலத்தில் Java Plum என்றழைப்பர். இது உயரமாக வளரும் ஓர் அழகிய மரம். இக்காரணம் பற்றியே 'நாவலோங்கும் சேணுயர் குன்றம்' (கிட் : 462) என்று கூறப்பட்டிருக்கிறது. இம்மரம் இந்தியா, பர்மா, இலங்கை, மலேயா முதலிய இடங்களில் சாதாரண மாகக் காணப்படும் ஒன்றாகும்.

இதன் மலர்கள் சிறியவை; வெண்மையானவை. நன்றாகக் கனிந்த நாவல்கனி இன்சுவை பயப்பது. இத்தகு சுவை மிக்க கனியை 'தீங்கனி நாவல்' என்று குறிக்கிறார் கம்பர் (கிட் : 462). அழகிய இக்கனிகளை வண்டுடன் ஒப்பிட்டுக் கூறி அழகியதோர் காட்சியை அமைத்துத் தருகிறார் சங்கப்புலவ ரொருவர். கடற்கரைச்சோலையில் நாவற்கனி பழுத்துதிர்ந் திருக்கின்றது. நாவற்கொத்தினைக் கண்ணுற்ற வண்டொன்று அக்கொத்தினைத் தன் இனத்தின் திரள் என மயங்கி அத்திரளை நோக்கிமொய்க்க விரைந்தது. நாவற்கனிக்கும் தும்பிக்கும் வேற்றுமை கண்டுணராத நண்டொன்று தும்பியைப் பழமென நினைத்துப் பற்றிக் கொண்டது. அகப்பட்ட வண்டு விடுதலை கருதி துன்ப ஒலி எழுப்ப யாழிசை போன்ற அவ்வொலி கேட்டு விரைந்து வந்த நாரையைக் கண்டு அஞ்சி நண்டு வண் டினை விடுக்கின்றது. (நற் : 35)

நாவலம் பெருந்தீவு என்ற தீவின் பெயர் அங்குள்ள தெய்வத்தன்மை பொருந்திய நாவல் மரத்தால் வந்த பெயரா கும். இத்தீவினைச் சம்புத் தீவு என்றும் வழங்குவதுண்டு. இத் தீவினைப் பற்றி மணிமேகலை 'தீங்கனி நாவலோங்கு மித்தீவு' (மணி : 2 : 1) என்று உரைக்கின்றது. இறந்து கிடக்கும்

வானரச் சேனைகளை உயிர்ப்பிக்கும் பொருட்டு மருந்து தேடிச் செல்லும் அனுமன் வழியில் தெய்வத் தன்மைபொருந்திய நாவல் மரத்தைக் காண்கிருன்.

'நாவலம் பெருந்தீ வென்ரு
நளிர்கடல் வளாக வைப்பிற்
காவன்மூன் றுலக மோதுங்
கடவுண்மா மரத்தைக் கண்டான்'

(யுத் : 2685)

மிகப்புனிதமாகக் கருதப்படும் இம்மரத்தைக் கோயில் களின் சுற்றுப்புறங்களில் வளர்ப்பதுண்டு.

---

# நெல்லி

Euphorbiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Emblica Officinalis என்றழைக்கப்படுகிறது. Phyllanthus Emblica என்றும் இது வழங்கப்படுகிறது.

இது நடுத்தரமான ஒரு மரம். இந்தியாவிலும் இலங்கை, மலேயா, மலேயாத்தீவுகள், சீனு ஆகிய நாடுகளி லும் வளர்கிறது. வறண்ட இலையுதிர் காடுகளிலும், 4500 அடி வரை உயரமான குன்றுச் சரிவுகளிலும் இம்மரம் காணப்படும்.

இம்மரம், பார்வைக்குக் கூட்டிலைகள் (compound leaves) உள்ளது போலத் தோன்றும். உண்மையில் கூட்டிலை கள் போன்று காண்பவை சிறிய கிளைகளாகும். அக்கிளைகளில் மிகச்சிறிய தனியிலைகள் (simple leaves) மாற்ருெழுங்கில் பொருந்தியிருக்கும். இங்ஙனம் சிறிய இலைகளைக் கொண்டிருப் பதால் 'சிறியிலை நெல்லித் தீங்கனி' என்று புறப்பாடலொன்று (91) கூறுகிறது.

பூக்கள் ஒரு பாலின (unisexual) ஆண்பூ, பெண்பூ என்ற இரண்டும் ஒரே மரத்தில் உண்டாகும். பூக்கள் மிகச் சிறியவை; எளிதில் உதிர்ந்து விடும். கனி Drupe என்னும் உள்ளோட்டுச் சதைக்கனி. இது உருண்டு திரண்டிருப்பதால் இதனைத் 'திரள்காய்' (அகம் : 291) என்றும், 'குவிகட் பசுங் காய்' (அகம் : 315) என்றும் சங்கநூல்கள் கூறுகின்றன. கனி யில் 6 பிரிவுகள் காணப்படும். பசியதாய், பளபளப்பாய் இருப்பதால் நெல்லிக் கனியைப் பளிங்குடன் ஒப்பிட்டுச் சங்கப் பாடல்கள் கூறுவது பொருத்தமாக இருக்கிறது.

'மையில் பளிங்கின் அன்ன தோற்றப்
பல்கொள் நெல்லிப் பைங்காய்...........'

(அகம் : 399)

நெல்லிக்கனி கசப்பு, புளிப்பு, இனிப்பு எனப் பலசுவை களைக் கொண்டிருப்பதால் இதனைத் 'தீம்புளி நெல்லி' என்றும், இது பல்லைக் கூசச் செய்வதால் 'நெல்லி தின்ற முள்எயிறு தயங்க' (குறுந் : 262) என்றும் சங்க இலக்கியங்கள் கூறுவது உற்று நோக்கத் தக்கது.

உருண்டிருக்கும் நெல்லிக்கனியை உள்ளங்கையில் அடக் குவது மிக எளிது. சூரியகுலத்தில் தோன்றிய ஒரு மன்னன் இந்நிலவுலகம் முழுவதையுமே, நெல்லிக்கனியை உள்ளங்கை யில் அடக்குவது போன்று எளிதாகத் தன் கைவசப்படுத்தி ஞன் என்று கூறியிருப்பது அம்மன்னனின் வெற்றிச் சிறப்பைக் காட்டுகிறது.

'கயற்கடல்சூ ழுலகெல்லாங் கைந்நெல்லிக் கனி யாக்கி
இயற்கைநெறி முறையாலே யிந்திரற்கு மிட ரியற்றி
மூயற்கறையின் மதிக்குடையா யிவர் குலத்தோன் முன் [ஞெருவன்
செயற்கரிய பெருவேள்வி யொருநூறுஞ் செய்தமைத் [தான்'

(பால : 11 : 10)

உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனியின் உருவம், அதனுள் இருக்கும் கொட்டை, வரைகள், சதைப்பற்று முதலியவை தெளிவாய்ப் புலப்படுகின்றன. எனவே 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல' என்பது ஒரு பழமொழியாகவே அமைந்துவிட்டது. கம்பர் இப்பழமொழியைக் கூறும்முகமாகவே நெல்லியைச் சுட்டுகிறார். வசிட்டமாமுனியைப் பற்றிக் கூறுகையில், கரதலத்திலுள்ள நெல்லிக்கனியைப் போன்று வேதங்களின் உண்மைப்பொருளை ஐந்திரிபறக் கற்றவர் என்று குறிப்பிடுகிறார்.

'கரதல முற்றெளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட
வரதன்.... .. .......................................' (பால : 5 : 120)

இந்த உவமை, கம்பரால் பலமுறை கையாளப்பட்டுக் கவின் பெறுகிறது.

நெல்லிக்காய் மிகுந்த மருந்துச்சத்து வாய்ந்ததால், நாட்டு மருத்துவத்தில் இது ஒரு சிறந்த இடத்தைப் பெறுகிறது. இதன் இலை, பட்டை, வேர், உலர்ந்த கனி என்று எல்லாமே, மருந்தாகப் பயன்படுகின்றன. இது விட்டமின் 'சி' மிகுதியாக உள்ள ஒரு கனியாகும்.

நெல்லியின் குடும்பத்தைச் சேர்ந்த அரிநெல்லி என்றொரு மரமும் உண்டு ஆனால் இலக்கியங்களில் கூறப்படுவது இந்த அரிநெல்லி அன்று. இது இந்தியாவிற்குச் சொந்தமானது அன்று; மலேயாவிலிருந்து கொண்டுவரப்பட்டதாகும். அரிநெல்லியிலிருந்து பிரித்துணர்வதற்காகத் தற்காலத்தில் காட்டுநெல்லி என்றும் பெருநெல்லி என்றும் அழைக்கப்படும் நெல்லியையே இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அரிநெல்லி Phyllanthus Acidus என்றழைக்கப்படுகிறது.

---

# நொச்சி

Verbenaceae என்னும் குடும்பத்துட்பட்ட இது Vitex என்னும் இனத்தைச் சேர்ந்தது இதில் பலவகை உண்டு. இவை சிறு மரமாக வளரும். மூவிலைக் கூட்டிலைகளையுடைய வகை Vitex trifolio (Three leaved chaster tree) என்றும், ஐந்திலைக் கூட்டிலைகளையுடைய வகை Vitex Negundo (Five leaved chaster tree) என்றும் அழைக்கப்படுகின்றன.

இதனைச் சிந்துவாரம் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடு கின்றன.

'வஞ்சி பித்திகம் சிந்துவாரம்' (குறிஞ்சிப் : 89)

'சிந்துவாரந் திசைதொறுஞ் சென்றன' (சுந் : 724)

நொச்சியின் கொப்புகள் கருமையாக இருப்பதையும், அக் கொம்புகளில் முல்லைக்கொடிகள் படர்ந்து வளர்வதையும் அகப்பாடலொன்று சுட்டுகிறது.

'தாழ்வி ஞெச்சி சூழ்வன மலரு
மௌவல் மாச்சினை காட்டி' (அகம் : 23)

நெய்தல் நில நண்டின் கண்கள் நொச்சியரும்பு போன் றிருப்பதை

'நொச்சி மா அரும்பன்ன கண்ண
எக்கர் ஞெண்டு.....................................' (நற் : 267)

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம்.

பழந்தமிழ் மக்கள் போரின் ஒவ்வொரு நிலையையும் ஒவ் வொரு மலர்களால் குறித்தனர் இவ்வாறு போரின் நிலைகளைக் குறிக்கப்பயன்படுத்திய மலர்களில் நொச்சியும் ஒன்று. பகைவர்

அரணை அழித்தல் உழிஞைத்திணை எனப்பட்டது. அரணுக்கு வெளியே நின்று தாக்கும் மன்னன் அணியும் மாலை உழிஞை மாலை. அரணகத்து இருந்து போரிடும் மன்னன் சூடும் மாலை நொச்சி. இவ்வாறு நொச்சி மாலை அணிவது பற்றி 272-ஆவது புறப்பாடல் கூறுகின்றது. கம்பராமாயணத்திலும் இச் செய்தி குறிக்கப்படுகின்றது. இராமனின் குரங்குப்படைகள் தன் அரணின் எல்லா வாயில்களிலும் வந்து சூழ்ந்தது கண்டு இராவணன் சற்று மனம் கலங்குகின்றான். இதைக் கண்ட நிகும்பன், பகைவரின் உழிஞைப் பூக்களை அழித்தற்கு நம்முடைய ஆயிரவெள்ளம் வீரர்கள் நொச்சி சூடி நிற்கையில் கலங்குவது ஏனோவென்று கேட்டு இராவணனைத் தேற்றுகின்றான்.

'அழுவநீர் வேலையன்ன வாயிர வெள்ளமன்றே
உழிஞையைத் துடைக்க நொச்சி யுச்சியிற்
[கொண்டதுன்னூர்
(யுத் : 896)

---

# பச்சிலை மரம்

இது Guttiferae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Garcinia Xanthochymus என்னும் மரமாகும். இதனை Mysore Gamboge என்றும் அழைப்பதுண்டு. நடுத்தர அளவுள்ள இம்மரத்தைப் பற்றி மிகுதியான விளக்கங்கள் எதையும் கம்பர் தரவில்லை. 'தமாலம்' என்ற பெயர் இம்மரத்தைக் குறிக்கின்றது. சித்திரகூட மலைச்சாரலில் பச்சிலை மரங்கள் வளர்ந்திருப்பதைச் சீதைக்குக் காட்டுகிறான் இராமன்.

'................ ஏலமுந் தமாலமுஞ் சுடர்தரு சாரல்'
(அயோ : 8 ; 2)

சண்பகம், குருக்கத்தி, மல்லிகை போன்ற மலர்களுடன் தமாலத்தின் மலர்களையும் இணைத்துத் தொடுத்த மாலையை மாதவி அணிந்திருந்தாள் என்பதைச் சிலப்பதிகாரத்தால் அறியலாம் (சிலம்பு : 8 ; 45)

---

# பலா

Moraceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Jack Tree என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படுகிறது. இதன் தாவரவியற் பெயர் Artocarpus Integra என்பதாகும்.

தேன் போல இனிய சுளைகளுள்ள பலாக்கனி முக்கனிகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. மாமுனிவரான ரிஷ்ய சிருங்கருக்கு வாழை, மா இவற்றுடன் பலாக்கனியையும் அளித்து உபசரித்ததையும் (பால : 5 : 42), சித்திரகூட மலையில் வாழும் முனிவர்களுக்குக் குரங்குகள் முக்கனிகளை அளித்ததையும் (அயோ : 8 : 33) கம்பர் குறிக்கிறார்.

இது 50 அடிக்கு மேல் உயரமாக வளரும் மரம். இலைகள் மாற்றொழுங்கின (alternate), பூக்கள் மிக நுண்மையானவை. இவை இரண்டு போர்வை போன்ற உறுப்புக்களால் மறைக்கப்பட்டிருக்கும். (Innumerable flowers, all of one sex and each minute in size, cover a small cylindrical appendage and the whole is enclosed in two green sheaths). இவ்வாறு பூக்கள் வெளிப்படையாகத் தெரியாமல் இருக்கும் காரணம் பற்றியே இதனைக் 'கோளிப்பாகல்' என்று இலக்கியங்கள் கூறுகின்றன. (சிலம்பு : கொலைக்களக் : 24). பூக்கள் ஒருபாலின ( unisexual ). பூங்கொத்து கதிர் (spike) என்னும் வகையைச் சேர்ந்தது. ஒரு பூங்கொத்திலுள்ள பல

பூக்களின் கனிகள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுக்கனியாக (collective fruit) உருவெடுக்கும். முதலில் பூக்கள் வெளியில் தோன்ருமல் இருந்து, பின் பெருங்கனியாகிப் பிறருக்குப் பயனையளிக்கும் தன்மை பற்றி இக்கனியை, சொல்லாமற் செய்யும் பெரியோருடன் ஒப்பிட்டுத் தனிப்பாட லொன்று கூறுகிறது. இக்காரணம் பற்றியே சிலப்பதிகாரமும் 'மாண் புடை மரபிற் கோளிப் பாகற் கொழுங்கனித் திரள் காய்' (கொலைக் : 23-24) என்று பலவின்கனியை மாண்புடை மக்க ளோடு ஒப்பிட்டுக் கூறுகின்றது. கனியின் புறத்தோலில் சாய்சதுரவடிவில் காணும் எல்லைகள் ஒவ்வொன்றும் ஒவ் வொரு பூவிற்குரியது. கனியில் சுளையாகத் தின்னுவதற்குரிய பாகம் இதழ்க்குழாய் ஆகும். (The sweet edible flakes represent the perianth of the flowers which have become thick and succulent). சுளைகள் சற்று வளைந்திருப்பதால் 'கூன்சுளை' (கிட் : 911) என்று கம்பர் குறிப்பிடுகிருர்.

முதிர்ந்த மரங்களின் அடிப்புறத்திலிருந்தே கனிகள் தோன்றும். மிக முதிர்ந்த மரங்களில் மண்ணின் வெளியே தோன்றும் வேர்களும் கனிகளைத் தாங்கி நிற்கும். (very old trees even bear fruit on the exposed roots). இக்காரணம் பற்றியே கம்பர் இதனைச் 'சூலடிப்பலா' (கிட் : 906) என்று குறிப்பிடுகிருர்.

இளம் குரங்குகள் பலாச்சுளைகளைத் தேனில் தோய்த் துச் சுவைத்து உண்ணும் காட்சியை மிக அழகாக வடித் தளிக்கிருர் கம்பர்.

'சேட்டிளங்கடு வன்சிறு புன்கையிற்
கோட்ட தேம்பல வின்கனிக் கூன்சுளை
தோட்ட மைந்தபொ தும்பரிற் றூங்குதேன்
ஈட்ட மங்கதிற் ருேய்த்தினி துண்ணுமால்'

(கிட் : 911)

———

# பாதிரி

Bignoniaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Stereospermum Suaveolons என்ற மரத்தைத் தான் சங்க இலக்கியங்கள் பாதிரி என்றும், பிற்கால இலக்கியங்கள் பாடலம் என்றும் அழைத்தன. சங்க நூல்களில் பாதிரி என்று வழங்கப்பட்ட இம்மரம் முதன்முதலாக, சிலப்பதிகாரத்தில் தான் பாடலம் என்றழைக்கப்படுகிறது.

'பாடலந் தன்னொடு பன்மலர் விரிந்து'

கம்பராமாயணத்திலும் பாடலம் என்ற பெயராலேயே இது அழைக்கப்படுகிறது. பாதிரி மலரின் நிறம் யாழின் போர்வையின் நிறத்தோடு ஒத்திருப்பது மட்டுமன்றி, அதன் அமைப்பும் யாழின் போர்வையை ஒத்திருப்பதாகப் பெரும்பாணாற்றுப் படை கூறுகின்றது.

பாதிரி மலர்கள் வேனிற்காலத்தில் பூக்கும் தன்மையுடையன. இதை 'வேனிற் பாதிரி' என்றே குறுந்தொகையும் (167), அகநானூறும் (257) கூறுகின்றன. இவ்வாறு வேனிலில் பூக்கும் பாதிரி மரங்கள் கார்காலத்தில் மலர்களின்றி வெறுமையாக இருந்ததைக் கம்பர் காட்டுகிறார்.

'பாடலம் வறுமை கூர' (கிட் : 457)

இராவணன் நாட்டில் உள்ள ஒரு சோலையில் வளர்ந்துள்ள பாதிரி மரங்கள் பவழமயமாக விளங்குகின்றன.

'.......................................... பாடலம் பவழ மன்னோ'

(ஆர : 649)

---

# பிடவம்

Rubiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்ததும், Bedaly Emetic Nut என்ற ஆங்கிலப் பெயரால் அழைக்கப்படுவது மாகிய இதனைத் தாவரவியலார் Randia Malabarica என்பர். இது நேராக வளரும் ஒரு புதர்ச் செடியாகும்.

கார்காலத்தில் பிடவம் மலர்ந்து கானகத்திற்கு அழகி னைக் கொடுக்கின்றது என்பதை,

'பிடவம் மலரத் தளவம் நனையக்
கார் கவின் கொண்ட கானம்' (ஐங் : 499)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலால் அறியலாம்.

வெண்ணிறப் பிடவமலர்கள் கண்ணிபோன்று பூக்கும் என்பதை அகப்பாடலொன்று

'சிறு கரும்பிடவின் வெண்தலைக் குறும்புதல்
கண்ணியின் மலரும்.......................................'

(அகம் : 34)

என்று கூறுகிறது இத்தகைய வெண்ணிறமான பிடவமலர் களை விளக்கக் கம்பர் புதியதொரு உவமையைப் பயன்படுத்து கிறார். இடைப்பெண்கள் பால்மிடாக்களிற் சொரிந்த பாலி னின்று வழிகின்ற நுரையைப் போன்று பிடவத்தின் வெண் ணிற மலர்கள் காட்சியளிக்கின்றனவாம்.

'மொழிந்த தேனுடை முகிழ்முலை யாய்ச்சியர் முழவிற்
பிழிந்த பால்வழி நுரையினைப் பொருவின பிடவம்'

(கிட் : 478)

பிடவமலர்கள் நறுமணம் மிக்கவை. பிடவின் நறுமணம் காடு முழுவதும் கமழ்வதாக முல்லைப்பாட்டு (முல்லைப் : 25) கூறுகின்றது. இத்தகைய பிடவின் நறுமணத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு ஓர் அழகிய ஊடற் காட்சியை வரைந்தளிக்கிறார் கம்பர். குராமலரும் பிடவமலரும் சிந்திய சூழலில் துயின்றெழுந்ததனால் அம்மலர்களின் மணம் படியப் பெற்ற ஆண்மயிலைக் கண்டு, பிரிந்திருந்த பெண்மயில், வேற்றுப் பெண்மயிலோடு கலந்ததினால் தான் இம்மணம் பெற்றது என்று கருதி ஊடல் கொண்டு திரியும் காட்சி என்றும் நம் மனதை விட்டகலாது.

'பூவலர் குரவொடும் புடைதவழ் பிடவினும்
மாவலர் சொரிசூழற் றுயிலெழு மயிலொன்றின்
தூவியின் மணம்நாறத் துணைபிரி பெடை தானச்
சேவலொ டுறவூடித் திரிவத னியல்காணாய்'

(அயோ : 7 : 7)

---

# புன்னை

சங்ககாலப் புலவர்களாலும், பிற்காலப் புலவர்களாலும் போற்றிப் பாடப்பட்ட மரங்களில் புன்னையும் ஒன்றாகும் Guttiferae என்ற குடும்பத்தைச் சேர்ந்த இம்மரத்தின் பெயர் Callophyllum Inophyllum. இதனை Alexandrian Laurel என்றும் அழைப்பதுண்டு.

புன்னை மரத்தின் கிளை, இலை, பூ, தாது ஆகியவற்றைப் பற்றி மிகப் பொருத்தமான செய்திகளை அழகுற நற்றிணைப் பாடலொன்று தருகிறது.

'இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்தன்ன பாசிலை யகந்தொறும்
வெள்ளி யன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னி னன்ன நறுந்தா துதிரப்' (நற் : 249)

இப்பாடலில் கூறப்படும் செய்திகள் தாவரவியலார் கூறும் செய்திகளோடு முற்றிலும் பொருந்தியிருக்கின்றன. புன்னை மரத்தின் கிளைகளைக் 'கருங்கோடு' என்று கூறியிருப்பது உண்மையே (The bark is dark grey and brown in colour). இதன் இலைகளை 'நீலத்தன்ன பாசிலை' (dark green leaves) என்று கூறியிருப்பதும், பூக்களை 'வெள்ளியன்ன விளங்கிணர்' (Flowers white) என்று கூறியிருப்பதும், மகரந்தப் பொடிகளை 'பொன்னி னன்ன நறுந்தாது' (yellow stamens) என்று கூறியிருப்பதும் முற்றிலும் பொருந்துவன. பண்டைத் தமிழ்ப் புலவர்கள் இயற்கையுடன் எவ்வளவு ஒன்றி வாழ்ந்தார்கள் என்பதற்குச் சான்றாக இந்த நற்றிணைப் பாடல் விளங்குகிறது.

கடற்கரையை அடுத்த சூழ்நிலையில் கூட்டமாகப் புன்னை மரங்கள் காணப்படுவதாகத் தாவரவியலார் கூறுவர் சங்கநூல்களிலும் புன்னைமரம் நெய்தல் நிலத்திற்குரிய மரமாகவே கூறப்பட்டிருக்கின்றது. நெய்தல் நில மக்களின் முன்றிலில் புன்னை மரங்கள் மலர்ந்து விளங்குவதைக் கம்பரும் பாடுகிறார்.

'................படர் திரைப் பரதர் முன்றில்
பொற்கிழி விரித்தன சினைப் பொதுளு புன்னை'
(கிட் : 505)

இவ்வாறு கடற்கரையில் வளர்வதால் புன்னைமரம் 'எக்கர் புன்னை' (அகம் : 20), 'கானல் புன்னை' (நற் : 74) என்றெல்லாம் அழைக்கப்பட்டது. புன்னைமரம் கானலில் கூட்டமாக வளர்வதால் 'புன்னையம் பொதும்பர்' (யுத் : 333) என்று கம்பர் குறிப்பிடுகிறார்.

புன்னைமரம் கடற்கரைச் சூழலில் வாழ்வதால் பொதுவாக நேராக வளர்வதில்லை. இவ்வாறு கிளைகள் நேராக வளராமல் வளைந்து காணப்படுவதால் தான் 'முடமுதிர் புன்னை' (அகம் : 10), 'முடத்தாட் புன்னை' (அகம் : 180) என்றெல்லாம் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. நற்றிணைப்பாடலொன்று 'குடக்கு வாங்கு பெருஞ்சினை' (நற் : 167) என்று கூறியிருப்பது முற்றிலும் உண்மையான செய்தியாகும். கடற்கரையில் வீசும் ஈரக்காற்றினல் ஊறு ஏற்படாதிருப்பதற்காகப் புன்னையின் கிளைகள் மேற்கு நோக்கி வளைந்து நீட்டியிருப்பதுண்டு. இதே செய்தி நற்றிணை 91-ஆவது பாடலிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

புன்னையின் இலைகள் மிக அழகானவை. நெருக்கமாக வளரும் இலைகள் கரும்பச்சையாகவும், பளபளப்பாகவும் இருக்கும்; மெழுகு பூசினற்போல் வழுவழுப்பாக ஒளிவிடும் புன்னை இலைகள் கண்ணைக் கவரும். இத்தகைய கரும்பச்சையான இலைகளுக்கிடையே வெண்மையான மலர்கள் மலர்ந்திருப்பது அழகான காட்சியாகும். கிளைகள் நிறைய மலர்கள் கொத்து கொத்தாக மலர்ந்திருப்பதால் தான்

'சினை பொதுளு புன்னை' (கிட் : 505)

என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. புன்னையின் அரும்பு, பூ, பூவின் காம்பு ஆகிய எல்லாம் வெண்மையாக இருப்பதாலேயே 'வெள்ளியன்ன விளங்கிணர்' என்று கூறினர்; புன்னையின் வெண்மையான, குவிந்து உருண்டையான அரும்புகளைக் கழுவாத முத்திற்கு உவமித்துப் பாடினர் சங்கப்புலவர்கள்.

'மண்ணு முத்தம் அரும்பிய புன்னை' (அகம் : 30)

புன்னையின் வெள்ளிய மொக்கு அவிழ்வது ஊர்க்குருவியின் முட்டை உடைவது போன்றிருப்பதாக நற்றிணை நவில்கின்றது.

'உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னை'

(நற் : 201)

புன்னையின் மகரந்தப்பொடிகள் பொன் போன்ற மஞ்சள்நிறத்தில் இருக்கும். சீதையின் கூந்தலில் சூட்டப்பட்ட மலர்களின்மேல் தூவிய பொன்னின் பொடிகள் புன்னைப்பூவின் தாது போன்றிருப்பதாகக் கம்பன் பாடல் கூறுகின்றது.

'புன்னைப் பூந்தாது மானும் பொற்பொடி யப்பிவிட்டார்'

(பால : 20 : 17)

இத்தகு பொன்தாதினை பிரிவால் வருந்தியிருக்கும் இராமன் மீது காற்று சொரிந்ததாகவும் கூறப்படுகிறது (யுத் . 5). புன்னையின் மலர்கள் கட்டவிழ்ந்து மகரந்தத்தை வெளிக்காட்டுவது, பொற்கிழியை விரித்தது போன்றிருக்கின்றது.

'பொற்கிழி விரித்தன சினைப்பொதுளு புன்னை'

(கிட் : 505)

புன்னைமலர்கள் உருவில் சிறியவையாக இருப்பதால் இதனைப் 'புன்னைக் குறும்பூ' (யுத் : 5) என்று குறிக்கிறூர் ஆசிரியர்.

புன்னைக் காய்களின் கொட்டையிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. புன்னையின் காயில் எண்ணெய்ச் சத்து மிகுதியாக இருப்பதைத் தான் 'நெய் பசுங்காய்' என்ற சொற்றொடர் குறிப்பாக உணர்த்துகின்றது எனலாம்

---

# பூளை

Amarantaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இச்செடி Aerua Javanica என்றழைக்கப்படுகிறது. இதன் ஆங்கிலப் பெயர் Javanese wool plant என்பதாகும்.

இச்செடியின் இலைகள் எதிரொழுங்கில் அமைந்திருக்கும் மலர்கள் கொத்துக்களாக உண்டாகும். ஒவ்வொரு மலரும் பஞ்சு போன்ற வெண்மையான, மெல்லிய மயிர்களால் பொதியப்பட்டிருக்கும். இந்த அழகான பூளைமலர், கம்பரின் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்து விட்டது என்று எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில் பல அழகிய காட்சிகளையும் விளக்க அவர் பூளைமலரைப் படுத்தியிருக்கிறார். மென்மையான, வெண்ணிறப் பனித்துளிகள் பெய்து கொண்டிருக்கின்றன. பனியின் குளிரினால் தாமரை மலர்கள் வாடுகின்றன. இவ்வாறு தாமரை மலர்களை வாடச் செய்கின்ற பனிமழை, பூளை மலர்களைப் போன்று காட்சியளிக்கின்றதாம். உண்மையிலேயே இந்த உவமையைக் கற்கும்போது பனியால் நனைந்தது போன்று நம் உடலும் உள்ளமும் சிலிர்க்கின்றன.

'பூளைவீ புரைபனிப் புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்'

(பால : 10 : 47)

வேறொரு காட்சியும் கம்பரின் கண்களுக்குமுன் பூளை மலர்களைக் கொண்டு வந்து நிறுத்துகின்றது. அனுமனிட்ட தீயினால் இலங்கையெங்கும் எழுந்த வெம்புகையானது முகில் கணங்களின் வழியை மறித்ததால் அம்மேகங்கள், போகும் பாதை தெரியாமல் அங்குமிங்கும் சுற்றித்திரிகின்றன. தாம் உண்ட நீர் முழுவதும் அற்றுப்போகுமாறு மலைகள்தொறும் பெய்துவிட்டு மீண்டும் கடலுக்குச் சென்று கொண்டிருக்கும் அம்மேகங்கள் நீரற்று இருப்பதால் பூளைமலர் போன்று வெண்மையாகக் காட்சியளிக்கின்றன.

'மூளும் வெம்புகை முற்றுறச் சுற்றிய முழுநீர்
மாளும் வண்ணமா மலைநெடுந்தலைதொறும் வழங்கிப்
பூளை வீயெனப் போவன புணரியிற் புனலின்
மீள யாவையுந் தெரிந்தில முகிற்கண மிசையே'

(சுந் : 1211)

நெருப்பின் முன் பஞ்சானது இருந்த இடம் தெரியாமல் அழிந்து போகிறது. பூளைமலரோ அத்தகைய பஞ்சு போன்றது. இத்தகைய பூளைமலரைப் போன்றது காமனின் மேனி. இந்நிலையில் சிவனின் நுதல்விழிச் சுடரினால் உடலழிந்த காமன் அனங்கனாகின்றான்.

'திங்கண் மேவுஞ்சடைத் தேவன்மேன் மாரவே
ளிங்குநின் றெய்யவு மெரிதரும் நுதல்விழிப்
பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னத
னங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினான்'

(பால : 7 : 1)

மிக மென்மையான பஞ்சு போன்ற பூளைமலர்கள், சிறு தென்றல் வீசினாலும் உதிர்ந்து சிதறுவது இயல்பே. கோசல நாடுடை வள்ளலான இராமனின் ஆற்றலுக்கு முன் இராவணனின் சேனைகள் மாருதத்தினால் சிதறடிக்கப்பட்ட பூளைமலர்கள் போன்று அழிந்தன.

'ஆளையா உனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை..................................'

(யுத் : 1210)

இது இராமன் கூற்றாக அமைகின்றது. இக்கூற்றுக்குத் தனிச் சிறப்புண்டு. ஏனெனில் முன்பு, இராவணன் இராமனையே பூளைமலர் போல அழித்து விடுவதாகச் சூளுரைத்தான். (ஆர . 865). ஆனால் இன்று அதே இராவணன்படை காற்றின் முன் அகப்பட்ட பூளைமலர் போன்று இராமனால் அழிக்கப்பட்டது எனில் அது குறிப்பிடத் தக்கது தானே. இவ்வாறு ஆற்றலுடையவர்களின் முன் அழியும் ஆற்றலற்றவர்களை, காற்றின் முன் அகப்பட்ட பூளைமலரோடு ஒப்பிடுவதைப் பல இடங்களிலும் காண்கிறோம்.

பூளைமலர் சிவனுக்குரிய மலர்களில் ஒன்ருகக் கருதப்படு கிறது. அதனுல் தான் கம்பர் சிவனை 'பூளையே சூடுவான்' என் றழைக்கிருர்.

'வேளையே காயுநெற்றி விழியினன் மேவுமென்பூப்
பூளையே சூடுவான்.......................................'

(யுத் : 4272)

---

# மந்தாரம்

Leguminosae என்ற குடும்பத்தில், Caesalpineae என் னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த ஒரு இனமே மந்தாரம். இந்த இனத்தில் மரங்களும், குற்றுச்செடிகளும், கொடிகளும் உட் படும்.

இவ்வாறு பல வகைகள் உள்ளதில் Mountain Ebony என்ற வகையைச் சிறந்ததாகக் கூறலாம். இதனைத் தாவர வியலார் Bauhinia Variegata என்பர். இது 30 முதல் 35 அடி வரை வளரும் ஒரு நடுத்தரமான மரம். இலைகள் சாதாரண மாகத் தனியானவை எனினும் ஒவ்வொரு இலையும், இரு இலைகள் என்று தோற்றமளிக்குமாறு மிக ஆழமாக இரண்டு பிரிவாகப் பிளந்திருக்கும்.

பூக்கள் சாதாரணமாக வெண்மையானவை. வேறு நிறங்கள் கலந்தும் காணப்படுவதுண்டு. கிளைகளின் நுனியி லும், அரிதாக இலைகளின் கக்கத்திலும் மலர்கள் கொத்தாக உண்டாகும்.

தேவமகளிர் ஊடல் கொண்டு தம் கணவர் வருந்து மாறு தமது கூந்தலிலிருந்து மந்தார மாலைகளைக் கழற்றி

யெறிந்ததாகக் கூறுமிடத்து தேவமகளிர் மந்தாரமாலைகளைச் சூடின செய்தியை அறிகிறோம். ஆனால் நிலவுலக மகளிர் மந்தார மலர்களைச் சூடினரா என்பது தெரியவில்லை.

'ஆடவ ராவி சோர வஞ்சன வாரிசோர
ஊடலிற் சிவந்த நாட்டத்தும்பர்தம் மரம்பை மாதர்
தோடவிழ் கோதை நின்றுந் துறந்த மந்தாரமாலை
வாடலநற வாுது வயின்வயின் வயங்குமாதோ'

(பால : 14 : 41)

மந்தாரம் தேவதருக்கள் ஐந்தினுள் ஒன்று என்று கூறப்படுகிறது. இத்தகைய மந்தார மரம் இலங்கையில் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது (சுந் ו 971). இவை இராவணனால் தேவ உலகத்திலிருந்து கொண்டுவரச் செய்து வளர்க்கப் பெற்றவையாகும்.

பொதுவாக மந்தார இனத்தைச் சேர்ந்த மலர்கள் மிக்க நறுமணம் உடையதாக விளங்கும். தசரதன், மணங் குலாவும் மந்தாரமாலை அணிந்ததாகக் கூறி கம்பரும் இக்கருத்தை வலியுறுத்துகின்றார்.

'மந்தார முந்து மகரந்த மணங்குலாவும்
அந்தா ரரசர்க் கரசன்................................'

(பால : 14 : 71)

---

## மராமரம்

இது Dipterocarpaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Shorea Robusta என்றழைக்கப்படும் ஒரு பெருமரமாகும்.

இதனை வடமொழியில் 'சால விருட்சம்' என்றழைப்பர். மிகப் பெரிதாக வளரும் இம்மரத்தின் தடி மிக உறுதியானது இராமன் இத்தகைய மராமரம் போன்று வளர்ச்சி பெற்ற தோளைப் பெற்றிருந்தான்.

'மராமர மிவையென வளர்ந்த தோளினன்'

(பால : 12 ; 59)

மிகுந்த வலிமையுள்ள மராமரங்களையே ஆயுதங்களாகக் கொண்டு வானரங்கள் போர் புரிகின்றன. இந்திரசித்தின் நாற்படையையும் அனுமன் ஒரு மராமரம் கொண்டு எதிர்க்கிறான்.

'அக்காலை யரக்கரு மானையுந் தேரு மாவும்
முக்கா லுலகம்மொரு மூன்றையும் வென்று முற்றிப்
புக்கா னில் முன்புக் குயர்பூசல் பெருக்கும் வேலை
மிக்கானும் வெகுண்டோர் மராமரங்கொண்டு மிக்கான்'

(சுந் : 1007)

மராமரத்தில் கிளைகள் மிகுதியாக இருக்கும். எனவே இருபது கைகளையுடைய இராவணனை இத்தகைய சாலமரத்துடன் ஒப்பிட்டுக் கூறியிருப்பது பொருத்தமாக அமைகிறது. தன் அன்புத்தம்பியான கும்பகர்ணன் இறந்தது கேட்ட இராவணன் அதிர்ச்சியுற்று நிலத்தில் வீழ்ந்தது, வேருடன் அகழப்பட்ட ஒரு மராமரம் கிளைகளோடு வீழ்ந்தது போன்றிருக்கின்றதாம்.

'பாரொடும் பொருந்தி நின்ற மராமரம்
பணைக ளோடும்
வேரொடும் பறிந்து மண்மேல் வீழ்வதே
போல வீழ்ந் தான்' (யுத் : 1642)

பொதுவாகவே, அதிர்ச்சியான செய்திகளைக் கேள்வியுற்று ஆடவர்கள் நிலத்தில் சரியும் காட்சியை, காற்றில் சாய்ந்த மராமரத்தோடு ஒப்பிட்டுக் கூறும் தன்மை கம்பன் காவியத்தில் பரவலாகக் காணப்படுகின்றது.

---

# மருதம்

இது ஆற்றுமருது, நீர்மருது, வெண்மருது, அர்ச்சுனம் என்ற பெயர்களால் அழைக்கப்படும் ஒரு பெரிய மரம். Combretaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதன் பெயர் Terminalia Bellerica. இதனை Belleric Myrabolan என்றும் அழைப்பதுண்டு. தகுந்த சூழ்நிலைகளில் இம்மரம் 120 அடி உயரம் வரையிலும் வளர்வதுண்டு. அடிமரத்தில் உதைசுவர் போன்ற நீட்சிகள் (Buttresses) வளர்ந்திருக்கும். கிளைகள் கிடைமட்டமாகப் பரவி வளர்ந்திருக்கும். இம்மரத்தின் திரண்ட அடிமரத்தைப் பற்றியும், நீண்ட நெருங்கிய கிளைகளைப் பற்றியும் கம்பராமாயணத்தில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

'திரண்ட தாணெடுஞ் செறிபணை மருது'

(பால : 14 : 3)

மருதின் பூக்கள் சிறியவை. இவை குட்டையான பூத்தண்டுகளின் மேல் பூக்காம்பின்றி நேரே பொருந்தியிருக்கும். கனியில் சிறகுகள் போன்ற நீட்சிகள் காணப்படும்.

கம்பராமாயணத்தில் மருதமரம் பற்றி வரும் இரு இடங்களிலும் கண்ணன் மருதமரத்தை ஒசித்த வரலாறு சுட்டப்படுகிறது. கண்ணன் குழந்தையாக இருந்தபோது அவனது குறும்புகளைக் கண்டு வெகுண்ட யசோதை ஒருநாள்

கண்ணனின் திருவயிற்றிற் கயிற்றைக் கட்டி ஓர் உரலில் பிணித்து விட்டாள். கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு அங்கிருந்த இரட்டை மருதமரங்களின் நடுவில் எழுந்தருளிய போது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப் படவே அம்மரங் களிரண்டும் முறிந்து வீழ்ந்தன. அவ்வளவில், நாரதமுனியின் சாபத்தால் மருத மரங்களாய்க் கிடந்த நளகூபரன், மணிக் கிரீவனென்னும் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்ற னர் என்பது அவ்வரலாறு. தன்னைக் கட்டியிருந்த கட்டுத் தறியைப் பேர்த்து இழுத்துக் கொண்டு விரைந்து செல்லு கையில் அக்கட்டுத்தறி மோதியதினல் இரண்டு மாமரங்களை முறிந்து வீழும்படிச் செய்த ஒரு யானையின் செயல், மருத மொசித்த கண்ணனின் செயல் போன்றிருப்பதாகக் கூறிவியக் கிருர் கம்பர்.

'திரண்ட தாணெடுஞ் செறிபனை மருதிடை யொடியப்
புரண்டு பின் வருமுரலொடு போனவன் போல
உருண்டு காறெடர் பிறகிடு தறியொடு மொருங்கே
இரண்டு மாமர மிடையிற நடந்ததோ ரியானை'

(பால : 14 : 3)

முல்லைநிலம் வழியாகப் பாய்ந்து வரும் சரயு நதியா னது குருந்தமரங்களை முறித்து வருவதால் அந்நதியும் கண் ணனைப் போன்று காட்சியளிக்கின்றது. (பால . 1 : 15)

---

## மல்லிகை

மல்லிகை, Oleaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Jasminum என்னும் சாதியைச் சேர்ந்ததாகும். இதில் பல இனங்கள் உள. இவற்றில் கொடிகளும் அடங்கும். இவற்றின்

பூக்கள் பெரும்பாலும் தூய வெண்மை நிறத்தவை. பூக்க ளின் அமைதியான வெண்மையின் கண்கவர் வனப்பேயன்றி, பெரும்பாலான வகைகளில் இனிய நறுமணமும் நெஞ்சைக் கவரும் முறையில் அமைந்திருக்கும்.

மல்லிகை மலர்கள் இரவில் தான் மலரும். இவ்வாறு இரவில் மலரும் தன்மையைக் கம்பர் சுட்டுகிறார்.

'எல்லியைக் காண்டலு மலர்ந்த வீட்டினால்
மல்லிகைக் கானமும் வானமொத்ததே'

(யுத் : 461)

இரவில் மலர்வதால் வண்டினங்களைக் கவர்வதற்காக நறுமண மும், அத்துடன் இருளில் தெளிவாகப் புலப்பட்டுத் தோன்று மாறு வெண்மை நிறமும் பெற்று விளங்குகின்றன. இவ்வாறு வெண்மை நிறத்தாலும் நறுமணத்தாலும் கவரப்பட்ட கரு வண்டுகள் மல்லிகை மலர்களில் வந்து தங்குகின்றன. இதைக் கண்டு இருளின் துண்டங்களும் நிலவின் வெண்துண்டங்களும் தான் ஒன்றோடொன்று போரிடுகின்றன போலும் என்று வியக்கும் கம்பர் தம் கற்பனையில் நம்மை இழந்து விடுகிறோம்.

'எல்லியி னிமிரிருட் குறையு மிவ்விருள்
கல்லிய நிலவின்வெண் முறியுங் களவின
புல்லிய பகையெனப் பெருவ போன்றன
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டெலாம்'

(சுந் : 153)

தென்றலின் மெல்லென்ற இதமும் நிலவின் தண் ணென்ற சுகமும் மல்லிகையின் இன்மணமும் பிரிந்திருப்போரை வருத்துபவை. சில்லியல் கோதையை நினைந்து தேம்பும் வில் லியைக் கொல்ல வருவது போன்று மாலை மலர்கிறது. வானத்து விண்மீன்கள் போன்று மல்லிகைக்காடு மலர்ந்து சிலிர்க்கிறது.

தென்றல், கொலைஞனாய் புலி உருவில் வருகின்றான் அவனது, உயிர்சிதைக்கும் ஆற்றல் சான்ற எயிறாய் மல்லிகை விரிகிறது.

'மன்றல்வாய் மல்லிகை யெயிறு வண்டினங்
கன்றிய நிறத்தது நறவின் கண்ணது
குன்றின்வாய் முழையினிற் குலாய கொட்பது
தென்றலென் றொருபுலி யுயிர்த்துச் சென்றதால்'

(யுத் : 466)

---

# மா

மா மிக்க இனிமையும் மணமும் கலந்த அழகிய கனிகளைத் தந்து உதவும் சிறந்த மரம்: Anacardiaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Mangifera Indica என்றழைக்கப்படுகிறது. இம்மரம் 30 முதல் 90 அடி உயரம் வரை வளரும். இவ்வாறு உயர்ந்து வளரும் தன்மையைக் கம்பர் 'உயர் மாங்கனி' (பால : 9 : 67) என்று குறிப்பிடுகிறார். வடமொழியில் இது ஆமிரம் எனப்படும். வடமொழிநூல்கள் இதைக் கற்பக விருட்சம் என்று புகழும். கம்பன் காவியத்தில் மாழை என்னும் பெயர் மாமரத்தைக் குறிக்கின்றது.

'மாழையுண்கண் மயிலெனுஞ் சாயலார்'

(அயோ : 9 : 34)

சங்கநூல்களுள் ஒன்றான மலைபடுகடாம் (512) தமிழர்கள் மாவடு ஊறுகாய் உண்டதாகக் கூறுகிறது. மாங்கனி, முக்கனிகளுள் ஒன்று என்று சிறப்பித்துக் கூறும் பெருமையை உடையது. மாமுனிவனான இருசியசிருங்கருக்கு இம்முக்கனிகளையும் அளித்த செய்தியைக் கம்பர் குறிப்பிடுகிறார்.

'திருந்திழை யவர் சில தினங்கள் தீர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
தருந் தருங் கனியொடு தாழையின் பலம்
அருந்தவ வருந்தென வருளி ஞரரே' (பால : 5 : 42)

மாமரத்தில் சிலவகை தாழ்ந்து நிலத்தின் மேல் படர்வன போலும், சிலவகை உயரமாக நிமிர்ந்தும் வளரும். மாவின் முற்றிய இலைகள் கரும்பச்சையாகக் காட்சியளிக்கும். தளிரிலைகள் மிக மென்மையாகவும், பசுமை கலந்த செந்நிறமாகவும் இருக்கும் (New leaves are copper tinted and drooping - Nature's way of reducing the effect of heat and light). இத்தகு மாந்தளிரை மென்மைபற்றியும் நிறம் பற்றியும் மகளிர் மேனிக்கு உவமையாகச் செல்லும் இலக்கியமரபு ஏற்புடைத்தே.

'மாந்தளிர் மேனியாள்' (பால : 19 : 11)

அன்றுட வாழ்க்கையில் நாம் பலதரப்பட்ட மனிதர்களைக் காண்கிறோம். சிலர் பிறருக்குச் சொல்லாமலேயே அரும்பெரும் செயல்களைச் செய்து முடிப்பர். இதற்கு மாறாகச் சிலர் சொல்லில் மட்டும் தங்கள் திறமையைக் காட்டுவர், ஆனால் அதற்கேற்ற செயலை அவர்களிடம் காண்பது அரிது. இந்த இரண்டு பிரிவினருக்கும் இடைப்பட்டச் சில மனிதர்களைக் காணலாம். இவர்கள் விளம்பரத்தை மிகுதியாக விரும்புவார்கள். ஒரு செயலைத் தொடங்குமுன் அதைப்பற்றி மிகுதியாகச் சொல்லித் தரிவர்: அவர்கள் சொல்லுமளவுக்குச் சிறப்பாக அந்தச் செயல் அமையவும் செய்யாது. இத்தகைய மனிதர்களுக்கு உவமையாகத் தமிழ்ப்பாடலொன்று மாமரத்தைக் கூறுவதை நோக்கும்போது தான், தமிழ்ப் பெருமக்கள் எத்துணை அளவுக்கு இயற்கையைக் கண்டு மகிழ்ந்ததோடு, வாழ்க்கை பற்றிய அரும்பெரும் கருத்துக்களை விளக்குவதற்கும் அதைப் பயன்படுத்தினர் என்பதை உணர முடிகிறது.

'சொல்லாமலே பெரியர் சொல்லிச் சிறியர்செய்வர்

சொல்லியுஞ் செய்யார் கயவரே – நல்ல

குலாமாலை வேற்கண்ணுய் கூறுவமை நாடிற்

பலாமாவைப் பாதிரியைப் பார்'

இங்கு கூறப்பட்ட உவமை மிகவும் பொருத்தமானது. மாம் பூக்கள் பெருங்கொத்துக்களாக இளங்கிளைகளின் நுனியில் உண்டாகும். ஒரு கொத்திலேயே ஆயிரக்கணக்கான மலர் கள் மலர்வதுண்டு. ஆனுல் இவற்றுள் கனியை உண்டாக்குவ தற்கு ஆற்றலுள்ள மலர்கள் மிகச் சிலவே. பெரும்பான்மை யானவை ஆண்பூக்களே (of the thousands of flowers which bloom, only a few are capable of producing fruit. These are perfect ones, the rest being only one-sexed). இவ்வாறு மாமரங்கள் மிகுதியான மலர்களைத் தோற்றுவித்துத் தன்னை விளம்பரப்படுத்திக் கொண்டபோதும், அந்த அளவுக்குக் கனி களை அளிப்பதில்லை.

மாவடுவை மகளிர் கண்களுக்கு உவமையாகக் கூறுவது மரபாகப் பயின்று வரும் உவமையே. இந்த உவமையைக் கம் பர் பல இடங்களில் பயன்படுத்துகிருர்.

'வடுவின் மாவகி ரிவையெனப் பொலிந்தகண் மயிலே'

(அயோ. 8 : 30)

அகலிகைப் படலத்தில், கம்பர் விதேக நாட்டின் பல வகையான வளங்களையும் விளக்குகிருர். சாதாரணமாக ஆற் றில் தண்ணீர் தான் பெருக்கிட்டு ஓடும். ஆனுல் இங்கோ பால், தேன், கருப்பஞ்சாறு இவற்றுடன், மாங்கனிகளின் சாறுமே பெருக்கிட்டோடுகின்றன என்ருல் அந்நாட்டின் வளத்தை என்னென்று இயம்புவது என்று கூறி வியக்கிருர் கம்பர்.

'முறையி னின்முது மேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாட்டிய வமுதமு மழிதேன்
நறையு மல்லது நளிர்புனல் பெருகலா நதிகள்'

(பால : 9 : 67)

மற்றுமோரிடத்து, மாமரத்தைப் பின்புலமாக வைத்துக் கொண்டு ஓர் அழகான காட்சியை வரைந்தளிக்கிறார் கம்பர். பொய்கையை அடுத்துள்ள மாமரங்களில் கொக்குகள் தம் சிறகை உலர்த்திக் கொண்டிருக்க, மரத்துடன் சேர்ந்து அவைகளின் நிழலும் நீரில் படிகின்றன. பொய்கையில் திரிந்து விளையாடும் மீன்கள், கொக்குகளின் நிழல்களைக் கண்டு, அவை தம்மைப் பிடிக்கத் தான் வந்துள்ளனவோ என்று அஞ்சி நடுங்குகின்றனவாம்.

'ஏலு நீணிழ லிடையிடை யெறித்தலிற் படிகம்
போலும் வார்புனல் புகுந்துள வாமெனப் பொங்கி
ஆலு மீன்கணம் வெருவுற வலம்வர வஞ்சக்
கூல மாமரத் திருஞ்சிறை புலர்த்துவ குரண்டம்'

(கிட் : 20)

---

## மாணைக்கொடி

கம்பர் இக்கொடியை ஒரு இடத்தில் மட்டுமே கூறியுள்ளார். இராமனும் சீதையும் இலக்குவனுடன் யமுனை நதிக்கரையை வந்தடைகின்றனர். அந்நதியைக் கடந்து செல்லத் தெப்பம் அமைக்கும் இலக்குவன், மூங்கிற்கழிகளை வெட்டி, அவற்றை மாணைக்கொடியால் கட்டிய காட்சி காட்டப்படுகிறது.

'வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாணையில்
[கொடியால்
ஓங்கு தெப்பமொன் றமைத்து ........ ..................'
(அயோ : 7 : 36)

குறுந்தொகைப் பாடலொன்று இக்கொடியைப் பற்றிக் குறிக்கின்றது. தலைவனின் குன்றைப் பற்றி வர்ணிக்கும் ஆசிரியர், துயில்கின்ற யானையின் மேல் மாணைக்கொடிகள் படர்ந்திருக்கும் காட்சியைக் காட்டுகிறார்.

'துறுக லயலது மாணைமாக்கொடி
துஞ்சுகளி றிவரும் குன்றநாடன்' (குறுந் : 36)

இவ்வாறு, சங்க இலக்கியத்திலும் கம்பராமாயணத்திலும் கூறப்பட்டுள்ள மாணைக்கொடி என்ற பெயர் தற்போது எந்தத் தாவரத்தைக் குறிக்கின்றது என்று தெரியவில்லை.

---

## மாதவி (குருக்கத்தி)

குருக்கத்தி என்றழைக்கப்படும் கொடியின் வடமொழிப் பெயர் தான் மாதவி என்பது. இதனைக் 'குருகு' என்றும் அழைத்தனர்

'பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ'
(பெரும்பாண் : 376)

பசுமையான, அழகிய, பெரிய கொடியாக வளரும் இதனைத் தாவரவியலார் Hiptage Madablota என்பர். இது Malpighiaceae என்ற குடும்பத்தைச் சேர்ந்தது. நறுமணமுள்ள

மலர்களைத் தரும் கொடிகளில் மிகப் பெரியது குருக்கத்தி ஆகும். இதன் இலைகள் பெரிதாக, நீண்டு, கூரிய முனையுடன் கரும்பச்சையாக இருக்கும். குருக்கத்தி தடித்த கொடியாக இருப்பதால் வலிமையான கொழுகொம்பில் ஏற்றிவிட்டால் நன்றாகப் படரும். பெரிய கொடியாக அடர்ந்து படர்வதால் நிறைய இடத்தை அடைத்துக் கொண்டு வளரும். வெயில் நுழைய முடியாதபடி அவ்வளவு அடர்த்தியாகக் குருக்கத்திக் கொடி காஞ்சிமரத்தில் சுற்றிப் படர்ந்திருப்பதாக பெரும் பாணாற்றுப்படை கூறுகின்றது.

'வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ'

(பெரும்பாண் : 374-376)

இவ்வாறு படர்ந்து வளர்வதால் இது சிறந்த வேலியாகப் பயன்படுகிறது: கமுகந் தோட்டங்களில் மாதவிக்கொடியை வேலியாக அமைத்திருந்தனர் என்று கம்பராமாயணம் கூறு கின்றது.

'மாதவி வேலிப் பூக் வனம்' (பால : 1 : 20)

இந்த நறுமணமுள்ள அழகிய கொடியைப் பந்தலில் ஏற்றி வளர்த்தனர். இவ்வாறு நெருங்கி வளர்ந்த மாதவிப் பந்தல் நிழலையும் குளிர்ச்சியையும் அளிக்கும். இராமன் காடு செல்வதை அறிந்து, அவன் பிரிவைத் தாங்க இயலாத அயோத்தி நகரமக்கள் அவனைத் தொடர்ந்து செல்கின்றனர். இரவும் வருகின்றது. இந்நிலையில் எல்லோரும் ஒரு சோலையில் தங்குகின்றனர். சில மகளிர் மாதவிப் பந்தலின் கீழமைந்த வேதிகையில் கிடந்துறங்குகின்றனர்.

'மாகமணி வேதிகையின் மாதவி செய்பந்தல்
கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார்'

(அயோ : 5 : 14)

குருக்கத்தி கொத்தாகப் பூக்கும் (in panicles). இதன் பூக்கள்நிறைந்த கொத்தைச் சிலப்பதிகாரம் 'கோதை மாதவி' என்று கூறுகின்றது. பூக்கள் வெண்ணிறமானவை. இது முருகனுக்குரியது என்று சிந்தாமணி (971) பேசுகின்றது.

---

# முருக்கு

Leguminosae என்னும் குடும்பத்தில் உள்ள Papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இம்மரத்தின் பெயர் Butea Frondosa என்பதாகும். இது 20 முதல் 40 அடி உயரம் வரை வளரும் ஒரு நடுத்தரமான மரம்.

இதன் இலைகள் அகன்ற மூவிலைக்கூட்டிலைகளாம். இலைகளையெல்லாம் உதிர்த்தபின், வேனிற்காலத்தில் இம்மரம் பூக்கின்றது. மஞ்சள் கலந்த சிவந்த நிறத்துடன் விளங்கும் மலர்களைத் தாங்கி நிற்கும் இம்மரம் கவர்ச்சியான தோற்றத்தை அளிக்கின்றது. இம்மலரில் 5 இதழ்கள் காணப்படும். இவற்றில் ஒன்றின் (keel petal) வளைவு காரணமாக கிளிமூக்குப் போன்ற வடிவத்தை இம்மலர் பெறுகின்றது. இதன் காரணமாகத் தான் இம்மரம் Parrot Tree என்ற பெயரைப் பெற்றது போலும். கம்பன்காவியத்தில் கிஞ்சுகம் (பால : 17 : 13), பலாசம் (சுந் : 165) என்ற பெயர்களும் முருக்க மரத்தினைக் குறிக்கின்றன.

காடுகளில் முருக்கமரம் அடர்ந்திருக்கும் பகுதிகளில், வேனிற்காலத்தில், இலையின்றி ஒரே சிவப்பு நிறத்தில் இம்மரங்கள் பூத்துக் குலுங்குகையில் காடே தீப்பற்றி எரிவது போன்று தோன்றும். இக்காரணம் பற்றியே இம்மரத்தைக் 'காட்டுத் தீ' (Flame of the forest) என்று ஆங்கிலத்தில் அழைத்தனர். இத்தன்மையைத்தான் அகப்பாடலொன்று

(அகம் : 277) 'பொங்கழல் முருக்கு' என்று கூறுகிறது. கம்பரும் இது போன்ற காட்சியைக் கண்டு வியந்திருக்கிறார் என்பதைத்தான்

'முழுவ தும்மலர் விரிந்தன முருக்கிடை மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய தொப்பது பாராய்'

(அயோ : 8 : 28)

என்ற பகுதி உணர்த்துகிறது.

இலங்கை மதில்வாயிலைக் காத்து நின்ற அரக்கர்கள், சிவந்த இரத்தம் போன்ற நிறங்கொண்ட அடர்ந்த தலைமயிர் காரணமாக முருக்க வனத்தை ஒத்திருந்தனர் என்று கூறுமிடத்தும், சுக்கிரீவனது குருதிவடியும் உடலோடு முருக்க வனத்தை ஒப்பிடும் இடத்தும் (யுத் : 2549) முருக்க மலர்களின் செந்நிறத்தை வலியுறுத்துகிறார் ஆசிரியர்.

'செங்குருதி யன்னசெறி குஞ்சியர் சினத்தோர்
பங்குனி மலர்ந்தொளிர் பலாசவன மொத்தார்'

(சுந் : 165)

இச்செந்நிறம் பற்றியே முருக்கமலர் அரக்கர்களின் விழிக்கும், மகளிர் வாயிதழுக்கும் உவமையாகின்றது.

'முருக்கி ளுண்மலர் முகைவிரிந் தாலன முரட்கண்
அரக்கர்........ .. ............ .............................................................'

(யுத் : 1453)

'முருக்கிதழ் மகளிர்' (கிட் : 653)

இவ்வாறு பிறமகளிரின் வாய்க்கு ஒப்பான முருக்கமலரும், சீதா பிராட்டியின் வாய்ச்சிவப்பிற்கு முன் நாணித்தலை குனிந்ததாம்.

'.................................... ....................... ......... ... .......

முருக்கென்றித் தொடக்கஞ் சாலத்

தவளமென் றுரைக்கும் வண்ணஞ்

சிவந்துதேன் றதும்பு மாகின்

குவளையுண் கண்ணி வண்ண

வாயது குறியு மஃதே' (கிட் : 768)

தேன்மிக்க முருக்கமலர்களைப் பறவைகள் மிக விரும்பி அடையும். முருக்கமரம் பூத்துக் குலுங்கும் காலத்தில் மரத்தைச் சுற்றிலும் பலவிதமான பறவைகள் பறந்துகொண்டு பல்வேறு ஓசைகளை எழுப்பிக் கொண்டிருக்கும் (That the flowers contain much nectar is evidenced by the frequent visits of many species of birds, hurrying from flower to flower, chattering and twittering). முருக்கமரங்களை வேலியாக உடைய பொழிலின்கண் நாகணவாய்ப்புட்கள் கிளிகளுக்குப் பேச்சைக் கற்பித்துக் கொடுப்பதாகக் கூறுமிடத்து, முருக்க மரத்தைச் சூழ்ந்திருக்கும் பறவைகளின் ஆரவாரத்தைத் தான் கம்பர் குறிப்பிடுகிறார் போலும்.

'.....................................................................பூவை

கிளிக்கறை யும்பொழிற் கிஞ்சுகவேலி'

(ஆர : 1066)

முருக்கமரத்தில் மகரந்தச் சேர்க்கை நடைபெறுவதற்குக் காரணமாக அமையும் பறவைகள், மிகுந்த தேனையுடைய இம்மலர்களைக் கிழித்துத் தேனை உண்பது இயல்பான ஒரு நிகழ்ச்சியே என்று நாம் கண்டோம். இங்ஙனம் இயல்பாகவே நடைபெறும் இச்செயலுக்குக் கம்பர் ஓர் காரணத்தைக் கற்பிக்கின்றார். கிளிகளின் அலகுகள் சீதாபிராட்டியின் நகங்களுக்கு ஒவ்வாமை குறித்து முருக்கமலர்கள் அவைகளை நோக்கி இகழ்வதாகக் கருதியே, சினம் கொண்ட அக்கிளிகள் முருக்க

மலர்களைக் கிழிக்கின்றன என்று கூறுமிடம் எண்ணி எண்ணி இன்புறத் தக்கதாகும்.

'வெள்ளிய முறுவற் செவ்வாய்
விளங்கிழை யிளம்பொற் கொம்பின்
வள்ளுகிர்க் குவமை நம்மான்
மயர்வற வகுக்க லாமோ
என்னுதிர் நீரே மூக்கை
யென்றுகொண் டிவறி யென்றும்
கிள்ளைகண் முருக்கின் பூவைக்
கிழிக்குமே லுரைக்க லாமோ' (கிட் : 766)

இவ்வாறு பறவைகள் வந்து முருக்கமலரைக் கொத்தும் தன்மையை அகப்பாடலொன்றும் விளக்குகிறது.

'பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவி ழலரி கொழுதித் தாதருந்
தந்தளிர் மாஅத் தலங்கன் மீமிசை
செங்க ணிருங்குயி லையவரக் கூஉ
மின்னிள வேனிலும் வாரார்' (அகம் : 229)

முருக்கு பங்குனி மாதத்தில் மலர்வதாகக் கம்பர் குறிப்பிடுகிறார்.

'பங்குனி மலர்ந்தொளிர் பலாசவனம்'

(சுந் : 165)

இக்கருத்து உண்மையே. ஜனவரி (January) முதல் மார்ச் (March) வரையில் இம்மரம் மிகுதியாகப் பூக்கும் என்று தாவரவியல் அறிஞர்களும் கூறுவர். (From January to March it truely becomes a tree of flame, a riot of orange and vermilion flowers covering the entire crown).

# முல்லை

Oleaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Jasminum என்னும் சாதியில் உள்ள பல இனங்களில் ஒன்று தான் முல்லை. இது Jasminum Auriculatum என்று அழைக்கப்படுகிறது. இது தொத்தி ஏறும் ஓர் செடியாகும் (climbing shrub). இலக்கியங்களில் இது கொடி என்றே கூறப்பட்டிருக்கிறது. கம்பர் தளவம், புறவம் என்ற பெயர்களாலும் முல்லையைக் குறிக்கிறார்.

முல்லை மலரை மகளிரின் பல்லுக்கு உவமித்துக் கூறுவது சங்க இலக்கியத்தில் மிகப் பரவலாகக் காணப்படும் ஓர் உவமையாகும்.

'நறுமுல்லை நேர்முகை யொப்பநிரைத்த
செறிமுறை பாராட்டினாய்......................'

(கலி : 22)

இவ்வுவமை கம்பராமாயணத்திலும் பரவலாகப் பயன்படுத்தப் பெறுகிறது.

'..................................................முல்லை
யெயிறு வெண்ணிலவை யீன்ற' (யுத் : 2760)

[ஓரிடத்து இலக்குவனது நகையையும் இந்நிலையில் விளக்கியுள்ளார் - யுத் : 1851]. சீதையின் நகையை முல்லையாய், அதனையும் கடந்த எழிலாகக் காட்டியுள்ளார் கம்பர். இதனாலேயே அவளைப் பிரிந்த இராகவன் உயிரை, மாலைமலர்ந்த முல்லை மலர் வெவ்விட அரவாய் நின்று வருத்துகின்றது (கிட் : 490).

முல்லைக்கொடிகள் மலர்ந்து நிற்கும் எழில் கம்பருக்கு வேறு பல காட்சிகளையும் நினைவூட்டுகின்றது. மாலைக் காலத்தில், பிரிந்திருந்த தம் கணவர் வருவது கண்ட பெண்களின் புன்முறுவல் போன்று முல்லை அரும்புகின்றனவாம்

'மார னன்னவர் வரவுகண் டுவக்கின்ற மகளிர்
மூரன் மென்குறு முறுவலொத் தரும்பின முல்லை'

(கிட் : 467)

மயில் காந்தளின் முகையை அரவெனக் கருதி கவ்வுவது கண்டு நகைபுரிவது போன்று முல்லைக் கொடிகளில் மலர்கள் மலர்ந்தன என்கிறார் கவிஞர்.

'காந்தளின் முகைகண்ணிற் கண்டொரு களிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக் கவ்வியபடி பாராத்
தேந்தள வுகள்செய்யுஞ் சிறுகுறு நகைகாணாய்'

(அயோ : 7 : 9)

முல்லைப்பூ முல்லைநிலத்திற்குரிய மலராகும். முல்லைப்பூ சிறத்தலால் தான் காடும் காடு சார்ந்த நிலத்திற்கும் 'முல்லை' என்று பெயரிட்டனர். முல்லை நில மக்களாகிய இடைப்பெண் களின் கூந்தலில் அன்றலர்ந்த முல்லைமலர்களின் மணம் வீசு வது இயல்பன்றோ.

'...............நாண்முல்லை நாறின ஆய்ச்சிய ரோதி'

(கிட் : 479)

முல்லைமலர் தூயவெண்மை நிறமாகவும், சிறந்த நறு மணமுடையதாகவும் காணப்படுவதால் இம்மலரைக் கற்புக்கு அறிகுறியாகப் பழந்தமிழர் கூறினர்.

'குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியள்.........'

(சிறுபாண் : 29-30)

ஐரோப்பிய இலக்கியங்களிலும் தூய, வெண்மையான 'லில்லி' (Lily) மலர் கற்பிற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது.

(சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்-பி எல். சாமி)

---

# மூலம்

கம்பராமாயணத்தில் 'மூலம்' என்று ஒரு தாவரம் குறிக்கப்படுகிறது. இராமனுடனும் இலக்குவனுடனும் சுக்கிரீவன் முதலியோர் கிட்கிந்தைக்குச் செல்லும் வழியில் வேறு பல மரங்களுடன் மூலமரங்களும் வளர்ந்திருந்தன என்று கூறப்பட்டிருக்கிறது.

'தங்கு சால மூல மார்த மால மேல மாலைபோல்
பொங்கு நாக முந்து வன்ற சார லூடு போயினர்'

(கிட் : 227)

இதைப் பற்றி வேறு விளக்கங்கள் ஒன்றும் தரப்படவில்லை. இது Plumbagineae என்ற குடும்பத்தைச் சேர்ந்த Plumbago Rosea (Rosy flowered leadwort) என்ற தாவரம் என்று கருதப்படுகிறது.

---

# வள்ளிக்கொடி

Convolvuleceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Ipomaea Batatas என்றழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Sweet Potato என்பர்.

இதன் தண்டு நிலத்தில் படர்ந்து வளரும். ஆனால் கம்பர், இது மரங்களில் சுற்றி வளருவதாகச் சுட்டுகிறார். மர நிழலில் அமர்ந்து இடையர்கள் ஆட்டுக்குட்டிகளைக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த மரங்களைச் சுற்றிலும் வள்ளிக்கொடிகள் படர்ந்து சூழ்ந்திருக்கின்றனவாம்.

'வள்ளிபுடை சுற்றியுயர் சிற்றிலைமரம்'

(கிட் : 513)

வள்ளிக்கொடியின் வேர்களில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் உணவு கிழங்காக மாறுகிறது. இக்கிழங்கு நமக்கு உணவாகப் பயன்படுகிறது. வள்ளிக் கிழங்கு சிவப்பு நிறமாகவும் வெள்ளை நிறமாகவும் இருக்கும். கோசல நாட்டில் குறிஞ்சியும் மருதமும் மயங்கியிருக்கும் நிலையைச் சுட்ட வள்ளிக்கிழங்கினைக் கம்பர் பயன்படுத்துகிறார். குறிஞ்சிப்பொருளாகிய வள்ளிக் கிழங்கைத் தோண்டியெடுப்பவர்கள் மண்ணிலிருந்து கிடைத்த மணிகளை எறிய, அவை அருகமைந்த மருத நிலத்து மாவின் கனிகளைத் தாக்க, அவற்றினின்றும் தேன் துளிகள் சிந்துகின்றன.

'வள்ளிகொள்பவர் கொள்வன மாமணித்
துள்ளிகொள்வன தூங்கிய மா ங்கனி'
(பால : 2 : 33)

---

# வள்ளைக்கொடி

Convolvulaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதன் பெயர் Ipomaea Aquatica என்பதாகும். இது நீரின் மேல் மிதந்து படரும் கொடி. இவ்வாறு படர்ந்து வளரும் தன்மை பற்றி இது 'படர்கொடி வள்ளை' (பால : 10 : 18) என்று குறிக்கப்படுகிறது. இதன் தண்டு உள்ளே துளையுள்ளதாகவும் தடித்தும் இருக்கும். கம்பர், காதிற்கு உவமையாக வள்ளைக்கொடியின் இலைகளைப் பல இடங்களிலும் கூறிச் செல்கிறார். சீதையைப் பிரிந்து வருந்துகிறான் இராமன். பொய்கையில் காணப்படும் பல செடிகளும் சீதையின் பல உறுப்புக்களையும் அவனுக்கு நினைவு படுத்துகின்றன. அவற்றுள், வள்ளைக்கொடியின் இலைகள் சீதையின் செவிகள் போலக் காட்சியளிக்கின்றன. இவற்றைக் கண்டு இராமன் மயங்குகிறான்.

சீதையை எடுத்துச் செல்லும்போது இராவணன் சிந்தின அங் கங்களோ அவை என்று எண்ணி ஏங்குகிறான் (கிட் : 26).

மற்றுமோர் இடத்தில் பொற்குண்டலங்களையும், குழை என்னும் காதணிகளையும் அணியாத சீதையின் காதுகளே என்று எண்ணி வள்ளைக்கொடியை நோக்கிச் சீதையைக் காட்டுமாறு வேண்டுகிறான் இராமன்.

'...............................................................................

......................கொடி வள்ளாய்

மலர்க் கொம்பனைய மடச்சீதை

காதே மற்றொன்றல்லையால்

பொலக் குண்டலமுங் கொடுங்குழையும்

புனைதாழ் முத்தின் பொற்றோடும்

விலக்கி வந்தாய் காட்டாயோ

இன்னும் பூசல் விரும்புதியோ'

(கிட் : 31)

---

# வாகை

Leguminosae என்னும் குடும்பத்தில், Mimosae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்த இது Albizzia Lebbeck எனப்படும். இது நிமிர்ந்து வளரும் பெரிய மரம். இம்மரம் இந்தியா நெடுகிலும் வளர்கிறது. இதன் தடி மிக உறுதியானது. இத்தடி பல உறுதியான பொருட்கள் செய்யப் பயன்படுகிறது. இராமன் தங்குவதற்குப் பர்ணசாலை அமைத்த நளன், அதன் கால்களாக வாகையைப் பயன் படுத்துவது அதன் உறுதி கருதியே ஆகும். இங்கு 'நெல்' என்ற சொல் வாகையைக் குறிக்கின்றது.

'நெல்லினு லலக்குங் காலு நிரப்பினுன்'

(யுத் : 701)

வாகைமலர் வெற்றியைக் குறிக்கும் மலராகக் கருதப் படுகிறது. வெற்றிபெறுவோர் வாகை மாலையணியும் வழக் கத்தைத் தமிழிலக்கியங்கள் குறிக்கின்றன. கம்பரும்,

'வேய்ந்தது வாகை வீரற்கிளையவன் வரிவில்'

(யுத் : 1110)

என்று இம்மரபைச் சுட்டுகிருர்.

---

# வீழி

வீழி Capparideae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Cadaba Indica என்னும் புதர்ச் செடி. இதன் மலர்கள் பசுமை கலந்த வெண்மை நிறத்தில் இருக்கும். இலக்கியங்கள் வீழியின் கனியைத் தான் சிறப்பித்துக் கூறுகின்றன. இதன் கனி செந்நிறம் வாய்ந்தது. மகளிரின் வாயிதழ்ச் சிவப்புக்கு உவமையாக வீழியின்கனி கூறப்பட்டிருப்பது பொருத்த மானதே.

'வீழிச் செவ்விக் கொழுங்கனிவாய்' (கிட் : 30)

வீழிக்கனியின் செந்நிறம் கம்பன் உள்ளத்தை மிகுதியா கக் கவர்ந்துள்ளது. அவர் வேறு பல பொருட்களுக்கும் உவ மையாக இக்கனியைக் கூறுகிருர். அரக்கர் கண்களின் செந் நிறம் அவருக்கு வீழிக்கனியைத் தான் நினைவூட்டுகின்றது.

'வீழி வெங்கணி ராக்கதர்' (யுத் : 1011)

அனுமன் உடலில் அம்பு தைத்த அளவில் அவன் உடலிலிருந்து பாயும் செந்நிறக் குருதிநீர் வீழிப்பழம் போன்றிருக்கிறது.

'பாழிப்புய மம்புரு வப்படலும்
வீழிக்கனி போற்புனல் வீச' (யுத் : 2306)

விழிச்செடியை விழுதி என்றும் கூறுவதுண்டு தஞ்சை மாவட்டத்தில் திருவீழிமிழலை என்றொரு தலமுண்டு. இது வீழிச் செடிகள் அடர்ந்த இடம் ஆனமை பற்றி வந்த பெயராகும்.

---

## வெள்ளிலை (வெற்றிலை)

Piperaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Piper Betal என்றழைக்கப்படுகிறது. இது முதன் முதலில் மலேயாவில் தோன்றியது என்பர். வடமொழியில் இது தாம்பூலம் எனப்படும். இச்சொல் கி.மு. 600-ஆம் ஆண்டில் காசியில் எழுந்த சுகிருதசம்ஹிதை என்னும் ஆயுர்வேதநூலில் காணப்படுவதிலிருந்து, கிறிஸ்துவின் காலத்திற்கு முன்பே இந்தியாவில் வெற்றிலை பயிர் செய்யப்பட்டது என்பது தெளிவாகிறது.

கணுக்களில் உண்டாகும் வேர்களைக் கொண்டு, தாங்கு மரத்தைப் பற்றிப் பிடித்து வளரும் இஃது ஓர் பலபருவக் கொடியாகும். ஒவ்வொரு கணுவிலும் ஒரு இலை உண்டாகும். ஆண்பூ, பெண்பூ என்பவை தனித்தனிக் கொடிகளில் உண்டாகும். பூக்கள் நீண்ட கொத்துக்களாக இருக்கும். வெற்றிலைக் கொடி பூப்பது அரிது. கொடியை வெட்டி நடுகிறார்கள்.

வெற்றிலையைப் பாக்கும், சுண்ணாம்பும் சேர்த்து சுவைக்கும் வழக்கத்தைப் பலரிடமும் காணலாம். பெரும்பாலும் உணவு உண்ட பின் வெற்றிலையைச் சுவைப்பது தான் வழக்கம். சுரமஞ்சரியால் இனிது உபசரிக்கப்பட்ட சீவகன், உணவருந்திய பின் இனிய மகளிர் அளித்த வெற்றிலையை வாங்கிச் சுவைத்ததாகச் சீவக சிந்தாமணி கூறுகின்றது.

'தமிழ் தழிய சாயலார் மலர்த்தூநீ
ருமிழ் கரக மேந்தவுர வோனமர்ந்துபூசி
யமிழ்தனைய பஞ்சமுக வாசமமைத் தாய்ந்த
கமழ்திரையுங் காட்டவவை கொண்டு கவுளடுத்தான்'

(சீவக : சுர : 32)

வெற்றிலை, பாக்கு முதலியவற்றை மென்று உமிழும் சாற்றினைத் 'தம்பல்' என்று குறிக்கிறார் கம்பர். இச்சாறு சிவப்பு நிறத்தில் இருப்பது யாவரும் அறிந்ததே. அதனால் தான் இவ்வெற்றிலைச் சாற்றினை ஒளிரும் சிவப்பு நிறமுடைய இந்திர கோபத்தோடு ஒப்பிட்டுப் பேசுகிறார் கம்பர்.

'மேவருங் கோப மன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார்'

(பால : 14 ; 49)

இவ்வாறு தம்பலத்தைப் போன்று செந்நிறத்தையுடைய காரணத்தால் தான் இந்திரகோபப் பூச்சிகளைத் 'தம்பலப் பூச்சிகள்' என்று அழைத்தனர் போலும்.

---

# வேங்கை

இது Leguminosae என்னும் குடும்பத்தில், Papilionaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்தது. Pterocarpus Marsupium என்பது இதன் பெயர். இதன் பூக்கள் மஞ்சள் நிறமானவை. கனி தட்டையாக, வட்டமாகச் சுற்றிலும் மெல்லிய இறக்கை போன்ற நீட்சியுடையது. இது காற்றினால் பரவக்கூடிய கனி

வேங்கை மலர்களின் மஞ்சள் நிறத்தை ஆசிரியர் 'பொன்னணி நிற வேங்கை' (அயோ : 7 ; 14) என்பதன்

மூலம் உணர்த்துகிருர். மற்றுமொரு காட்சி மூலம் இக் கருத்தை வலியுறுத்துகிருர். வேங்கையின் பொன்மலர்களை இழுத்துக் கொண்டுவரும் ஆறுகள், மேருமலையினின்று இழிந்து அம்மலைப்பொன்னை சுமந்து செல்கின்ற 'ஜம்பு' என்னும் நதி போல் காட்சியளிக்கின்றனவாம்.

'தீங்கனி நாவ லோங்குஞ்
சேணுயர் குன்றிற் செம்பொன்
வாங்கின கொண்டு பாரின்
மண்டுமால் யாறு மான
வேங்கைநன் மலருங் கொன்றை
விரிந்தன வீயு மீர்த்துத்
தாங்கின கலுழி சென்று
தலைமயக் குறுவ தம்மில்' (கிட் : 462)

வேங்கை மலர்களைச் சுணங்கிற்கு உவமையாக அகப் பாடலொன்று தருகிறது.

'பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய
சுணங்கு......... — .......................................'
(அகம் : 319)

வேங்கை இணராகப் பூக்கும் என்பதை 'பொன்னி ணர் வேங்கை' (நற்:157) என்ற நற்றிணைப் பாடலால் அறிய லாம். வேங்கை மலர்கள் தேன் நிறைந்து இருக்கும் என்ப தை 'நிறைதேன் வளைந்த வேங்கை' (அயோ : 8 ; 24) என்ற பகுதி சுட்டுகிறது

வேங்கை மலர்கள் யானைமதம் போல மணம் வீசுவ தாகக் கம்பர் ஓர் இடத்தில் குறிப்புத் தருகிருர்.

'விலக்கருங்கரிமதம் வேங்கை நாறுவ'
(பால : 8 : 58)

இதற்கு ஒரு காரணத்தையும் கூறலாம். வேங்கை மரம் பூத்திருக்கையில் புலி போல் காட்சியளிக்கும் என்பதை,

'குறவருன்றிய குரம்பை புதைய
வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெரீஇய புகர்முக வேழ
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரு
நல்வரை நாட ...............................' (அகம் : 12)

என்ற பாடலால் உணரலாம். இவ்வாறு வேங்கை மரங்கள் புலி போன்ற தோற்றத்தை அளிப்பதால் யானைகள் சினங் கொண்டு அம்மரத்தை முறிக்கப் புகுகையில் யானைகளின் மதம் அம்மலரிற் படிவதனுல் மலர்கள் மதமணத்தைப் பெற்றிருக்கலாம்.

வேங்கை மலர்களைப் பறிக்க மகளிர், மரத்தின் அருகிற் சென்று 'புலி புலி' என்று பூசல் எழுப்புவதையும், அதைக் கேட்டு இளைஞன் ஒருவன் புலியை எதிர்க்க விரைந்து வரும் செய்தியையும் அகப்பாடலொன்று (48) தருகிறது.

வேங்கைமரம் மலர்வது நன்னிமித்தமாகக் கருதப் பட்டது. தினை விளைந்து விட்டது அல்லது நன்னாள் வந்து விட்டது என்பதை அறிவிப்பதற்காகவே வேங்கை பூக்கிறது என்று மக்கள் நம்பினர். இதனுல்தான் 'கணித் தொழில் புரியும் வேங்கை' என்ற பெயரை அது பெற்றது போலும்.

'பண்மலர் பவளச் செவ்வாய்ப் பனிமலர் குவளையன்ன
கண்மலர்க் கொடிச்சிமார்க்குக் கணித்தொழில்
[புரியும் வேங்கை'
(பால : 14 : 33)

சங்க இலக்கியங்களிலும் வேங்கையை 'நன்னாள் வேங்கை' (அகம்: 133) 'கணிவாய் வேங்கை' (நற்: 373) என்று கூறியிருப்பது குறிப்பிடத் தக்கது.

குறிஞ்சி நிலத்துப் பெண்கள் வேங்கை, கோங்கு போன்ற மரங்களில் தொடுத்த ஊஞ்சலிலிருந்து குறிஞ்சிப் பண்ணோடு கூடிய பாடலைப் பாடினர் என்பதை.

'நினைத்த போதினு மமிழ்தொக்கு நேரிழை நிறைதேன்
வனைந்த வேங்கையிற் கோங்கினில் வயின்றொறுந்
[தொடுத்துக்
குனிந்த வூசலிற் கொடிச்சிய ரெடுத்தலின் குறிஞ்சி
கனிந்த பாடல்கேட் டசுணமா வருவன காணாய்'
(அயோ : 8 : 24)

என்ற பகுதியால் அறியலாம். வேங்கை மரத்தில் ஊசல் கட்டி விளையாடும் வழக்கமிருந்ததைச் சங்க இலக்கியமும் சுட்டத் தவறவில்லை (நற் : 222).

வேங்கை, குறிஞ்சி நிலத்திதின் கருப்பொருட்களில் ஒன்றாகும். எனவே குறிஞ்சி நிலப் பெண்களின் கூந்தல் வேங்கை மலர்களின் மணம் கமழப் பெறுவது இயல்பன்றோ.

'வேங்கை நாறின கொடிச்சியர் வடிக்குழல்'
(கிட் : 479)

வேங்கையை வைத்து ஓர் அழகான காட்சியை அமைத்துத் தருகிறார் கம்பர். வேங்கைக் கொம்புகளில் கருவண்டுகள் மொய்க்குந் தோறும் அந்தப் பாரத்தைத் தாங்க இயலாது தமது மலர்களைச் சிந்திய வண்ணம் அக்கிளைகள் விரைந்து தாழ்கின்றன. உடனே அவற்றினின்று அவ்வண்டுகள் மேலெழுந்தனவாக அக்கிளைகளும் மேலெழுந்து செல்கின்றன. இவ்வாறு கிளைகள் கீழேவந்து, பின் மேல் செல்வது, அவை சீதையைக் கண்டு மலர்களைத் தூவித் தாளில் வீழ்ந்து எழுவதைப் போன்று காட்சியளிக்கின்றது. இவ்வாறு தமக்குத் தோன்றின எண்ணத்தை இராமன் கூற்றாக அமைத்து, நமக்கும் கூறுகிறார் கம்பர்.

'நீல வண்டினம் படிந்தெழ வளைந்துட னிமிர்வ
கோல வேங்கையின் கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
காலி னிற்றொழு தெழுவன நிகர்ப்பன காணாய்'
(அயோ : 8 ; 16)

இயற்கையைக் கண்டு சுவைப்பது கவிஞர்களுக்கே உரிய பண்பன்றோ. கம்பரும் ஓர் அழகான இயற்கைக் காட்சியினை ரசித்து, அதிலிருந்து சிறந்த ஓர் உவமையை அமைக்கிறார். யானையை விழுங்குமாறு பற்றிய மலைப்பாம்புகள், அவ்யானை மதமழையைச் சொரிவதாலும், தமது மாணிக்கவொளி ஆங்கு ஒளிர்வதாலும் 'மழையோ' என்று அஞ்சி, அவ்வச்சத்தால் விழுங்கத் தொடங்கிய வேழத்தை விட்டதன்றித் தமது மணிகளையும் சிந்திச் செல்கின்றன. அங்கு மலர்ந்து விளங்கும் வேங்கை மலர்களுடன் அந்த மாசுணத்து மணிகளும் மத நீரோடு கூடிய யானைகளின் நெற்றியிலொட்டிக் கொண்டு பொற்றகட்டில் மணிகள் பதித்த நெற்றிப்பட்டம் போல விளங்குகின்றதாம். இப்பகுதி படித்து மகிழ்தற்குரியது.

'தொட்ட மாசுணஞ் சுடரொளி மணியொடுந் தூவி
விட்ட சென்றன விடாமத மழையன வேதம்
வட்ட வேங்கையின் மலரொடுந் ததைந்தன வயங்கும்
பட்ட நெற்றியிற் சுற்றிய போல்வன பாராய்'

(அயோ : 8 : 8)

---

# இறுங்கு (சோளம்)

இது Gramineae என்னும் புற்குடும்பத்தைச் சேர்ந்தது. சிறுதானியப் பயிர்களுள் தலையாயது சோளம். இதை ஆங்கிலத்தில் Maize என்றழைத்தனர். மேலும், இது மற்றச் சிறு தானியங்களைக் காட்டிலும் பெரிதாக இருப்பதால் Great Millet என்றும் பெயருண்டு. இதன் தாவரவியற் பெயர் Sorghum Vulgare என்பதாகும்.

5000 அடி உயரத்திற்கு மேற்படாதவையும் சராசரி 80° c வெப்பநிலையுள்ளவையுமான இடங்களில் சோளம் நன்கு விளைகிறது. ஆப்பிரிக்கா, இந்தியா, சீனு ஆகிய நாடுகளின் வெப்பப் பகுதிகளிலும், அமெரிக்காவின் தெற்குப் பகுதிகளிலும் இது மிகுதியாகப் பயிர் செய்யப்பட்டு வருகின்றது.

தென்னிந்தியாவில் சோளம் பலவிதங்களில் உணவாகப் பயன்படுகிறது. அதனைச் சமைத்து உண்பர், மாவாக்கிக் களியாகவும், கூழாகவும் செய்து உண்பர். கோசல நாட்டில் சோளத்தை உணவுப் பொருளாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். அங்கு வேறு பல தானியங்களுடன் சோளத்தையும் வண்டிகளிலேற்றிக்கொண்டு வந்ததைக் கம்பர் குறிக்கிறுர் (பால : 2 : 54).

முனிவர்களும் சோளத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர். சித்திரகூட மலையில் வாழும் தவசிகளிடம் பேரன்பு கொண்ட கிளிகள் சோளம் முதலிய தானியங்களைக் கொண்டு போய் அவர்களுக்குக் கொடுத்துத் தங்கள் அன்பை வெளிக் காட்டுகின்றன.

'ஐவனக்குர றினைக்கதி ரிறுங்கவை யவரை
.... ........................................ ..............................
பொய் வணக்கிய மா தவர் புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணுய்'

(அயோ : 8 34)

---

# ஏலம்

ஏலம் உலகெங்கும் போற்றப்படும் ஒரு சிறந்த நறு மணப்பொருள். இது, தென்னிந்தியாவில் மிகப் பழங் காலம் முதலே இருந்துவரும் ஒரு விளைபொருளாகும். இலங்கை, ஜாவா முதலிய நாடுகளிலும் சிறிதளவு பயிராகிறது. ஆயி னும் தென்னிந்தியாவே இதன் தலையான விளைவிடம். Scitaminae என்ற குடும்பத்தில், Zingiberaceae என்னும் உட்குடும் பத்தைச் சேர்ந்த இது Cardamom என்றழைக்கப்படுகிறது. இதன் தாவரவியற்பெயர் Elettaria Cardamomum.

இது பயிர் செய்யப் படுவதோடு இயற்கையாகவும் விளை கிறது. 2500 முதல் 5000 அடி வரை உயரமும், ஆண்டுக்குச் சுமார் 100 அங்குலம் மழையும் உள்ள இடங்களும், காற்று அதிகமில்லாத மலைச்சாரல்களும் ஏலம் வளர்வதற்கு ஏற்ற இடங்களாகும். இதனால் தான் மலைப்பகுதிகளில் இது மிகுதி யாக வளர்கின்றது. சித்திரகூட மலையின் சாரலில் ஏலம் மிகுதியாக வளர்ந்திருப்பதை இராமனின் கூற்றால் அறிகி றோம்.

'தாளினேலமுந் தமாலமுஞ் சுடர்தரு சாரல்'

(அயோ : 8 : 2)

இவ்வாறு ஏலம் மலைப்பகுதிகளில் வளர்வதால், மலைகளைக் கடந்து வருகின்ற சரயு நதியும், ஏலத்தின் நறுமணத்தைக் கொண்டு விளங்குவதில் வியப்புமுண்டோ? (பால : 1 : 13).

செடியின் அடிப்பாகத்திலிருந்து மலர்கள் தோன்றும். காய் உருண்டையாகவோ நீளமாகவோ இருக்கும். சாதாரண மாக ஒரு கனியில் 10-15 விதைகளிருக்கும். இந்தக் கனியும் விதைகளும் மணம் மிக்கவை. இதன் நறுமணச் சிறப்பைக் கம்பர், வானிலுள்ள தேவர்களையும் இழுக்கும் தன்மையுடை யது என்று கூறிப் புலப்படுத்துகிறார்.

'வானி முக்கு மேல வாச மன்ற ஞறு குன்றமே'

(கிட் : 283)

இத்தகைய நறுமணத்துடன் சுவையும் உடைய காரணத்தினுல் ஏலக்காயை உணவுப் பொருட்களில் சேர்க்கிருர்கள். மருந்துக்காகவும் இதைப் பயன்படுத்துவதுண்டு.

---

## கமுகு

Betel Nut Palm என்றழைக்கப்படும் இம்மரம் Palmae என்னும் குடும்பத்தைச் சேர்ந்ததாகும். இதனைத் தாவரவியலார் Areca Catechu என்பர். கம்பன் காவியத்தில் 'பூகம்' என்ற பெயரும் கமுகை உணர்த்துகின்றது (பால : 1 : 20). தென்னிந்தியாவிலும் இலங்கை, பர்மா, அஸ்ஸாம் முதலிய பகுதிகளிலும் கமுகு மிகுதியாக வளர்கிறது. இது 60 முதல் 100 அடி உயரம் வரையிலும் வளரும். பசிய நிறத்துடன் விளங்கும் இம்மரத்தைக் கம்பர் மரகதத்தோடு ஒப்பிட்டிருப்பது பொருத்தமே.

'மரகதப் பூகம்' (ஆர : 592)

ஆனுல் இத்தகைய மரகதப்பூகம் இராவணன் நாட்டில் இந்திர நீலம் என்னும் இரத்தின மயமாக விளங்குகின்றது (ஆர : 649).

இவ்வாறு கமுக மரத்தை விளக்கின கம்பர், கமுகின் விரிந்த பாளையை ஓர் அழகிய உவமையாகப் பயன்படுத்துகிருர். இரவுப்பொழுதில் இருள் நீங்கும் படியாக ஒளிவீசும் நிலாக்கற்றைக்கு உவமையாக வெள்ளிக் கும்பத்தில் வைக்கப் பட்டிருக்கும் கமுகின் விரிந்த பாளையைக் கூறியிருப்பது மகிழ் தற்குரியது (பால : 10 : 72).

கிளைகளில்லாமல் நேராக வளரும் இம்மரத்தின் உச்சியில் தூவல் போன்ற இலைகள் (feathery leaves) கூட்டமாக வளர்ந்திருக்கும். இலைகளின் நடுவில் காய்கள் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கும். பாக்கு மரத்தின் குலைகள் இளமையாக இருக்கும்போது பசிய நிறத்துடன் இருக்கும். முதிர முதிர அந்நிறம் நீங்கிப் பொன்னிறமடையும். இத்தகைய பாக்கின் பொன்னிறத்திற்கு, கணவரைப் பிரிந்த மகளிரின் மேனியில் காணப்படும் பசலைநிறம் ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது.

'சொன்னிறை கேள்வியிற் றொடர்ந்த மாந்தரின்
இன்னிறப் பசலையுற் றிருந்த மாந்தரின்
தன்னிறம் பயப்பய நீங்கித் தள்ளரும்
பொன்னிறம் பொருந்தின பூகத் தாறெலாம்'
(கிட் : 548)

நன்கு முற்றிய கனிகள் செந்நிறமடையும். இச்செந்நிறக் கனிகளுக்கு உவமையாகப் பவளம் கூறப்பட்டுள்ளது.

'காசறு பவளச் செங்காய்' (பால : 10 : 9)

கம்பர் நாட்டுவளத்தைக் குறிக்கவும் கமுகமரத்தைப் பயன்படுத்தியுள்ளார். கோசல நாட்டில் கமுகந் தோட்டங்கள் செழித்து வளர்ந்திருந்ததைப் பல பாடல்கள் உணர்த்துகின்றன (பால 1:20, 2:26) கோசலநாட்டு வளத்தைக் கூறும்போது கம்பர் தன்நாடான சோழநாட்டின் வளத்தினையே மனதிற்கொண்டிருந்தார் என்று கூறுவதுண்டு. இவ்வாறு பிற நாட்டை வர்ணிக்கும்போது கூட தன்நாட்டைப்பற்றி எண்ணும் கம்பருக்கு, தன் நாட்டினையே வர்ணிக்கும் சூழ்நிலை ஏற்பட்டதும் தன்னை மறந்து பாடுகிறார். காவிரியால் வளம் பெற்ற பொன்னி நன்னாட்டில், வழிச்செல்வோரை இடர்ப்படுத்துமாறு பாக்குமரங்களும் பிறமரங்களும் நெருங்கி வளர்ந்திருக்கும் என்று கூறி மகிழ்கிறார் ஆசிரியர்.

'பொன்னி நாடு பொருவில தெய்தினர்
செந்நெ லுங்கரும் புங்கமு குஞ்செறிந்
தின்னல் செய்யு நெறியரி தேகுவார்' (கிட் : 912)

பாக்குமரம் மகளிர் கழுத்திற்கு உவமையாகக் கூறப் பட்டிருக்கிறது.

'அங்கவர் கழுத்தென கமுகு மார்ந்தன'
(அயோ : 2 : 30)

பாக்குமரங்களில் ஊஞ்சல் கட்டும் வழக்கமிருந்தது என் பதைக் கம்பன் காவியத்தின் பல பகுதிகளும் உணர்த்துகின் றன.

'கமுகு வார்நெடுங் கனக வூசலில்
குமுத வாயினர் குயிலே யேசுவார்
சமுக வாளியுந் தனுவும் வாண்முகத்
தமுத பாடலார் மருவி யாடுவார்' (கிட் : 888)

திருமணத்தின்போது கமுகமரங்களைக் கொண்டு வந்து நாட்டி அலங்கரித்தனர் என்ற செய்தியையும் கம்பர் தருகிறார்.

'கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்'
(பால : 21 : 23)

கம்பன் காவியத்தில் ஓர் இடத்தில் கூந்தற்கமுகு என ஒரு குறிப்புக் கிடைக்கிறது. குறத்தியர் கூந்தற்கமுகின் பாளை களில் மலர்மாலையை அணிவித்து அவற்றைத் தம் கூந்தலோடு உவமை காண்பார்கள் என்று இங்கு கூறியிருப்பது ஆராய்தற் குரியது.

'மாந்தளி ரனைய மேனிக் குறத்தியர் மாலைசூட்டிக்
கூந்தலங் கமுகின் பாளை குழுவினோ டொப்புகாண்பார்'
(பால : 14 : 42)

இங்கு 'கூந்தற் கமுகு' என்பது சாதாரணமான பாக்கு மரத்தைக் குறித்ததாகத் தோன்றவில்லை. ஏனெனில் பாக்குமரத்தின் பாளை மகளிர் கூந்தலோடு ஒப்பிட்டுக் கூறும் அளவுக்கு அழகுடையதோ நீண்டதோ அன்று. பொதுவாக, 'கொண்டைப் பனை', 'திப்பிலிப் பனை' என்ற பெயர்களால் அழைக்கப்படும் Caryota urens என்ற மரத்தின் பூங்குலையைத் தான் மகளிர் கூந்தலுக்கு உவமையாகக் கூறுவது வழக்கம். ஏனெனில் இம்மரத்தின் பூங்குலைகள் மிக நீளமாகவும் (10-12 அடி) அழகாகவும் இருக்கும். இவ்வாறு நீண்டு வளர்ந்திருக்கும் பூம்பாளையைக் கூந்தலுக்கு உவமையாகக் கூறுவது தான் பொருத்தமாக அமையும். எனவே இங்கு கூறப்பட்டிருக்கும் 'கூந்தற் கமுகு' என்றபெயர் Caryota Urens என்ற மரத்தைத் தான் குறிக்கின்றது என்று கொள்வதே ஏற்புடைத்து.

---

# கரும்பு

Gramineae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Saccharum Officinarum என்றழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Sugar cane என்பர். கம்பராமாயணத்தில் வேழம், கன்னல் என்ற பெயர்களும் கரும்பினைக் குறிக்கின்றன.

'.............................................வேழவிற்றடக்கை வீரற்கு'

(பால : 16 : 15)

'கன்னற் றோளாற்' (யுத் : 4303)

சிறப்பான உணவுப் பொருளும், மக்கள் பெரிதும் விரும்புவதுமான சர்க்கரை இதனின்றும் உண்டாகிறது. Beetroot போன்ற வேறு பொருட்களினின்றும் சர்க்கரை செய்யப்படு

கின்றதாயினும், உலகத்திற்குத் தேவையாவதில் 60% சர்க்கரையும் கரும்பிலிருந்து தான் உண்டாக்கப்படுகிறது. தென்னிந்தியாவில் கரும்பிலிருந்து சர்க்கரையும் (Sugar), வெல்லமும் (Jaggary) செய்கிறார்கள்.

கரும்பின் தண்டு உயரமாகவும் உருளையாகவும் இருக்கும். கணுக்கள் ஒன்றன்மேல் ஒன்றாக அமைக்கப்பட்டிருக்கும். தண்டையொட்டி, இலை தோன்றுமிடத்தில் சிறு குருத்து உண்டு. கரும்பின் துண்டை நடும்போது இக்குருத்துத் தான் வளர்கிறது. இக்குருத்து 'கண்' என்றழைக்கப்படுகிறது. (At the base of each leaf and fully covered by the sheath is a bud, round or oval in shape. When the canes are planted in the ground these buds or 'eyes' sprout). கரும்பின் இக்குருத்து பற்றிக் கம்பர் இலக்கியச் சுவைபட எடுத்துரைப்பதை நோக்குவோம். கோசலநாடு எல்லா நலமும் பெற்று செல்வச் செழிப்புடன் விளங்குகின்றது. எனவே அங்கு அனைவரும் மகிழ்ச்சியுடன் வாழ்கின்றனர். அங்கு நெற்கதிர், வண்டு, கடைசியர் முகம். தாமரை என்பவை கண் விழித்து நோக்க, கரும்பும் குருத்தாகிய கண்மலர்ந்து ஒளிர்கின்றதாம்.

'மிடைபசுங் கதிருமீனு மென்றழைக் கரும்பும் வண்டும்

கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு
[மாதோ'

(பால : 2 : 7)

கணுக்களிலிருந்து தோன்றும் இலைகள் மாற்றொழுங்கில் அமைந்திருக்கும். இலையின் அடிப்பாகம் உறை (Sheath) போன்று தண்டை முடியிருக்க, மேற்பாகம் பசுமையான பரப்புடையதாக இருக்கும். (The leaf base sheath the stem for a short length and then bent away as the blade of the leaf). இலை நீண்டும் குறுகியும் இருக்கும். மென்மையான, பசிய இலைகளை உடைய காரணத்தால் கம்பர் இதனை 'மென்றழைக் கரும்பு' (பால : 2 : 7) என்று கூறுகிறார்.

ஏனைய புற்பூக்களைப் போலவே கரும்பின் பூக்களும் சின்னஞ் சிறியவையாகும். இவை கொத்தாக உண்டாகும். இப் பூங்கொத்து 2 முதல் 4 அடி நீளமுடையதாகவும், வெண்மையாகவும், பஞ்சு போன்றும், மிக மென்மையாகவும் இருக்கும். காற்றில் பூங்கொத்து அசைந்தாடுவது வெண்சாமரை வீசுவது போல் அழகாகத் தோற்றமளிக்கும். தெருவின் இருபக்கங்களிலும் கட்டப்பட்டு, காற்றில் அசைகின்ற வெண்கொடிகளை ஆற்றின் இருகரைகளிலும் பூத்து நிற்கும் கரும்பின் வெண்பூக்களோடு ஒப்பிட்டுப் பட்டினப்பாலை கூறுவது மிகப் பொருத்தமான, அழகான ஓர் உவமையாகும்.

'வருபுனல் தந்த வெண்மணல் கான்யாற்று
உருகெழு கரும்பின் ஒண்பூப் போல
மேல் ஊன்றிய துகிற்கொடி'

*(பட்டினப் : 161-163)*

கோசலநாடு வளம் கொழிக்கும் நாடு. அந்நாட்டில் பலவகையான தேன்களும் பெருகியோடிக் கடலில் கலக்க, அக் கடலில் வாழும் மீன்களெல்லாம் அத்தேன்களை உட்கொண்டு களிப்படையும். இவ்வாறு கடலில் சென்று கலக்கும் தேன்கள் எவை எவை என்று கூறப்புகுந்த கம்பர் முதலில் கரும்பின் தேனைக் குறிப்பிட்டிருப்பதிலிருந்தே கரும்பின் மிகுதியை உணரலாம்.

'ஆலைவாய்க் கரும்பின் றேனும்..........................
வேலைவாய் மடுப்பவுண்டு மீனெலாங் களிக்கு மாதோ'

*(பால : 2 : 9)*

கரும்பு மிக இனிமையானதும், யாவராலும் விரும்பக் கூடியதுமாகும். மகளிர் மொழியும் மிக இனிமையானதும், யாவரும் விரும்புவதும் ஆகையால் கரும்பை மகளிர் மொழியுடன் ஒப்பிட்டுக் கூறுவது பொருத்தமாக அமைகிறது. இந்த

மரபுவமை கம்பரால் பலமுறை கையாளப்பட்டுச் சிறப்புப் பெறுகின்றது.

'கரும்பனைய செஞ்சொனவில் கன்னியர்'

(அயோ : 5 : 11)

இவ்வாறு மகளிரின் மொழிக்கு மட்டுமன்றி, அவர்களது இசைக்கும் உவமையாகக் கரும்பு கூறப்பட்டுள்ளது.

'கரும்பிசைச் சித்தியர்' (சுந் : 1058)

கரும்பிற்கு இத்தகைய இனிமையைக் கற்றுக்கொடுத்தவர் களே பெண்கள் தான் என்று கூறி அவர்களுக்குச் சிறப்பை அளிக்கிறார் ஆசிரியர்.

'கரும்பை யின்சுவை கற்பித்த சொல்லியர்'

(சுந் : 292)

கரும்பினை மகளிர் தோள்களுக்கு உவமை கூறுவது புலவர் மரபு.

'கரும்பார் தோண்முத்தங் கழன்று' (சீவக : 231)

ஆனால் இத்தகைய கரும்பும் சீதாபிராட்டியின் தோள்களுக்கு ஒப்பாகாது என்பது கம்பர் கருத்து (கிட் : 763).

கரும்பில் தேன்கூடு கட்டப்பட்டிருக்கும் செய்தியைப் பல இலக்கியங்களும் கூறுகின்றன.

'தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பு'

(குறுந் : 85)

'ஆங்கண் கரும்பில் தொடுத்த பெருந்தேன்
சிதைந்து சுரும்பு சூழ் பொய்கைத் தூநீர்கலக்கும்'

(சிலம்பு : 10 : 82-83)

இங்ஙனம் தேன்கூடுகளைத் தன்னிடத்தே கொண்டுள்ள கரும்பு கள் காற்றில் ஒன்றோடொன்று மோதப் பெறுவதால் கழனி களில் பெருகின தேனானது வயல் வரப்புக்களைக் கடந்து பாய் கின்றதாம்.

'கரும்பு கால்பொரக் கழனி வார்ந்து தேன்
வரம்பு மீறிடு மருதம்..................................'

(பால : 6 : 22)

வடமொழி இலக்கியங்களிலும், தமிழிலக்கியங்களிலும் கரும்பு காமன் வில்லாகப் பேசப்படுகிறது. கம்பன் காவியமும் இக்கருத்தினைக் கூறுகின்றது.

'கன்னலின் கருப்புச் சிலையான்' (பால : 10 : 145)

வெவ்வேறு பொருட்களால் ஆன ஏழு கடல்கள் உண் டென்றும், அவற்றுள் ஒன்று கருப்பஞ் சாற்றினால் ஆனது என் பதும் புராணக்கருத்து. ஏனைய ஆறு கடல்களும் உப்பு, தேன், நெய், தயிர், பால், சுத்தநீர் என்பவற்றால் ஆனவை.

'உப்புத் தேனுநெய் யொண்டயிர் பால்கரும்
பப்புத் தானென் றுரைத்தன வாழிகள்'

(யுத் : 3369)

இன்று கரும்பிலிருந்து சாற்றினை எடுப்பதற்காகப் பல நூதன வசதிகளும், புதுவிதமான இயந்திரங்களும் உள்ள தொழிற்சாலைகள் எங்கும் உள. இதுபோல் பழங்காலத்தி லும் கருப்பஞ் சாற்றை எடுக்கும் ஆலைகள் இருந்தன என்ப தைக் கம்பராமாயணத்தினின்று அறியலாம். கோசல நாட் டின் செல்வச் சிறப்பினைக் கூறப் புகுந்த கம்பர், அங்குள்ள கரும்பாலைகளில் சிதைந்த கரும்பினின்றும் வெளிவந்த தேன் போலுமினிய சாறு வேறு பலதேன்களுடன் கலந்து கடலில்

போய் வீழ்வதாகக் கூறுகிறார். எனவே பழங்காலத்திலேயே கரும்பாலைகள் இருந்தன என்பது தெளிவாகிறது (பால: 2 : 9).

பிறிதோரிடத்தும் கம்பர் கரும்பாலைகளில் நடைபெறும் காட்சியை வர்ணிக்கிறார். அரக்கர்களை அனுமன் தன் வாலினாலும், கைகளாலும் கட்டி எதிரில் இருந்த மரங்களுக்கிடையே வீசியெறிய, அவர்கள் உடல் நசுக்குண்டு பெருகிய இரத்தவெள்ளம் பாய்ந்து ஓடிக் கடலில் வீழ்வது, கருப்பங்கழிகளை எந்திரத்தில் இட்டு ஆட்ட அதன் சாறு பெருகி ஓடி கூனையில் வீழ்ந்தது போலிருக்கிறதாம்.

'கருதி வாலினுங் கையினும் கடிகையிற் கட்டிச்
சுருதி யேயன்ன மாருதி மரத்திடைத் துரப்ப
நிருத ரெந்திரத் திடுகரும் பாமென நெரியக்
குருதி சாறெனப் பாய்ந்தது குரைகடற் கூனை'

(சுந் : 790)

கரும்பில் விதைகள் அதிகமாக உண்டாவதில்லை. கரும்பு பூப்பதினால் அதன் வளர்ச்சி தடைப்படுகிறது. அதனால் கரும்பு மலர்வதை எவரும் விரும்புவதில்லை. கரும்பைச் சிறு துண்டுகளாக வெட்டி அத்துண்டுகளை நடுவது தான் வழக்கம். ஆனால் தற்காலத்தில் அதன் விதைகளைப் பயன்படுத்தி புதிய, சிறந்த கரும்பு வகைகளைத் தோற்றுவிக்கலாம் எனக் கண்டு பிடித்துள்ளனர். இம்முறையைப் பயன்படுத்தி Coimbatore Sugarcane Breeding Station-இலிருந்து பல ஆய்வுகள் செய்து உண்டாக்கப்பட்ட புதுவகையான கரும்புகள் இப்போது இந்தியாவெங்கும் பரவியுள்ளன.

---

# கவலைக் கிழங்கு

இது Dioscoreaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Dioscorea Oppositifolia என்னும் ஒரு கொடி. இதன் கிழங்கு சிறந்த உணவுப்பொருள். இதன் இலை, கால்நடைகளுக்கு உணவாகப் பயன்படுகிறது.

கம்பர் இரு இடங்களில் கவலைக்கிழங்கைப் பற்றிக் கூறிச் செல்கிறார். காடு நோக்கிச் செல்லும் இராமனிடம் தன்னையும் உடனழைத்துச் செல்லுமாறு வேண்டுகிறான் குகன். தன்னையும் அழைத்துச் சென்றால், மலையாயினும் கவலைக்கிழங்கு முதலியவற்றைத் தோண்டித் தருவேன் என்று கூறுகிறான்.

'கல்லுவென் மலையேனும் கவலையின் முதல்யாவும்'

(அயோ : 6 : 71)

சித்திரகூட மலையின் பல காட்சிகளையும் இராமன் சீதைக்குக் காட்டுகிறான். அம்மலையில், கவலைக் கிழங்கு தோண்டியெடுத்த பல குழிகள் உள்ளன. பாறையின் மீது கட்டிய தேனிறாலை மூங்கில் தாக்குவதனால், அதனின்றும் பெருகின தேன் அக்குழிகளை நிரப்புமாறு வளம் பொருந்தி விளங்குகின்றது அம்மலைப் பகுதி.

'வல்லி தாங்கமை தாக்கலின் வழிந்திழி பிரசம்
கொல்லி வாங்கிய குன்றவர் கொடிநெடுங் கவலை
கல்லி வாங்கிய குழிகளை நிறைப்பன காணாய்'

(அயோ : 8 : 18)

---

# காந்தள்

தமிழிலக்கியங்களில் மிகுதியாகப் போற்றப்படும் காந்தள் ஓர் கொடி. Liliaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Glory Lily என்றழைக்கப்படுகிறது. இதன் தாவர இயற்பெயர் Gloriosa Superba என்பதாகும்.

இதன் தண்டு மென்மையாகவும் இருக்கும். (The stem is round, soft and green). இத்தண்டு 10 – 20 அடி உயரம் வரை வளரும். ஆண்டு தோறும் புதிய கொடிகள், நிலத்தினுள் இருக்கும் கிழங்கிலிருந்து வளரும், கிழங்கு சாதாரணமாக இரு பிரிவுள்ளதாக இருக்கும். இது கலப்பை போன்று தோன்றுவதால் இந்தக் கிழங்கைக் கலப்பைக் கிழங்கு என்பர். காம்புகளில்லாத இலைகளின் நுனி கூராக நீண்டு, பற்றுக் கம்பிகள் போலச் சுருண்டிருக்கும். இக்கம்பிகள் தான் வேலியையோ, பிற மரஞ்செடிகளையோ தழுவி ஏற உதவுகின்றன. (The bright smooth leaves are stalkless and often terminate in spiral tendrils which cling tenaciously to anything they touch).

காந்தட்பூ மிக அழகாகவும், பெரியதாகவும் இருக்கும். பூ ஆறு இதழ்களை உடையது. இந்த அழகிய இதழ்கள் அகலமின்றி நீண்டு, ஓரங்கள் அலை போன்று நெளிந்திருக்கும். தளை அவிழ்ந்த மலர் ஏழு நாட்கள் வாடாமல் நிற்கும். இதழ்கள் இளம்பச்சை, வெண்மை கலந்த மஞ்சள், மஞ்சள், சிவப்பு, கருஞ்சிவப்பு என்றிவ்வாறு பல நிறங்களைப் பெறும் தன்மையுடையவை (The flowers conspicuous against the fresh green of monsoon growths, change colour as they open and peesent lovely variations of yellow, orange and crimson). மற்றும் இதழ்களின் அடிப்பகுதி ஒரு நிறமாகவும், நடுப்பகுதி வேறு நிறமாகவும், நுனிப்பகுதி

பிறிதொரு நிறமாகவும் காணப்படுவது இப்பூவின் தனித் தன்மை. (Green at the bottom they shade to pale yellow and become abruptly orange at the end, the centre rib and edges remaining yellow). மகரந்தத் தாள்கள் பல திசைகளில் நீட்டிக் கொண்டு வெளிப்படையாகத் தெரியும்.

காந்தளில் செங்காந்தள் என்றும் வெண்காந்தள் என்றும் இரு வகைகளைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன. தோன்றி என்பதற்குச் செங்காந்தள் என்றும், 'கோடல்' என்பதற்கு வெண்காந்தள் என்றும் பொருள் கூறுவர். தாவர இயலார், பூவில் காணப்படும் மஞ்சள், சிவப்பு நிறங்களில் அளவைப் பொறுத்தும், பூக்களின் அளவைப் பொறுத்தும் காந்தட்செடிகளை வெவ்வேறு இனங்களாகப் பிரிப்பர். (There are several species, differing in the size of the flower and the distribution of the yellows and the reds). இலக்கியங்கள், மஞ்சள் பெரிதும் கலந்த காந்தட்பூவை வெண் காந்தள் அல்லது கோடல் என்றும், செம்மைநிறம் மிகுந்து காணப்பட்டதைச் செங்காந்தள் அல்லது தோன்றி என்றும் அழைத்தன என்று கருதலாம்.

காந்தள் அரும்பினைப் பாம்புடன் ஒப்பிட்டுக் கூறுவதைப் பல இடங்களில் காணலாம். 'பாம்பு பையவிந்தது போலக் கூம்பிக் கொண்டலிற் றுலைத்த வொண்செங்காந் தள்' என்று குறுந்தொகை கூறுகின்றது. களிமயிலொன்று காந்தளின் முகையைக் கண்டு, பாம்போ என எண்ணி அதனைத் தன் வாயாற் கவ்வுவது கண்டு, தேன் சிந்தும் முல் லைகளுடன் சேர்ந்து கம்பரும் நகைக்கின்றார். இக்காட்சி 'வனம்புகு படலத்தில்' கூறப்படுகின்றது.

'காந்தளின் முகைகண்ணிற் கண்டொரு களிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக் கவ்வியபடி பாராத்
தேந்தள வுகள்செய்யும் சிறுநறு நகைகாணாய்'
(அயோ : 7-9)

இங்ஙனம் மயில்களை அஞ்ச வைத்த காந்தள் அரும்பைக் கண்டு மங்கையரும் அஞ்சிக் கண்புதைக்கும் காட்சியை ஓரிடத்தில் காண்கிறோம்.

'கையென மலரவேண்டியரும்பிய காந்தனோக்கி
பையர விது வென்றஞ்சிப் படைக்கண்கள்
புதைக்கின்றாரும்'
(பால : 14–53)

காந்தளின் அழகிய மலரை இலக்கியங்கள் பலவாறு போற்றி மகிழ்கின்றன. சங்கப்பாடல்கள் பல காந்தள் மலரைக் குருதியுடன் ஒப்பிடுகின்றன.

'குருதியொப்பின் கமழ்பூங் காந்தள்' (நற் : 399)

முதிர்ந்த நிலையில் தான் இதன் பூவிதழ்கள் முற்றும் சிவந்து காணப்படும். இத்தகைய முற்றும் சிவந்த செங்காந்தள்மலர் தீபோன்று ஒளிவீசுவதாகப் பரிபாடல் பகர்கின்றது.

'தோன்றி தீயென மலரா' (பரிபாடல் : 11 : 21)

கல்லாடம் காந்தள் மலரை விளக்குடன் ஒப்பிட்டு 'தோன்றி மரகதத் தண்டின் விளக்கெடுப்ப' என்று கூறுகின்றது. இதே கருத்தைக் கம்பரும் நயம்படக் கூறுகிறார். வண்டுகள் யாழ் போன்று இசைக்க, மேகங்கள் மத்தளங்கள் ஒலிக்க, மயில்கள் ஆடல்மகளிர் போன்று விளங்க, நாட்டிய அரங்கின் நடுவே ஏற்றிவைக்கப்பட்ட விளக்குகள் போன்று செங்காந்தட்பூக்கள் மலர்ந்து விளங்குவதாகக் கூறி நம்மை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகிறார் கம்பர்.

'கிளைத்துணை மழலை வண்டு
 கின்னர நிகர்த்த மின்னும்
துளிக்குரன் மேகம் வள்வார்த்
 தூரியந் துவைப்ப போன்ற
வளைக்கையர் போன்ற மஞ்ஞை
 தோன்றிக ளரங்கின் மாட்டு
விளக்கின மொத்த காண்போர்
 விழியொத்த வினையின் மென்பூ' (கிட் : 463)

காந்தள் இதழ்களை மகளிர் விரல்களுக்கு ஒப்பாகக் கூறுவது, இலக்கியங்களில் பரவலாகக் காணப்படும் ஓர் உவமையாகும். சிறுபாணாற்றுப்படை 'செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்ப' என்று கூறுகின்றது. கம்பர் இவ்வுவமையைத் தம் காவியத்தில் பல இடங்களில் பயன்படுத்துகிறார்.

'காந்தண் மென்விரற் சனகி' (சுந் : 305)

காந்தள் மலரைக் கைக்கு ஒப்பாகக் கூறுவதும் இலக்கிய மரபே. கம்பன் காவியமும் இம்மரபைப் பின்பற்றுகின்றது. கிளிகள் காந்தள் மலரின் மீது ஏறி விளங்குவது, சீதாபிராட்டியின் முன்னங்கையிலேறி இருப்பது போன்று இராமனுக்குத் தோன்றுகிறது.

'சேந்தொளி விரிசெவ்வாய் பைங்கிளி செறிகோலக்
காந்தளின் மலரேறிப் பொலிவது கவினுரும்
மாந்தளிர் நறுமேனி மங்கைநின் மணிமுன்கை
ஏந்தின வெனலாகு மியல்பின விவை காணாய்'

(அயோ : 7 : 5)

மற்றுமோர் அழகான காட்சியை வரைந்தளிக்கிறார் கம்பர். கார்காலத்தில் எங்கும் செங்காந்தள் மலர்கள் வண்டுகள் மொய்க்க, தேன் ஒழுகும்படி விரிந்து சாய்ந்திருக்கின்

றன. ஆனால் கம்பர் கண்களுக்கு இவை காந்தள் மலர்களாகத் தோன்றவில்லை. கார்ப்பருவ எழிலைக் கண்ணுற்று 'காரானது வேனிலை வென்றுவிட்டது' என்று வியப்புற்று அவ் வியப்பை வெளிக்காட்டும் நிலமகளது கைகளாகவே அவை தோன்றுகின்றன. இந்த உவமை எண்ணி எண்ணி மகிழ்தற் பாலது.

'நானிறச் சுரும்பும் வண்டும்
நவமணி யணியிற் சாரத்
தேனுக மலர்ந்து சாய்ந்த
சேயிதழ்க் காந்தட் செம்பூ
வேனிலை வென்ற தம்மா
காரென வியந்து நோக்கி
மானிலக் கிழத்தி கைகண்
மறித்தன போன்ற மன்னோ' (கிட் : 459)

காந்தளின் கிழங்கை உரிக்க உரிக்க, தோடாயிருக்குமேயன்றி உள்ளே ஒன்றும் இராது. இது Liliaceae குடும்பத்தைச் சேர்ந்த செடிகளின் பொதுத் தன்மை எனலாம். இத்தன்மையையும் கம்பர் ஓரிடத்தில் சுட்டுகிறார். திருமாலின் அவதாரமான இராமனிடம் குடிகொண்டிருக்கும் இறைத் தன்மையை வெளிப்படுத்த வேண்டும் என்பது தான் கம்பரின் தலையாய நோக்கம். இராமனின் இறைத்தன்மையைக் கம்பர் பல பாத்திரங்கள் வாயிலாகவும் உணர்த்துகிறார். கருடனின் கூற்றாக இராமனின் இயல்பை உணர்த்தப் புகுந்தபோது தான் காந்தட்கிழங்கின் இத்தன்மையைக் கம்பர் குறிக்கிறார். கோடற்கிழங்கை உரித்தால் உள்ளே ஒன்றும் இல்லாதவாறு போல, இறைவனும் ஒன்றும் விளங்காத தன்மையனாக இருப்பதைக் கூறி வியக்கிறார் ஆசிரியர். இறைத்தன்மையை விளக்க இதைவிடப் பொருத்தமான, சிறந்த உவமை உண்டா என்பது ஐயமே.

'.................................... கோடலுரிபோல்
ஆராயி னேது மிலையாதி' (புத் : 2197)

காந்தள் கார்காலத்தில் மலரும் என்பதைக் கம்பர் குறிப்பிடுகிறார். கார்காலமானது கோடல்கள் மலரப்பெற்ற தால் பெருமையடைந்ததாகக் கூறுகிறார். (கிட் : 457) கார் காலத்தில் பூக்கும் தன்மையை

'கா ரென்றயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவுங் கொன்றையும் கோடலும்'
(நற் : 99)

என்று நற்றிணை நவில்கின்றது இங்ஙனம் மழைக்காலத்தில் பூக்கும் காரணம் பற்றியே, பிற்காலத்தில் இது 'கார்த்தி கைப்பூ' என்றழைக்கப்பட்டது போலும்.

காந்தட்பூவைத் தமிழிலக்கியங்கள் கூறும் பெயரா லேயே 'தோன்றிப்பூ' என்றும், 'மேந்தோன்னிப்பூ' என்றும் மலையாளத்தில் வழங்குகின்றனர். மற்றைக் காலங்களில் கிழங்காக நிலத்தினுள் இருக்கும் இது கார்காலத்தில் திடீ ரென அழகிய பூவொடு தோன்றுவதால் 'தோன்றி' என்றும் 'மேல்தோன்றி' என்றும் அழைக்கப்பட்டது. இதன் காய் நீண்டு காக்கை மூக்குப் போல் சிறிது வளைந்து இருப்பதால் இதனைக் 'காக்கை மூக்குக் கொடி' என்றும் கூறுவதுண்டு

வெயிலில் பச்சைப் பசேலென்று தோன்றும் இலைக ளுடன், பலவித நிறங்களையுடைய பூக்களுடன் வேலிகளிலும் புதர்க்காடுகளிலும் படர்ந்து காற்றில் மெல்ல அசைந்து கொண்டிருக்கும் காந்தட் கொடி மிக அழகாகக் காட்சியளிக் கும். இதனாலேயே இதற்கு, மிக மேலான மாட்சிமை பொருந் தியது எனப்பொருள்படும் Gloriosa Superba என்னும் பெயர் அளிக்கப்பட்டுள்ளது.

---

# குங்குமப்பூ

இது Irideae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த சிறு செடி. இதன் பெயர் Crocus Sativus.

குங்குமப்பூச் செடி ஒரு பல பருவச் செடியாகும். இதன் தண்டு நிலத்திற்குள் கிழங்காக இருக்கும். இலைகள் குறுகி நீண்டிருக்கும். பூக்கள் தனியாக அல்லது சிறு கொத்தாக உண்டாகும். இவை பெரியவை; நீலம் அல்லது ஊதா நிறம் வாய்ந்தவை; மணமுள்ளவை. பூவினுள் சூல்தண்டும் (style), அதன் உச்சியில் மூன்று பிரிவான சூல்முடியும் (stigma) காணப் படும். சூல்முடி கிச்சிலிச் சிவப்பு நிறமானது. நாம் இன்று உணவுப்பொருட்களுக்கு மணமும், சுவையும், நிறமும் ஊட்டு வதற்காகப் பயன்படுத்தும் குங்குமப்பூ என்பது உலர்த்தி எடுக்கப்பட்ட சூல்முடிகளும் சூல்தண்டுமே; சூல்முடிகளை மட் டும் உலர்த்திச் செய்யும் குங்குமப்பூ தான் முதல் தரமானது. சூல்தண்டையும் சேர்த்திருப்பது சற்று கீழ்த்தரமானது.

குங்குமப்பூ மிகவும் விலையுயர்ந்த பொருள். ஸ்பெயின், பிரான்சு முதலிய நாடுகளிலிருந்து இது மிகுதியாக இந்தி யாவிற்கு இறக்குமதியாகின்றது. இந்தியாவில் இதைப் பண் டைக்காலம் முதலே பயன்படுத்தி வந்தனர் என்பதை இலக் கியங்களால் அறியலாம். மகளிர் தொய்யில் எழுதி அணி செய்து கொள்வதற்காகப் பயன்படுத்திய அகிற்றேய்வை, சந்தனக் குழம்பு போன்றவற்றில் குங்குமப்பூவும் கலக்கப்பட் டிருந்தது என்பதைக் கம்பராமாயணத்தால் உணரலாம்.

'.............................. குங்குமச்
செறியகிற்றேய்வை.................' (பால : 18·13)

குங்குமப்பூச் செடியை 'மாரவம்' என்றும் குறிக்கிறார் கம்பர் (பால : 14-58). அத்துடன் மரவம் என்ற சொல்லும் குங்குமப்பூச் செடியை உணர்த்துகின்றது. (ஆர : 74).

# சாமை

Gramineae என்னும் புல் குடும்பத்தைச் சேர்ந்த இது Panicum miliare என்றழைக்கப்படுகிறது. இது மிகப்பழைய காலத்திலிருந்தே இந்தியாவில் பயிரிடப்பட்டு வருகிறது. வட இந்தியாவில் இதனை 'ஷமா' என்றும், கன்னடத்தில் 'சாவ' என்றும், மலையாளத்தில் 'சாம' என்றும் அழைக்கின்றனர்.

இப்பயிர் அதிக உயரம் வளர்வதில்லை. கதிர் விரிந்தும், தானியம் உமி மூடியிருக்கும். தானியத்தை உமி நீக்கியபின் சாதாரண அரிசியைச் சமைப்பது போல் சமைத்து உண்ணலாம். இதைச் சாமை அரிசி என்று கூறுவர்.

கம்பர் ஒரே இடத்தில் தான் சாமையைக் குறிப்பிட்டுச் செல்கிறார். கோசலநாட்டுவளத்தைக் கூறும் கம்பர் அங்கு குறிஞ்சி நில விளை பொருட்களாகிய சாமை, தினை போன்றவற்றை ஏற்றிவரும் வண்டிகளும், நெய்தல் நில விளை பொருளாகிய உப்பினை ஏற்றிவரும் வண்டிகளும் ஒன்றோடொன்று கலக்கும் என்கிறார் (பால : 2-54). சாமையைத் தினை, கம்பு, துவரை போன்ற பல தானியங்களோடு கலப்புப் பயிராக விதைப்பது தான் வழக்கம். அதனால் தான் தினை, எள் போன்ற பல தானியங்களோடு சேர்த்து சாமை கோசலநாட்டிற்குக் கொண்டுவரப்பட்டது என்று கூறினர் போலும்.

சேலம், கோயம்புத்தூர், மதுரை, திருநெல்வேலி, திருச்சி போன்ற இடங்களில் சாமை பயிரானபோதும் ஆந்திராவில் அனந்தபூர், விசாகப்பட்டினம், சித்தூர் போன்ற மாவட்டங்களில் தான் இது மிகுதியாகக் காணப்படுகிறது.

---

# சேம்பு

Aroideae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இது Colocasia Antiquorum என்றழைக்கப்படுகிறது. ஆசியநாடுகள், மலேயா, கிழக்கிந்தியத் தீவுகள், ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் இது பயிராகின்றது. இது முதலில் தென்கிழக்கு ஆசியாவில் பயிர் செய்யப்பட்டு, அங்கிருந்து மற்ற நாடுகளுக்குப் பரவியதாகக் கூறப்படுகின்றது. செழிப்பான வண்டல் நிலங்களிலும், களிமண் பூமியிலும் சேம்பு வளர்கிறது.

சேம்பு ஒரு பல பருவச் செடி. இலைகள் பெரியவையாகவும், முக்கோண வடிவுடையதாகவும் இருக்கும். மண்ணின் அடியிலுள்ள கிழங்கு செடியின் தண்டாகும். கிழங்கும் இலைக்காம்பும் உணவாகப் பயன்படுகிறது.

கம்பராமாயணத்தில் ஒரே ஒரு இடத்தில் தான் சேம்பு குறிக்கப்படுகின்றது. மூங்கில்களின் அசைவினால் உடைந்த தேன்கூடுகளினின்றும் பெருகியோடிய தேன் செங்கழுநீர் குளத்தை நிறைத்து, மதகு வழியாகச் சென்று சேம்புகளின் காலிறும்படியாகப் பாய்ந்ததாம்.

'சேம்பு காலிறச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே'

(பால : 2 : 35)

---

# தருப்பை

Graminear என்னும் குடும்பத்தைச் சேர்ந்ததும், Sacred grass என்றழைக்கப்படுவதுமான இதன் தாவரவியற் பெயர் Poa Cynosuroides என்பதாகும். இதன் இலைகள் மிக நீளமாகவும், அகலம் குறுகியும் இருக்கும். தருப்பைப் புல்லை மிக புனிதமான ஒன்ருகக் கருதினர். அந்தணர் தருப் பைப் புல்லினுலான அரைஞாணும் பூணூலும் அணிந்தனர். சீதாபிராட்டியைத் தேடிச் சென்ற வானரங்கள், விதர்ப்ப நாட்டில் எதிர்ப்பின்றி புகுந்து தேடும் பொருட்டு தருப்பை நூல் பிறழும் மேனியரான அந்தணர் வடிவமெடுத்துத் தேடி யதாகக் கம்பர் குறிக்கிருர்.

'பெய்த குப்பைநூல் பிறழு மேனியார்
செய்த வத்துளார் வடிவிற் றேடினுர்'

(கிட் : 882)

ஈமச்சடங்குகள் புரியும் போது தருப்பைப் புல்லைப் பயன்படுத்தினுர்கள் என்பதை

'இத்தன மாக வேண்டுங்
காரகிலீட்டத் தோடும்
சந்தனங் குவித்து வேண்டு
தருப்பையுந் திருத்தி' (சுந் : 1025)

என்ற பகுதியால் அறியலாம். இவ்வாறு இறக்கும்போது தருப்பைப் புல் பயன்பட்டது என்பதை 93-ஆவது புறப்பா டலாலும் உணரலாம்.

இராமன் தங்கும் பொருட்டுப் பர்ணசாலை அமைத்த நளன் தருப்பைப் புற்களை அடுக்கி அதன் மேல் நறுமலர்களை நிறைத்து மேற்கூரையை வேய்ந்தான்

'நெல்லிஞ லலக்குங் காலு நிரப்பிஞன் தருப்பை
யென்னும்
புல்லிஞல் தொடுத்து வாசப்பூவிஞன் வேய்ந்து
போஞன்'
(யுத் : 701)

---

# தாழை

Pandanaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Pandanus Odoratissimus என்பது தான் தாழை என்று அழைக்கப்படுகிறது. இது மரமாகவும், குற்றுச் செடியாகவும் வளர்வதுண்டு. இதனே ஆங்கிலத்தில் Fragrant Screw Pine என்பர். கம்பர் கைதை, கண்டல் என்ற பெயர்களாலும் தாழையைக் குறிப்பிடுகிருர்.

'துன்று தாள் வளஞ் சுமந்த தாழை' (அயோ : 9 : 138)

'தண்சினேய கைதை' (கிட் : 509)

'கண்டலும்' (யுத் : 331)

தமிழிலக்கியங்களில் தாழை பற்றிப் பல அரிய செய்திகள் கூறப்படுகின்றன. இச்செய்திகள் தாவரவியலார் கூறும் செய்திகளோடு பெரும்பான்மை ஒத்தே வருகின்றன. தாழையின் அடிமரம் நேராக இல்லாமல் வளேந்திருக்கும். இதனுல் தான் கம்பர் தாழையை 'முடவெண்டாழை' (யுத் : 334) என்று குறிக்கிருர். இத்தன்மையைச் சங்கப்பாடல்களும் உணர்த்துகின்றன.

'தடந்தாள் தாழை' (நற் : 131)

தரையிலிருந்து சற்று உயரத்தில், தண்டிலிருந்து தடிப்பான வேர்கள் புறப்பட்டு, சாய்வாக நிலத்தில் போய்ப் பொருந்தும். பின் இவை வன்மை பெற்று தண்டையும் கிளைகளையும் தாங்கி நிற்கும்: இந்த ஊன்று வேர்கள் (விழுது வேர்கள்) Stilt roots எனப்படும். (Number of roots are produced from the main stem and they grow obliquely downwards and penetrate in to the soil. Gradually they get stouter and act as pillars supporting the main stem and the branches or the plant as a whole. Such roots are known as prop or stilt roots). இத்தகைய விழுது வேர்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் தெளிவான குறிப்புக்கள் காணப்படுகின்றன.

'வீழ்தாட்டாழைப் பூக்கமழ்கானல்' (நற்: 78)

தாழையின் இலையை 'மடல்' என்று கூறுவர். இம் மடல் பெரிதாக வளரக் கூடியது. இலையோரங்களில் முட்கள் நிறைய இருக்கும் (Serrate margin) இங்ஙனம் இருபுறமும் முட்களையுடைய தாழை இலையைச் சுறுவின் கொம்புடன் ஒப்பிட்டுக் கூறிய பெருமை சங்கப்புலவர்களையே சாரும்.

'சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை' (நற் : 19)
தாழையின் இலையை ஓலைபோல எழுதப்பயன் படுத்திய செய்தியைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

'முதிர்பூந் தாழை முடங்கல் வெண்தோட்டு

.................................................

விளையாமழலையின் விரித்துரை எழுதி'

(சிலம்பு : 8 : 49)

தாழையின் பூ நறுமணம் மிக்கது. பூங்கொத்து கிளையின் நுனியில் உண்டாகும். அதன் அடியில் பூக்காம்பிலை போன்ற இலைகள் சில உள. இவை படிப்படியாகச் சாதாரண இலைகளோடு சேர்ந்துவிடும். பூங்கொத்து Spadix எனப்படும்.

தாழையின் பூங்கொத்து, உருவில் சிறகுகளை மடக்கி அமர்ந்துள்ள வெண்மையான நாரை போலிருப்பதாகக் கூறப்பட்டிருப்பது அழகான ஒப்புமையாகும்.

'தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை' (குறுந் : 226)

இதே உவமையைப் பெரியதிருமொழியும் (5, 2, 9) அருகு கைதை மலரக் கெண்டை குருகென்றஞ்சும்' என்று, கூறுகின்றது. இதே உவமையை அடிப்படையாக வைத்துக் கொண்டு கம்பர் ஓர் அழகான ஊடற்காட்சியை அமைத்துத் தருகிறார். கருஞ்சினைகளுடைய தாழையில் அருகருகே காணப்பட்ட மலரும், அரும்பும் ஆண்குருகும் பெண்குருகும் போலத் தோன்றுவதால் அதைக் கண்ணுற்ற பெண்குருகு தனது துணை பிறிதொரு பெட்டைக் குருகுடன் அமர்ந்திருப்பதாக எண்ணி ஊடல்கொண்டு தன் அழகிய சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு தலைவரைப் பிரிந்த மகளிரைப் போல வருந்துகின்றதாம்.

'கருந்தகைய தண்சினைய கைதைமடல் காதல்
தருந்தகைய போதுகிளை யிற்புடை தயங்கப்
பெருந்தகைய பொற்சிறையொ டுக்கியிடை பேரா
திருந்தகுரு கின்பெடை பிரிந்தவர்களென்ன'
(கிட் : 509)

நற்றிணைப் பாடலொன்று தாழை அரும்பினை யானையின் தந்தத்துடன் ஒப்பிட்டுக் கூறுகின்றது.

'பெருங்களிற்று மருப்பினன்ன வரும்பு முதிர்பு'
(நற் : 19)

தாழைப்பூங்கொத்தில் ஆண்பூ, பெண்பூ என்று தனித் தனிப் பாகங்கள் உண்டு. ஆண்பூக்களில் கேசரங்கள் மிகுதியாகக் காணப்படும். Male flowers with numerous stamens)

ஆண்பூவிலுள்ள மகரந்தப்பைகள் திறக்கப்படும்போது பல்லாயிரக்கணக்கான மகரந்தப் பொடிகள் காற்றடித்துப் பரவும். இவ்வாறு உதிர்ந்து பரவும் தாழையின் மகரந்தம் மணமிக்க வெண்மையான சுண்ணப்பொடி பரவுவது போன்றிருப்பதாக மணிமேகலை கூறுகின்றது.

'கோடுடைத் தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ண மாடிய இது காண்'

(மணிமேகலை : 17 : 8)

இதே காட்சி, சங்கப்புலவர் ஒருவருக்கு மகளிர் அணிந்த வெண்மையான சங்குவளைகள் உடைந்து உதிர்வது போலத் தோன்றுகின்றது.

'ததர்பிணி யவிழ்ந்த தாழை வன்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலி னுண்டாது
வயங்கிழை மகளிர் வண்டிற்று அங்' (நற் : 299)

தாழை போன்ற புல்வகையை ஒத்த செடிகளில் மிகுதியான மகரந்தப் பொடிகள் உண்டாகின்றன. இத்தகைய செடிகளில் காற்றடித்து மகரந்தப் பொடிகள் பரவுவதால்தான் மகரந்தச் சேர்க்கை நடைபெறுகிறது. தாழை போன்றவை கடற்கரைப் பகுதிகளில் வளர்வதால் காற்றினால் மிகுதியான மகரந்தப் பொடிகள் பெண்பூவில் உள்ள சூல்முடியில் விழாது வீணாகின்றன. எனவே ஏராளமான மகரந்தப் பொடிகள் பரவி வீழ்ந்தால்தான் ஏதேனும் ஒரு சில மகரந்தப் பொடிகளாவது தாழையின் நுண்ணிய சூல் முடியில் விழுந்து கருவுறும் வாய்ப்பு ஏற்படும். இக்காரணம் பற்றியே தாழம்பூ பல்லாயிரக்கணக்கான மகரந்தத்தைத் தோற்றுவிக்கின்றது. இவ்வாறு ஏராளமாக உண்டாகும் மகரந்தப் பொடிகளில் ஒன்றிரண்டு தவிர ஏனையவை ஒரு பயனுமின்றி வீணாகின்றன. தாழையின் இத்தகைய பயனற்ற மகரந்தப் பொடிகளுடன் தன்னை ஒப்பிட்டுக் கூறும் பரதன்

நம் ஆழ்ந்த அனுதாபத்திற்குப் பாத்திரமாகின்ருன். அயோத்தியில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஒன்றையும் அறியாத பரதன் கேகய நாட்டிலிருந்து மீள்கிருன். அயோத்திக்கு வந்தபிறகு தான் இராமன் காடு சென்றதையும், தந்தை உயிர் நீத்ததையும் அறிகிருன். தாளாத்துயருற்றுத் தாய்மேல் சீறி விழுகிருன். இறுதியில், தந்தைக்கு ஈமச்சடங்குகள் புரிய வரும் பரதனை வசிட்டமாமுனி, 'உரிமை செய்யத் தக்கவன் அல்லை நீயென்று தசரதன் உன் உறவை ஒழித்திட்டான், என்று கூறித் தடுக்கின்ருன். தந்தைக்கு ஈமக்கடன் புரிவது தான் ஓர் மகனின் ஒப்பற்ற கடனும். அத்தகைய நீர்க்கடனையும் ஆற்ற இயலாதவாறு தான் பயனற்று விட்டதைக் கண்ட பரதன் தன்னைத் தாழம்பூவின் பயனற்ற மகரந்தத்துடன் ஒப்பிட்டுக் கூறும் காட்சி உண்மையில் அவலத்தின் உச்ச நிலைக்கு நம்மை அழைத்துச் செல்கின்றது.

'துன்னு தாள்வளஞ் சுமந்த தாழையின்
பன்னு வான் குலைப் பதடி யாயினேன்
என்னை யென்னையே யீன்று காத்தவென்
அன்னை யாரெனக் கழகு செய்தவா'

(அயோ : 9 : 138)

இங்ஙனம் மனித உள்ளத்தில் எழும் ஆழ்ந்த உணர்ச்சிகளை விளக்குவதற்கும் இயற்கைச் செல்வங்களான செடி கொடிகள் கவிஞனுக்கு உதவுகின்றன.

தாழை கடற்கரைச் சூழ்நிலையில் வளரும் இயல்பினையுடையது.

'வீழ்தாள் தாழை பூக்கமழ் கானல்' (நற் : 78) என்று நற்றிணை நவில்கின்றது. கம்பரும் நெய்தல் நிலப் பொருள்களைத் தொகுத்துரைக்கும் போது, தாழையைச் சுட்டுகிருர். (யுத் : 331) மேலும், தாழை கடற்கரையில் வளரும் என்பதை

உணர்த்தும் முறையில் ஓர் அழகான காட்சியைக் காட்டுகிறார் கம்பர். கரைக்கண் வந்து மோதும் வெண்ணலைகள் கூதிர் காலத்து நுட்பமான பனித்திவலைகளை உமிழ்வதால், பேடைப் புட்களைத் தமது அழகிய சிறகின் ஒரு பாதியில் தழுவிக் கொண்டு, வெண்ணிறத் தாழையின் மீதிருந்து அன்னங்கள் துயில் கொள்ளும் காட்சி, சீதையைப் பிரிந்து வருந்தும் இராமன் துயரத்தை மிகுவிக்கின்றது.

'கூதிர் நுண் குறும்பனித் திவலைக் கோவைகால்
மோதிவெண் டிரைவர முடவெண் டாழைமேல்
பாதியஞ் சிறையிடைப் பெடையைப் பாடணைத்
தோதி மந் துயில்வகண் டுயிர்ப்பு வீங்கினன்'

(யுத் : 334)

தாழையைக் கடற்புலால் நாற்றத்தை நீக்கவே வேலியாகப் பயிரிட்டதாகத் தெரிகின்றது. தாழையின் நறுமணமிக்க மலர் கடற்கரையின் புலால் நாற்றத்தை நீக்கியதாகச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

'கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழை'

(சிலம்பு : 6 : 166)

---

## தினை

சிறு தானியங்களில் ஒன்றாகிய தினை பெரும்பாலும் இந்தியா, சீனா, ஜப்பான் முதலிய நாடுகளிலும், சிற்சில இந்தியத் தீவுகளிலும் பயிரிடப்படுகின்றது. அண்மையில் இது மேனாடுகளிலும் பரவியுள்ளது. தென் ரஷ்யா, இத்தாலி,

ஆஸ்திரியா, அமெரிக்கா முதலிய நாடுகளில் இதனை வளர்ப்புப் பறவைகட்கும், விலங்குகட்கும் ஏற்ற, சிறந்த உணவுப் பொருளாகப் பயன்படுத்துகிறார்கள்.

Gramineae என்னும் புல் குடும்பத்தைச் சேர்ந்த இப்பயிர் Setaria Italica என்றழைக்கப்படுகிறது. மேல்நாடுகளில் இதற்கு Italian millet, Fox-tail millet என்ற பெயர்களும் வழங்கப்படுகின்றன.

இப்பயிர் சுமார் 3 அடி உயரம் வளர்கிறது. நீண்ட மெல்லிய கதிர்கள் 6 முதல் 10 அங்குலம் நீளமாகவும், கீழ் நோக்கி வளைந்தும் இருக்கும். நெல்லைப்போன்று தினையிலும் தானியம் உமியால் மூடப்பெற்றிருக்கும். இதைக் குத்தி உமியை நீக்க வேண்டும். தானியம் சிறிதாகவும் உருண்டையாகவும் இருக்கும். பெரும்பாலும் இவை மஞ்சள் நிறமாகவும், சிவப்பு நிறமாகவும், இன்னும் சில கறுப்பு நிறமாகவும் காணப்படும். இவற்றில் செந்தினையைப் பற்றிக் கம்பராமாயணம் கூறுகின்றது. (பால : 14 : 34)

தினை அரிசியில் புரதமும் (புரோட்டீன்) கொழுப்புச் சத்தும் மிகுதியாக இருக்கின்றன. இது ஒரு சிறந்த உணவாகும். உமியை நீக்கியபின் கிடைக்கும் தினை அரிசியை நெல் அரிசியைப்போல் சமைத்து உண்ணலாம். மலைவாழ் மக்களான குறவர்களுக்குத் தினை இன்றியமையாத ஓர் உணவாக அமைகிறது. அதனால்தான் கம்பர் குறவர்களைச் 'செந்தினைக் குறவர்' (பால : 14 : 34) என்றே அழைக்கிறார். மலைவளங் காணச் சென்ற சேரன் செங்குட்டுவனையும் அவன் தேவியையும் குன்றிலிருந்து வரும் பலவித ஒலிகளுடன் தினையைக் குற்றுவோரது வள்ளைப்பாட்டும் மகிழ்வித்தது என்று கூறும் சிலப்பதிகாரப் பகுதியும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது.

'தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியும்
........................யாங்கணு மொலிப்ப'

(சிலம்பு; 25 : 26-32)

இங்ஙனம் மலைவாழ் மக்கள் மட்டுமின்றி நாட்டில் வாழும் மக்களும் தினையை உணவாகக் கொண்டிருந்தனர். குறிஞ்சி நில விளைபொருட்களாகிய தினை, எள், சாமை போன்றவற்றை வண்டிகளிலேற்றி. கோசல நாட்டிற்குக் கொண்டு வந்தாகக் கூறுவதிலிருந்து இச்செய்தி தெளிவாகிறது

(பால : 2 : 54)

பறவைகளுக்குச் சிறந்த உணவாகத் தினை பயன்படுகிறது என்பதை முன்பு கண்டோம். இவ்வாறு பறவைகளுக்கு மிக விருப்பமுள்ள தானியமாகையால் தினைப்புனங்களில் பறவைகள் எப்போதும் ஒலித்துக் கொண்டிருப்பது இயல்பன்றோ

'.... ... ... ...................... ஏனலில்
குருவி பாயும் ... ......... ......' (கிட் : 234)

'தினைச் சிலம்புவதின் சொலிளங்கிளி' (பால : 2 : 29)

இவ்வாறு தினையை உண்ணவரும் பறவைகளிலிருந்து தினைப்புனத்தைக் காக்கும் வேலையை இளம் பெண்களுக்கு அளித்திருந்தனர் என்பதைப் பல சங்கப்பாடல்களாலும் உணரலாம்.

'ஏனலங் காவல ராஞ தார்த்தொறும்
கிள்விளி பயிற்றும்.........................' (அகம் : 12)

---

# தென்னை

Palmeae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Cocos Nucifera என்றழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Coconut Tree என்பர். கம்பன் காவியத்தில் 'தாழை' என்ற சொல்லும் தென்னையைக் குறிக்கின்றது. (பால: 5: 42)

மிக உயரமாக வளரும் தென்னைமரம் கிளைகளற்றது. இலைகள் மிக நீளமான கூட்டிலைகளாகும். ஒவ்வொரு இலையிலும் பல சிற்றிலைகள் தூவலின் அமைப்பில் அழகுற அமைக்கப்பட்டிருக்கும் (The leathery, sword shaped leaflets are araanged flat, like a feather).

ஆண்பூக்களும், பெண்பூக்களும் ஒரே மரத்தில் உண்டாகும். பூக்கள் மிகப்பெரிய பாளைகளால் பொதியப்பட்டிருக்கும். விரியாத இளம் தென்னம்பாளைகளை நாரை என்று எண்ணி இளங்கெண்டை மீன்கள் அஞ்சி நடுங்கும் காட்சியைக் கம்பர் பாடுகிறார்.

'......................... தெங்கிளம் பாளையை
நாரை யென்றிளங் கெண்டை நடுங்குவ'

(கிட் : 909)

பல மட்டைகள் விரிந்து கவின் பெற்று விளங்கும் தென்னை மரத்தின் தோற்றப் பொலிவு தேரின் அழகையும் வென்றதால் 'தேரை வென்றுயர் தெங்கு' (கிட் : 909) என்று குறிக்கிறார் ஆசிரியர்.

தென்னையின் காய்கள் பருத்து, உருண்டு, பச்சை நிறப் புறத்தோலால் பொதியப் பெற்றிருக்கும். இவ்வாறு உருண்டிருப்பதால் காலாலிடறின் இவை எளிதில் நாற்புறமும் உருண்டு சென்றுவிடும். இந்த அழாகான காட்சியைச் சிறந்த உவமையாக அமைக்கிறார் கவிஞர். சூரிய வம்சத்து அரசர்கள், தங்கள் தந்தையின் அசுவமேதயாகத்துக் குதிரை காணுமற் போனதற்காகச் சினமுற்றுப் பெரிய மலைகளை. காலாலிடறத் தக்கத் தேங்காயோடுகளைப் போலப் புரட்டித் தள்ளிக்கடலைத் தோண்டினர்கள் என்று அவ்வம்சத்தின் புகழைச் சனக மன்னனுக்கு எடுத்துரைக்கின்றார் கௌசிக முனி.

'இடறேட்ட வினநெடிய வரையுருட்டி யிவ்வுலகந்
திடறேட்ட மெனக் கிடக்கும் வகையிரங்கித்

[தெவ்வேந்தர்

உடனேற்ட்ட நெடுவேலா யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடனேற்ட்டா ரெனின் வேறோர் கட்டுரையும் வேண்டு
மோ' (பால : 11 : 8)

தென்னையின் இளங்காய் 'குரும்பை' என்று கூறப்படு கிறது (பால : 3 , 10) இளங்காயிலுள்ள சதைப் பகுதியும் நீரும் மிக்க சுவையுடையவை. இந்த இளநீர் வேனிற் காலங் களில் களைப்பை ஆற்றி குளிர்ச்சியைத் தரும். தென்னை இளநீர் மகளிர் நகிலுக்கு உவமையாகப் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது.

'..............மகளிர் கொங்கையாம்

ஏந்திள நீர்களும் வறுமை யெய்தின' (அயோ : 4 : 215)

தென்னை மரங்களில் நாரைகள் வசிக்கும் செய்தி குறிக் கப்படுகிறது.

'கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ்

தடறு தாங்கிய கூனிளந் தாழை'

(கிட் : 913)

தென்னை மரத்தின் ஒவ்வொரு பாகமும் ஏதேனும் ஒரு வழியில் மக்களுக்குப் பயன்படுகிறது. காயிலுள்ள பருப்பு பச்சையாக இருந்தாலும், காய்ந்து கொப்பரையானாலும் உணவுப் பொருளாகப் பயனாகிறது. எண்ணெய் சமையலுக் கும், தாவரநெய் தயாரிப்பதற்கும், சோப்பு முதலிய அலங் காரப் பொருட்கள் செய்வதற்கும் பயனாகின்றது. பிண்ணாக்கு கால்நடைகளுக்கு உணவாகிறது. இளநீர் களைப்பை ஆற்றிக் குளிர்ச்சியைத் தரும் பானமாக அமைகின்றது. தேங்காய் மட்டையிலிருந்து எடுக்கும் நார் கயிறு திரிக்கவும், கயிற்று மிதி, பாய் முதலியவை செய்யவும் உதவும். தேங்காயோடு அடுப்பெரிக்கவும், கரியாக்கவும் உதவுகிறது. இவ்வோடு அகப் பை, கரண்டி, கிண்ணம், சிமிழ் முதலிய பொருட்களும் செய்யப் பயன்படுகிறது. வளர்ந்த மரத்தின் தண்டு கட்டிட

வேலைகளுக்குப் பயன்படுகிறது. தென்னை ஓலையைக் கீற்றாக மிடைந்து கூரை வேயவும், வேறுவகைகளிலும் பயன்படுத்து வார்கள். விரியாத பாளையிலிருந்து எடுக்கும் சாற்றை வெல் லம், சர்க்கரை, இனிய பதனீர், புளித்த கள் என்பவற்றைத் தயாரிக்கப் பயன்படுத்துவார்கள். இவ்வாறு வாழ்க்கைக்குத் தேவையான பல பொருட்களையும் தருவதால் தென்னையைக் 'கற்பகமரம்' என்றும் 'சுவர்க்கதரு' என்றும் அழைக்கிறார் கள்.

---

## நரந்தம்புல்

Gramineae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வகைப் புற்செடிதான் நரந்தம் என்று அழைக்கப்படுகிறது. இதன் தாவரவியற் பெயர் Cymbopogon Nardus என்பது.

கி. பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் இந்தியாவிலி ருந்து கிரேக்க, ரோமாபுரி நாடுகளுக்கு ஏற்றுமதியான பல நறுமணப் பொருட்களையும் கிரேக்க ஆசிரியர்கள் குறித்திருக் கிறார்கள். அவைகளில் Nard என்ற ஒரு பொருளும் குறிப் பிடப்பட்டிருக்கின்றது. சங்க இலக்கியங்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் குறிப்பிட்டிருக்கும் 'நரந்தம்' என்பது தான் கிரேக்க ஆசிரியர்களால் Nard என்று குறிக்கப்பட் டது.

நரந்தம்புல்லிலிருந்து நறுமணமான ஒரு எண்ணெய் எடுக்கப்படுகிறது. இந்த எண்ணெய் அமெரிக்க நாட்டிற்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு 'டாலர்' வருவாயைத் தருகின்றது. இந்த எண்ணெய் பல பொருட்களுக்கு நறுமண மூட்டப் பயன்படுகிறது.

நரந்தம் புல்லைப் பழந்தமிழர் மணமூட்டுவதற்குப் பயன்படுத்தினர் என்பதைச் சங்க இலக்கியங்களால் அறியலாம். நாந்தம் புல்லின் நறுமணம் மகளிர் கூந்தலுக்கு ஊட்டப் பட்டமை,

'நரந்த நாறிருங் கூந்தல் எஞ்சாது நனிபற்றி'

(கலி : 54)

என்ற அடியால் அறியலாம். கம்பன் காவியத்தில் நரந்தம் பற்றி ஒரு குறிப்பு வருகிறது. குறிஞ்சி நிலம் வழியாகப் பாய்ந்து வரும் சரயு நதி வேறு பல மணங்களுடன் நரந்தம் புல்லின் மணமும் பெற்று விளங்குகிறது.

(பால : 1 : 13)

---

# நாணல்

Gramineae என்னும் புற்குடும்பத்தைச் சேர்ந்த இது Ochlandra Travancorica என்றழைக்கப்படுகிறது. ஆறு ஏரி போன்ற நீர் நிலைகளின் ஓரங்களில் மிகுதியாக இது வளரும்.

இது ஒரு பலபருவப்புல் (perennial). சேற்றில் வளர்ந்திருக்கும் வேர் போன்ற தடித்த தண்டிலிருந்து தண்டுக்கிளைகள் 5 அடி முதல் 20 அடிவரை நேராக நிமிர்ந்து, மெல்லிய கரும்பு போல வளரும். தண்டு வழுவழுப்பாகவும், பளபளப்பாகவும் இருக்கும். இலைகள் அகலம் இன்றி நீளமாக இருக்கும். பூங்கொத்து மென்மையான பட்டுப்போன்று வெண்மை அழகுடன் காட்சி தரும்.

சித்திரகூட மலையில் இராமனும் பிராட்டியும் தங்குவதற்காக இலக்குவன் அமைத்த பர்ணசாலையின் மேற்கூரை நாணற்புல்லால் வேயப்பட்டது என்பதைக் கம்பர் குறித்துச் செல்கிறார்.

'தேக்கடைப் படலேயிற் கூரை செய்துபின்
பூக்கிளர் நாணலின் புல்லுவேய்ந்து' (அயோ : 8 : 47)

இதே நாணற் புல் இராமனுக்கும் தேவிக்கும் படுக்கை யாகவும் பயன்பட்டதைக் காண்கிறோம்.

'மாலேவாய் நியமஞ் செய்து மரபுளி யியற்றி வைகல்
வேலேவா யமுதன் ஞளும் வீரனும் விரித்த நாணல்
மாலேவாய்ப் பாரின் பாயல் வைகினர்......................'
(அயோ : 6 : 50)

நாணற் குருத்தினை மகளிர் பற்களுக்கு உவமையாகக் கூறுவது இலக்கிய மரபாக இருந்து வருவதைக் காண லாம். அகப்பாடலொன்று,

'கிளேயரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளேயோரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்'
(அகம் : 212)

என்று கூறுகின்றது. கம்பராலும் இவ்வுவமை கையாளப் படுகிறது. இங்கு சீதையின் பற்களுக்கு உவமையாக நாணற் குருத்து கூறப்படுகிறது. இத்தகு பற்களேயுடைய சீதையைத் தனக்குக் காட்டிய சூர்ப்பணகைக்கு, தன் அரசுரிமையே அளிக்கக் கருதுகிறுன் இராவணன் எனில் அப்பற்களின் சிறப்பை என்னென்று சொல்ல!

'உளேவுறு துயர்முகத் தொளியி தாமெனின்
முளேயெயி றிலங்கிடு முறுவ லென்படும்
தளேயவிழ் குழலிவட் கண்டு தந்தவென்
இளேயவட் களிப்பனென் னரசென் றெண்ணினுன்'
(ஆர் : 838)

———————

# நெல்

இந்தியாவின், குறிப்பாகத் தென்னிந்தியாவின் இன்றியமையாத உணவுப்பொருளாக விளங்குவது அரிசியாகும். இந்தியாவில் மட்டுமன்றி சீனு, ஜப்பான் முதலிய மேல்நாடுகளிலும் அரிசி முதன்மையான உணவுப் பொருளாகப் பயன் படுகிறது. இவையன்றி, உலகிலுள்ள வேறுபல நாடுகளிலும் அரிசி ஓரளவுக்குப் பயன்பட்டு வருகிறது.

நெற்பயிரானது Gramineae என்னும் புல்குடும்பத்தைச் சேர்ந்தது. ஆங்கிலத்தில் paddy என்றழைக்கப்படும் இதனைத் தாவரவியலார் Oryza Sativa என்பர். வெப்பப் பகுதிகளில்தான் நெல் நன்ருக வளர்கிறது. ஆனுல் குளிர் நாடுகளிலும் வளர்வதுண்டு. கடற்பரப்பிலிருந்து 5000 அடி உயரம் வரையிலும் வளரும். ஆனுல் உயரமான இடங்களில் வளரும் நெல்லிற்கு, வளர்வதற்குள்ள கால அளவு மிகுதியாகிறது.

நெல் வளர்வதற்கு நீர்கட்டி நிற்கவேண்டும் என்பது தான் நெல்லின் தனித்தன்மை. பெரும்பான்மையான நெல் வகைகளும் தண்ணீர் கட்டி நின்ருல்தான் செழித்து வளரும். ஆனுல் இவ்வாறு தண்ணீர் கட்டி நில்லாவிடினும் வளரும் இனங்களும் உள. தண்ணீரில்லாத காரணத்தால் நெற்பயிர்கள் அழிந்து விடுவதை நம் நாட்டில் அடிக்கடி கண்டு வருகிறேம். ஆனுல் தசரதனின் ஆட்சியின் கீழ் இந்நிலைமை ஏற்படுவதில்லை. கோசல நாடு செந்நெலங் கழனிக் கான நாடு. அதன் ஓர் புறத்தில் எருமைகள் ஊரில் நின்ற கன்றுகளை நினைத்துத் தம்பாலைச் சுரந்து பெருக்க, அந்தப் பால் வெள்ளம் போல் பாய்வதனுல் செந் நெற்பயிரானது தழைத்தோங்குகிறது. நகர்ப்புறத்தில் வீடுகளிலிருந்து அரிசி கழுவிய கழுநீர் பெருக்கிட்டு ஓடி நெல்லின் நாற்றுக்களை வளர்க்கிறது. இவ்வாறு கோசலநாட்டில் எங்கும் நெற்பயிர்கள் செழித்து வளர்கின்றன.

'ஈரநீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வழிங்கரு மேதிக
ளூரி னின்றகன் றுள்ளிட மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே' (பால : 2 : 25)

'முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கழு கோங்கு படைப்பைபோய்
நட்ட செந்நெலி னூறு வளர்க்குமே' (பால : 2-26)

நெல் ஓர் ஒருபருவப்பயிராகும் (Annual). மூன்று மாதத்தில் விளையும் இனமும் உண்டு; விளைவதற்கு ஒருவருடம் வரை காலம் எடுக்கும் இனமும் உண்டு. ஒவ்வொரு இலையின் அடிப்பாகமும் உறைபோன்று தண்டை மூடியிருக்கும். இலையின் மேற்பகுதி அகலமின்றி நீண்டிருக்கும். கதிர்களைச் சூற்கொண்டு நிற்கும் நெற்செடி, மேற்பகுதி பருத்துக் காணப்படும். இது சீதையின் கணைக்காலுக்கு உவமையாகக் கூறப்படுகிறது (கிட் : 754). பூங்கொத்து கதிர் போல வளர்ந்திருக்கும். இக்கதிர்கள் குதிரையின் தலையை அழகு செய்யும் தூவல் போலத் தோன்றுவதாலேயே குதிரைகளை நெற்கதிர்களோடும் (யுத் : 2271), போரில் அவற்றின் தலைகளைக் கொய்தலை, கதிரை அறுத்தலோடும் (ஆர : 510) கவிஞர் ஒப்பிட்டார் போலும். கதிர்களைத் தக்க பருவத்தில் அறுக்க வேண்டும். கோசலநாட்டில் மள்ளர்கள் நெற்கதிர்களைத் தக்கபருவத்தில் அறுத்து, கடாக்களைக் கொண்டு துவைப்பித்து, நெல்லைக் குவித்துக் களப்பிச்சை முதலியவற்றைக் கொடுத்துவிட்டு, தமக்குரிய பகுதியை வண்டிகளிலேற்றிச் செல்லும் காட்சியைக் கம்பர் மிக இயல்பான முறையில் வர்ணித்திருக்கிறார்.

'எறிதரு மரியின் சும்மை யெடுத்துவா னிட்ட போர்கள்
குறிகொளும் போத்திற் கொல்வார் கொன்றநெற் [குவைகள் செய்வார்

வறியவர்க் குதவிமிக்க விருந்துண மனேயிலுய்ப்பா

னெறிகளும் புதையப் பண்டி நிறைத்துமண் ணெளிய
[லூர்வார்

(பால : 2 : 20)

இதற்கு மாறுன ஓர் காட்சியும் காட்டப்படுகிறது. கோசலநாடே களையிழந்து கிடக்கிறது. இராமன் தாழிருஞ் சடைகள் தாங்கி, தாங்கருந் தவம் மேற்கொள்ளக் கானகம் சென்று விட்டான். அருமைப் புதல்வனின் பிரிவைத் தாள இயலாமல் மன்னனும் ஆவி நீத்தான். இந்நிலையில் மக்கள் தங்களையே மறந்து சோர்ந்திருக்கின்றனர். நெற்பயிர்கள் விளைந்து விட்டன. ஆனுல் பயிர்களை அறுக்க வேண்டும் என்பதையே மறந்து மள்ளர்கள் வாளாவிருக்கின்றனர். இங்ஙனம் அரிகுநரில்லாமையால் சிந்திய தானியங்கள் மாங்கனியின் தேறலினுல் மீண்டும் முளைத்தன.

'ஏய்ந்த கால மிதுவிதற் காமென

ஆய்ந்து மள்ள ரரிகுந ரின்மையால்

பாய்ந்த சூதப் பசுநறுந் தேறலாற்

சாய்ந்தொ சிந்து முளைத்தன சாலியே'

(அயோ : 9 : 21)

நெற்கதிர்கள் பொன்போன்று விளங்கும். களத்தில் நெற்கதிர்களை அரிந்து குவித்திருக்கிறுர்கள். இவ்வாறு மஞ்சள் நிறத்தில் குவிந்து கிடக்கும். நெற்போருக்கு உவமையாகப் பொன்மயமான மேருமலை கூறப்பட்டிருப்பது பொருத்தமே.

'..................................................கழனிப்

போரொடு நிகர்வன பொலன் வரை'

(பால : 2 : 46)

இவ்வாறு நெல்லுக்கு உவமையாகப் பொன்னைக் கூறிய கம்பர் அரிசிக்கு உவமையாக முத்தினைக் குறிப்பிடுகிறுர்.

'நிறைவெண் முத்தினிறத்தரிசிக் குவை'

(பால : 2 : 37)

நெற்கதிரைத் தலையில் சூடும் பழக்கமிருந்ததாகத் தெரிகிறது. இருள் செறிந்து ஒரு வடிவம் எடுத்தது போன்ற கரிய நிறத்தையுடைய குகன் கருமையான குஞ்சியில் நெற்கதிரைச் சூடியவாறு தோற்றமளிக்கிறான்.

'அற்றெடுத் தன்ன குஞ்சியி னுள்கதிர்
நெற்றெடுத்து நெரிந்த புருவத்தான்'

(அயோ : 6 : 32)

வளம் கொழிக்கும் நாடு கோசலநாடு. எல்லா உயிர்களுமே அங்கு உணவு மிகுந்த காரணத்தினால் உணவைவெறுத்துக் கிடக்கின்றன. மயில்கள் நெல்லைக் கொறித்துக் கொண்டிராமல் பொழிலில் உறங்குகின்றன. அதனால் அன்னங்கள் வந்து நெற்போரிடை யுறங்குகின்றன.

'போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந்
[தோகை'

(பால : 2 : 6)

மலைப்பகுதியில் பயிரிடும் நெல்லை ஐவனம் என்றழைத்தனர் (பால : 14 : 34). 'சம்பா' என்ற இனத்தைச் சேர்ந்த செந்நெல்லும் கம்பராமாயணத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. (பால ; 2 : 26)

இதுவன்றி நெல்லில் பல இனங்கள் உள. புது இனங்களைத் தோற்றுவிப்பதற்காகப் பல ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன, தமிழ்நாட்டில் கோயம்புத்தூர், தஞ்சை முதலிய இடங்களிலும், கேரளத்தில் பட்டாம்பியிலும் இது போன்ற ஆய்வு நிலையங்கள் (Paddy breeding station) உள்ளன. இந்த இடங்களில் செய்த ஆய்வுகளின் பயனாகக் குறைந்த

காலத்தில் மிகுதியான விளைவை அளிக்கும் பல புது இனங்களும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. கேரளத்தில் மிக அண்மையில் தோற்றுவிக்கப்பட்ட புதிய இனம் நெல் IR-8 என்பதாகும்.

---

## பனை

Palmaceae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரம் Borassus Flabellifer என்றழைக்கப்படுகிறது. இதை ஆங்கிலத்தில் Palmyra Palm என்பர். இது சமவெளியிலன்றி குன்றுகளின் சரிவுகளிலும், கடல் மட்டத்திலிருந்து ஏறத்தாழ 2500 அடி உயரம் வரையிலும் வளரும்.

பனையிலிருந்து இறக்கும் புளிப்பேறாத இனிப்பான பதநீர் அல்லது பனஞ்சாறு அருந்துவோருக்கு இளைப்பை ஆற்றிக் குளிர்ச்சியைத் தரக்கூடியது. பனையின் புளிப்பேறிய சாறு தான் கள் எனப்படுகிறது. பனங்கள் பற்றி அகப்பாடலொன்று சுட்டுகிறது.

'பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளின்
உகுவா ரருந்து மகிழ்பியங்கு நடையொடு
தீம்பெரும் பழனமுழக்கி அயலது
ஆம்பன் மெல்லடை யொடுங்கும் ஊர'

(அகம் : 256)

பதநீரிலிருந்து பனைவெல்லம் செய்யப்படுகிறது. பனைவெல்லம் காய்ச்சுதல் மிகப்பழைய காலம் முதல் நிகழ்ந்து வரும் ஒரு குடிசைத் தொழிலாகும்.

பனைமரம் உயரமாக, நேராகத் தூண்போல வளரும் இயல்புடையது. சாதாரணமாக 60-80 அடி உயரமும், அரிதாக 100 அடி உயரமும் வளரும். இவ்வாறு நீண்டு வளரும்

பனையை இராமனின் நீண்ட கைகளுக்கு உவமையாகக் கூறுகி ஞர் கம்பர்.

'பனையி னீள்கரம் பற்றிய கையினுள்'

(அயோ : 4 : 230)

வானரங்களின் கைகட்கும் உவமையாகப் பனை கூறப்பட்டுள் ளது.

'பனைக்கை வன்குரங் கின்படர்சேனை' (யுத் : 740)
யானையின் நெடுங்கரத்திற்கு ஒப்புமையாகப் பனையைக் கூறு வது, காவியம் முழுவதும் பரவலாகக் காணப்படும் ஒரு உவமை யாகும்.

'பனையவா நெடுங்கரப் பருமயானை'

(அயோ : 1 : 85)

இத்தகைய நெடுங்கரத்தையுடைய ஆண்யானைகள், வானுலகி லுள்ள கற்பகமரங்களின் கிளைகளை முறித்து, தங்கள் பெண் யானைக்கு அளித்ததில் வியப்புமுண்டோ.

'உம்பர்வா னகத்து நின்றவொளிதரு தருவி னோங்கும்
கொம்புகள் பனைக்கை நீட்டிக் குழையொடு மொடிந்துக் [கோட்டுத்
தும்பிக ளுயிரே யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும்'
(பால : 14 : 32)

பனையின் இலைகள் (மட்டை) பெரியவை; விசிறி போன்ற அமைப்புடையவை. ஒரே வேளையில் ஒருமரத்தில் 20-40 மட்டைகள் காணப்படும். தலைவன் தான் விரும்பும் தலைவியை மணம் முடிப்பதற்கு இடையூறுகள் ஏதேனும் நேரிட்டால் மடலேறுகிருன். இவ்வாறு மடலேறுபவன் பனை மடலால் செய்த குதிரை மீது ஏறிவருவதைச் சங்கப்பாடல்கள் கூறுகின்றன.

'ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து' (கலி : 139)

பனைமரத்தின் மடல்கள் ஒடிந்து வீழ்ந்தபின் அதன் மீதிப் பாகங்கள் தண்டுடன் ஒட்டிக் கொண்டிருக்கும். இவை சிறும்பு எனப்படும். குகனின் முன்னங்கையில் நெருங்கி வளர்ந்துள்ள வலிய மயிர்களை. பனையின் சிறும்புடன் ஒப்பிட்டுப் பார்க்கின்றார் கம்பர்.

'பெண்ணை வன்செறும் பிற்பிறங்கிச் செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையான்'

(அயோ : 6 : 33)

பண்டைக் காலத்தில், பனையோலையை ஒழுங்காக அறுத்து, உலர்த்தி எழுதுவதற்குப் பயன்படுத்தினார்கள். முற்காலத்து அரிய நூல்கள் பல பனையோலைச் சுவடிகளில் எழுதப்பட்டவையே சனக மன்னன் இராமனின் வில்வித்தையின் திறத்தையெல்லாம் பனை ஓலையில் எழுதி, தசரதனுக்கு விடுக்கின்றான்.

'இலைமுகப் படத்தவளெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில்......................'

(பால : 13 : 4)

ஆண்பூக்களும் பெண்பூக்களும் தனித்தனி மரங்களில் உண்டாகின்றன. பூக்கள் மிகப் பெரிய பாளைகளால் பொதியப் பெற்றிருக்கும். தமிழ்நாட்டு மூவேந்தர்களுள் சேரனுக்குரியதாகப் பனம்பூமாலை கூறப்படுகிறது. சேரர்க்குரிய கண்ணியும் தாரும் தனக்குரியவையாகக் கொண்ட அதியமான் நெடுமானஞ்சி பனம்பூமாலையை அணிந்து காட்சியளிப்பதை ஔவையார் பாடுகிறார் (புறம் : 99)

பனைமரத்தின் கனி பெரிதாகவும், உருண்டையாகவும் இருக்கும். இது இளையதாக இருக்கும்போது பச்சையாகவும், முதிரும்போது செந்நிறமாகவோ, கருநிறமாகவோ மாறும். பொதுவாக ஒரு கனியில் மூன்று கொட்டைகள் இருக்கும்.

இளங்கனியிலுள்ள மென்மையான சதைப்பகுதி நுங்கு எனப் படுகிறது. இது மிகக் குளிர்ச்சியும் சுவையும் உடையது; எனவே அனைவரும் விரும்பி உண்பர். இவ்வாறு உண்பதற் காகச் சதையை எடுத்தபின், துளையுடன் காட்சியளிக்கும் பனங்காயைக் கம்பர் தம் காவியத்தில் ஒரு சிறந்த உவமை யாகக் கையாள்கிறார். இலக்குவனால் அங்கங்கள் சிதைக்கப் பட்ட சூர்ப்பணகையின் துளைபட்ட மூக்கினை வர்ணிக்கும் இடத்தில் தான் இந்த உவமை பொருந்த அமைகின்றது.

'தோட்ட நுங்கிற் றொளையுறு மூக்கினைக்
காட்டெ ழுவெழுந்தான் ......................'

(ஆர : 369)

பனங்கொட்டை முளைக்கும் போது விதையில் உள்ள ஒற்றை விதையிலை (cotyledon) நீண்டு தரைக்குள் வளர்ந்து செல்லும். முளைத்து 3, 4 மாதங்களுக்குப்பின் வெட்டியெ டுத்து உணவாகப் பயன்படுத்தும் இது பனங்கிழங்கு எனப் படுகிறது.

அன்றில் பனையைத் தன் உறைவிடமாகக் கொண்டி ருந்தது என்பதை,

'பராரைப் பெண்ணைச் சேக்குங் கூர்வாய்
ஒருதனி அன்றில் உயவுக்குரல் கடைஇய'

(அகம் : 305)

என்ற அகப்பாடலால் அறியலாம். சீதாபிராட்டி பனைமே லுறையும் அன்றிற்பறவையை நோக்கி, இராமனுடன் கூடா மல் தனியே இருக்கும் தன்னை வருத்துவது முறையன்று என்று கூறிப்புலம்பும் காட்சியைக் கம்பர் காட்டுகிறார்.

'கனையேழ் கடல்போல் கருநா ழிகைதான்
வினையேன் வினையால் விடியா விடினீ
தனியே பறவாய் தகவே துமிலாய்
பனைமே லுறைவாய் பழிபூ ணுதியோ'

(பால : 21 : 5)

பனைமரம் போர்க்கருவியாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை,

‘சூலப்படை யானிடை வந்து தொடர்ந்தான்
ஆலத்தினும் வெய்யவ னங்கத னங்கோர்
தாலப்பனை கைக்கொடு சென்று தடுந்தான்
நீலக்கிரி மேனிமிர் பொற்கிரி நேர்வான்’

(யுத் : 1909)

என்ற பாடலால் உணரலாம்.

---

# முஞ்சிப் புல்

Gramineae என்னும் புற்குடும்பருதைச் சேர்ந்த இது Reedy Sugar Cane என்றழைக்கப்படுகிறது. தாவரவியார் இதற்கு அளித்துள்ள பெயர் Saccharum Arundinaceum என்பதாகும். இந்தியாவிலுள்ள சமநிலங்களிலும், குன்றின் சரிவுகளிலும், இலங்கையிலும் இது மிகுதியாகக் காணப்படுகிறது. தண்டு மிக நீளமாக வளரும். இலைகள் 3-5 அடி நீளமுடையவை. பூங்கொத்து நீண்டு, சிறு மயிர்க்ளால் மூடப்பட்டிருக்கும். கம்பன் காவியத்தில் இப்புல்லைப் பற்றிய குறிப்பு ஒரு இடத்தில் மட்டுமே வருகிறது. திருமால் கொண்ட வாமன உருவத்தை வர்ணிக்கிறார் கம்பர். வாமனன் முஞ்சிப்புல்லாலாகிய அரைநாணை அணிந்திருந்ததாகக் கூறப்படுகிறது.

‘முப்புரி நூலினன் முஞ்சியன்..........’

(பால : 8 : 22)

---

# மூங்கில்

Gramineae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த Bambusa Arundinaceae என்பது தான் Bamboo என்று ஆங்கிலத்திலும், மூங்கில் என்று தமிழிலும் அழைக்கப்படுகிறது. இதுவன்றி, மூங்கிலில் பல்வேறு சாதிகளும் இனங்களும் உள. கம்பர் இதனை அமை, கழை, காம்பு, கிளை, பணை, முளை, மூங்கில், வரை, வெதிர், வேணு, வேய், வேழம் என்ற பெயர்களால் உணர்த்துகிறார்.

மூங்கில்கள் பருவமழைக்காடுகளில் தான் மிக நன்றாகச் செழித்து வளர்கின்றன. இவ்வாறு காட்டுப்பகுதிகளில் மூங்கில் மிகுதியாகக் காணப்படுவதால் தான் 'வரையாரும் கான்' (ஆர : 1159) என்று கூறுகிறார் கம்பர். மிதவெப்பப் பகுதிகளில் இவை தாழ்வான புதர்ச்செடிகளாகச் சிறுத்து விடுகின்றன. மிக உயரமான இடங்களில் சாதாரணப் புல்லைப் போலவே இருக்கின்றன. இமயத்தில், நீர் நன்றாக வடிந்து போகக் கூடிய அடிவாரப் பகுதிகளில் நெடுகிலும் செழிப்பான மூங்கிற்காடுகள் மிகுந்து வளர்ந்திருக்கின்றன.

மூங்கிலின் தண்டு கணுக்கள் உள்ளவையாக வளர்ந்திருக்கும். இந்தக் கணுக்கள் 'கால்' (culm) எனப்படும். இவை சாதாரணமாக வட்டமாகத் திரண்டு, வழுவழுப்பாக இருக்கும். இத்தகைய மூங்கிலை மகளிர் தோளுக்கு ஒப்பிட்டுக் கூறுவது மரபாகக் கையாளப்பட்டு வரும் உவமையாகும்,

'.................. வேயொத்த தோளினர்'

(பால : 16 : 6)

இந்த உவமையை அடிப்படையாக வைத்துக் கம்பர் ஒரு முன்னுணர்த்தல் பகுதியையும் அமைத்துத் தருகிறார். இராமனுக்கு அன்று முடிசூட்டுவிழா நடைபெறப் போகிறது. மக்கள் அனைவரும் இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருக்கின்றனர்.

இந்நிலையில், கைகேயி அழைத்ததனால் இராமன் தேரிலேறி, கைகேயியின் மாளிகை நோக்கிச் செல்கிறான். வழியெங்கும் அவனைக் காணும் பொருட்டு மகளிர் திரண்டு நிற்கின்றனர். இவ்வாறு மாதரார் மொய்த்துச் சூழ்ந்து நிற்க, அவர்களுக்கிடையே இராமன் செல்வது, இனி அவன் கானகம் போகப் போகின்றானாதலால் அதற்கு முன்னமே மகளிர் தோள்களாகிய மூங்கில்கள் நிறைந்த கானிற் சென்றது போன்றிருக்கின்றதாம். இராமன் இனி கைகேயின் சொல்லால் உண்மையான மூங்கில்கள் நிறைந்த காட்டிற்குச் செல்வான் என்பதை இப் பகுதி முன்னுணர்த்துகின்றது.

'பண்ணெனுஞ் சொல்லி னார்தந் தோளெனும் பணைத்த [வேயும்.
கண்ணெனுங் கால வேலு மிடைநெடுங் கானம் புக்கான்'
(அயோ : 3 : 84)

இவ்வாறு மகளிர் தோள்களாகிய மூங்கிற் காட்டிடையே இராமன் சென்றதைக் கூறின கம்பர், உண்மையான மூங்கில்கள் நிறைந்த கானிற்கு அவன் சென்றதையும் காட்டுகிறார்.

'வேயுயர் கானிற் றானுந் தம்பியு மிதிலைப் பொன்னும்
போயின னென்றான்..............................................'
(அயோ : 5 : 60)

மூங்கில் இலைக்குப் பெரிய உறை போன்ற இலைக்காம்படியும், சிறிய காம்பும் உண்டு. சிறு கதிர்களாக அமைந்திருக்கும் பூக்கள் பச்சை நிறமாக இருக்கும்.

சில இன மூங்கில்கள் மூன்று ஆண்டுகளுக்கொரு முறை பூத்துக் கொண்டிருக்கும். வேறு சில இனங்கள் ஆண்டு தோறும் பூக்கும். ஆனால் பெரும்பாலான இனங்கள் பல ஆண்டுகள் வாழ்ந்திருந்து ஒரே முறை பூத்துப் பிறகு சிறிது காலத்திற்குள் பட்டுப் போகும். நண்டு, வாழை போன்றவை எவ்வாறு தாங்கொண்ட சூலாலேயே அழிகின்றனவோ அவ்வாறே மூங்கிலும் ஒரே முறை பூத்து, கனிகளைத் (தானியம்)

தோற்றுவித்து அவற்ருலேயே அழிகின்றது. எனவே, தான் பெற்ற மக்களாலேயே உயிர் துறக்க நேரிட்ட தசரதனை மூங்கிலோடு ஒப்பிட்டுப் பேசுகிருர் கம்பர் (அயோ : 5 : 66)

மூங்கிலில் அரிசி போன்ற தானியங்கள் உண்டாகின்றன. இந்த மூங்கிலரிசியை முனிவர்கள் பயன்படுத்தியிருக்கின்றனர். சித்திரகூட மலையில் அஃறிணை உயிர்களாகிய யானைகளும் குரங்குகளும் நல்லறிவு பெற்று, முனிவர்களுக்கு அருவிநீரையும் காய்கனிகளையும் கொண்டு வந்து கொடுத்து உதவுகின்றன. இதைக் கண்டு, சிறு கிள்ளைகள் மூங்கில் அரிசியைத் தவசியருக்கு அன்புடன் அளித்து மகிழ்கின்றன.

'மெய்வணக்குறு வேயின மீன்றமெல் லரிசி
பொய்வணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணய்'
(அயோ : 8 : 34)

மூங்கில் அரிசியைப் பஞ்ச காலத்தில் சமைத்து உண்பர். மூங்கில் கூட்டமாகப் பூத்தால் பஞ்சம் உண்டாகும் என்பது ஒரு நம்பிக்கை.

வெட்டுமரத்தை (Timber) எதற்கெல்லாம் பயன்படுத்துகிறோமோ அதற்கெல்லாம் மூங்கிலைப் பயன்படுத்தலாம். படகு, தெப்பம், பாய்மரம் முதலியனவற்றைக் கட்ட மூங்கிலைப் பயன்படுத்துகின்றனர். மூங்கிலினுல் அமைத்த தெப்பம் பற்றி கம்பன் காவியம் குறிக்கின்றது. யமுனை நதியைக் கடப்பதற்காக இலக்குவன் மூங்கில் கழிகளை வெட்டி, தெப்பம் அமைத்ததை வனம்புகு படலத்தில் காண்கிறோம் (அயோ : 7 : 36).

மூங்கிலில் பல துளைகளிட்டு, இனிய இசை எழுப்பும் குழலாகப் பயன்படுத்தினர். இத்தகைய வேய்ங்குழலினிடத்து உண்டாகும். மென்மையான இசைக்கு ஏற்ப மகளிர் பாடுகின்றனர்.

‘தொளையுறு புழைவேய் தூங்கிசைக் கானம்
துயலுரு தொருநிலை தொடர
இளையவர் மிடறு மின்னிலையியக்க’ (சுந் : 417)

முனிவர்கள் மூங்கிலினாலாய திரிதண்டத்தை ஏந்தியிருப்பதால் அவர்களை ‘வெதிர் கொள் கோலினர்’ (அயோ : 6 : 12) என்றழைக்கிறார் கம்பர்.

இவ்வாறு பல முறைகளிலும் பயன்பட்ட மூங்கிலையே சுவராக வைத்து, பர்ணசாலையை அமைக்கிறான் இலக்குவன். அதே பர்ணசாலையைச் சூழ இளங்கழைகளால் வேலியமைத்தான்.

‘எயிலிளங் கழைகளா லியற்றி’ (அயோ : 8 : 49)

வெப்பமிகுதியினால் நன்றாகக் காய்ந்து இருக்கும் மூங்கில்கள் ஒன்றோடொன்று உராயும் போது நெருப்பு உண்டாவதுண்டு. இவ்வாறு உண்டாகும் நெருப்பு அருகிலுள்ள மூங்கில்களில் பற்றிக் கொள்ள மிக எளிதில் மூங்கிற்காடு முழுவதுமே அழிந்துவிடும். இவ்வாறு மூங்கிற்காடு முழுவதும் பற்றியெரிவதையும், வணிகர்கள் கூட்டமாக அலறி ஓடுவதையும் அகநானூற்றுப் பாடலொன்றில் மதுரைச் செங்கண்ணனார் மிக அழகாக வர்ணித்திருக்கிறார் (அகம் : 39 : 6-12) மூங்கிற்காட்டில் தோன்றும் தீயானது எவ்வாறு அக்காடு முழுவதுமே அழிவதற்குக் காரணமாக அமைகின்றதோ அது போன்று சூர்ப்பணகையும் அரக்கர் குலம் முழுவதுமே அழிவதற்குக் காரணமாக அமைவதால் அவளை அத்தீயுடன் ஒப்பிட்டுக் கூறியிருப்பது ஏற்புடைத்தே.

‘வான்றொடர் மூங்கில் தந்த
வயங்கு வெந்தீய தென்னத்
தான்றொடர் குலத்தை யெல்லாம்
தொலைக்குமா சமைந்துநின்றாள்’

(ஆர் : 427)

இவ்வாறு மூங்சில் பற்றி எரியும் காட்சியைக் கம்பர் பல இடங்களில் சுட்டுகிருர். மூங்கில்களையுடைய உயர்ந்த மலையை ஒத்த அரக்கர்கள் (யுத்: 1057) அழிந்தது, மூங்கிற் காடு அழிந்ததை யொத்திருந்தது என்று கூறியிருப்பது சிறப்பாக அமைந்துள்ளது.

'முக்கணுன் படையை மூட்டி விடுதலு மூங்கிற்
[காட்டிற்
புக்கதோ ரூழித் தீயிற் புறத்திஞே ருருவும் போகா
தக்கணத் தெரிந்து வீழ்ந்த தரக்கர்தஞ் சேனை யாழி'
(யுத் : 2532)

இவ்வாறு போர்க்களத்தினை எரிகின்ற மூங்கிற்காட்டோடு ஒப்பிட்டுக் கூறும் தன்மை கம்பன் காவியத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இங்ஙனம் புறவெப்பத்தை உணர்த்த மட்டுமன்றி அகவெப்பத்தை, மன எழுச்சியைக் காட்டவும் கம்பர் எரியும் மூங்கிற்காட்டை உவமையாக்குகிருர். அம்புகள் தைக்சப் பெற்றதால் வெகுண்ட சுக்கிரீவனின் மனதைத் தான் கம்பர் எரியும் மூங்கிற்காடோடு ஒப்பிட்டுள்ளார்.

'வெதிர்நெடுங் கான மென்ன
வேகின்ற மனத்தன் மெய்யன்' (யுத் : 2136)

மூங்கிலின் கணுக்களிடையே உள்ள நீர் வற்றிப்போக அங்குச் சிறு கற்கள் உண்டாகும். இவை, பல நிறங்களைத் தோற்றுவிக்கும் ஒப்பல் (Opal - a precious stone of a milky hue, remarkable for its changing colours) எனப்படும் கற்கள் போன்று இருக்கும் இவை மூங்கில் முத்து எனப்படும். இம் முத்துக்கள் முக்கியமாக Silica ($SiO_2$) என்னும் பொருளால் ஆனவை. இந்த மூங்கில் முத்துக்களைப் பற்றிக் கம்பர் பல இடங்களில் குறிப்பிடுகிருர். மாணிக்கம் போன்று சிவந்த கற்பாறைகளில் வேயினம் சொரிந்த முத்துக்கள், செக்கர் வானத்துத் தாரகைகள் கண்சிமிட்டுவது போன்று ஒளிவீசுவதாகக் கூறும் பகுதி கற்போரை மகிழ்விக்கின்றது.

'மடந்தை மார்களிற் றிலதமே மணிநிறத் திணிகல்
தொடர்ந்த பாறையில் வேயினஞ் சொரிகதிர் முத்தம்
இடந்தொ றுங்கிடந் திமைப்பன வெக்கிளஞ் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்'

(அயோ : 8 : 27)

---

# வஞ்சிக்கொடி

இலக்கியங்களால் போற்றப்படும் வஞ்சிக்கொடி என்பதே தற்போது பிரம்பு என்று அழைக்கப்படுகிறது என்று கூறுவர். Palmae என்னும் குடும்பத்தைச் சேர்ந்த இதனை ஆங்கிலத்தில் cane palm என்பர். இதன் தாவரவியற்பெயர் Calamus Rotang என்பதாகும்.

இதன் தண்டு மிகவும் மெலிந்த தன்மையுடையது (Slender). இத்தகைய வஞ்சிக்கொடிகள் காற்றில் அசைந்தாடுவது மிக அழகாக இருக்கும். மகளிர் இடை ஒல்கி ஒசிந்து வளரும் தன்மை பற்றி வஞ்சிக்கொடியோடு உவமிக்கப்படுகிறது. கம்பர், மகளிர் இடைக்கு உவமையாகக் கூறுவதற்காகவே வஞ்சிக்கொடியைத் தம் காவியத்துள் புகுத்தியுள்ளார்.

'வஞ்சி போன் மருங்குலார்' (பால : 15 : 7)

இவ்வாறு மகளிர் இடையாக மட்டுமன்றி ஆற்றின் இடையாகவும் வஞ்சிக்கொடியை உவமிக்கிறார். ஒரு பெண்ணாக உருவகிக்கப் பெற்ற சோணநதியின் இடையாக அமைகிறது வஞ்சிக்கொடி.

'... ........................நாகிள வஞ்சியா மருங்குல்'

(பால : 9 : 1)

கங்கையில் நீராடும் பொருட்டு மூழ்கிய சீதையின் இடையழகுக்குத் தோற்று வஞ்சிக்கொடிகள் நீரில் மறைந்தன என்று கூறி, தம் காப்பியத் தலைவியின் அழகை நம்முன் காட்டுகிறார் கம்பர். (அயோ : 6 : 20)

---

# வாழை

முக்கனிகளில் முதன்மையான இடத்தைப் பெறுவது வாழைத் தீங்கனியே. வாழையின் கனி மட்டுமன்றி அதன் பெரும்பாலான பகுதிகளும் மக்களுக்குப் பயன்படுகின்றன எனலாம். வாழையின் காய், கனி, வாழைத்தண்டு, பூ, இலை, காய்ந்த இலைச்சருகு, வாழைப்பட்டை, நார் போன்ற பல பகுதிகளையும் நாம் இன்று பல்வேறு வகைகளில் பயன்படுத்துகிறோம்.

இத்தகு சிறப்புக்களையுடைய வாழை Scitamineae என்னும் குடும்பத்தில், Musaceae என்னும் உட்குடும்பத்தைச் சேர்ந்தது. வாழையில் பல இனங்கள் உள. அவற்றுள் Musa Paradisiaca என்பது தான் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது

வாழை பெரிய உருவில் வளரும் ஒரு செடியாகும் (Herb). 10 முதல் 20 அடி உயரம் வரை வளரும். இதன் தண்டு மண்ணிற்குள் வளரும் மட்டத் தண்டுக் கிழங்காகும் (Rhizome). மண்ணிற்கு மேல் பச்சையாகக் காண்பது உண்மையான தண்டன்று. இலைகளின் அடிகள் (leaf bases) ஒன்றையொன்று தழுவி அமைந்திருக்கும் போலித்தண்டுதான் (Pseudo stem) மண்ணிற்கு மேலே காணப்படுகிறது. இவ்வாறு இலையடிகள் ஒன்று சேர்ந்து தண்டு போன்று இருப்பதால் இப்பகுதி கண்ணைக் கவரும் பச்சை நிறத்தில் இருக்கும்.

அதனால்தான் கம்பர், இராவணன் நாட்டு வாழைகள் மரகத மயமானவை என்று கூறுகிறார் (ஆர : 649).

வாழையை மகளிர் தொடைக்கு ஒப்பாகக் கூறுவது மரபு உவமை. இந்த உவமையைக் கம்பராமாயணத்திலும் பல இடங்களிலும் காணலாம்

'இருகுறங்கு பிறங்கிய வாழையிற்
குருகு றங்கும் .............................' (கிட் : 907)

பூங்கொத்து மண்ணினடியிலுள்ள உண்மையான தண்டிலிருந்து புறப்பட்டு, போலித் தண்டின் நடுவாக வளர்ந்து வெளியே வருகிறது. பூக்காம்பிலைகளாகிய (bracts) மடல்களின் கக்கங்களில் பூக்கள் தோன்றும். இம்மடல்கள் பெரிதாகவும், படகுவடிவில் கருஞ்சிவப்பு நிறமுடையதாகவும் இருக்கும். பூங்கொத்து விரியாத நிலையில் இந்த மடல்கள் ஒன்றையொன்று மறைத்துக் கொண்டு கூம்பியிருப்பது மிக அழகாக இருக்கும். வாழைமுகையின் அழகால் கவரப்பட்ட தமிழ்ப் பெண்கள் அது போன்று தங்கள் கூந்தலை அழகு செய்தனர் என்று நற்றிணை நவில்கின்றது.

'வாழை ஈன்ற ஐயேந்து கொழுமுகை
மெல்லியல் மகளிர் ஓதியன்ன' (நற் : 225)

வாழை மலர்கள் உதிர்ந்த பின், பூக்காம்பில் பூக்காம்பிலைகள் இருந்த இடங்கள் வளையங்கள் போன்று காணப்படும். இத்தகு பூக்காம்பினை மானின் முறுக்கேறிய கொம்பிற்கு உவமையாகக் கூறியிருக்கும் சங்கப் புலவர்களின் திறம் வியத்தற்குரியதே!

'குவி முகை
வாழைவான்பூ ஊழுறுபு உதிர்ந்த
ஒழி குலையன்ன திரிமருப் பேறு' (அகம் : 134)

வாழைப் பழங்களில் பெரும்பாலான இனங்களும் பக்குவமாகக் கனிந்தவுடன் தோலை உரித்துவிட்டு நேரே உண்ணத் தக்கவை. Musa Paradisiaca போன்ற இத்தகைய இனங்களை பொதுவாக Plantain என்ற ஆங்கிலப் பெயரால் அழைப்பர். Banana என்றழைக்கப்படும் Musa Sapientum போன்ற இனங்களின் கனிகளை வேகவைத்தோ சுட்டோ உண்ணும்போது தான் மிகுந்த சுவையுடையதாக இருக்கும்.

வாழை ஈரம் மிக்கதும், மழை மிகப் பெய்வதுமான வெப்பப் பகுதிகளில் செழித்து வளர்கிறது. வாழை மரத்தின் அடியிலுள்ள கிழங்கிலிருந்து வளரும் சிறு கன்றுகளை வெட்டியெடுத்து நட்டுப் பயிர் செய்வர்.

மிகுந்த இனிமையும் சுவையும் உடைய வாழைக்கனி தான் முக்கனிகளில் முதன்மையானது என்பதை முன்பே கண்டோம். பெரும் முனிவனை இருசிய சிருங்கனுக்கு இளம் பெண்கள் வாழைக்கனியை அன்புடன் அளித்ததைக் கம்பர் கூறுகிறார் (பால : 5 : 42)

வாழைக்கனி மிக மென்மையானது; பல் முளைக்காத குழந்தைகளும், பற்களை இழந்த முதியோரும் கூட வாழைப் பழத்தை மிக எளிதில் உண்கின்றனர். இத்தகைய மென்மையான கனியினுள் ஊசியை ஏற்றுவதில் கடினமுண்டோ? அதனால் தான் முயற்சி இன்மையும் விரைவும் உடைய செயல்களை விளக்குவதற்கு 'வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல்' என்ற பழமொழியே ஏற்பட்டது. இப்பழமொழியும் கவிச் சக்கரவர்த்தியின் காவியத்தில் இடம் பெற்று, சிறப்பினை அடைகிறது. நீர், நெருப்பு, காற்று, பூமி ஆகிய நான்கு பூதங்களின் வலிமையும் ஒருசேரத் தன்னிடம் அமையப் பெற்றவன் வாலி. இராகவன் விடுத்த அம்பானது இத்தகு வலிமை பொருந்திய வாலியின் மார்பினுள், வாழைப்பழத்தை முழுவதும் எளிதில் ஊடுருவிச் செல்லும் ஊசியைப் போல் சென்றது கண்டு மேலே ஒன்றும் சொல்ல இயலாமல் வாயடைத்து நிற்கின்றார் ஆசிரியர்.

'காரும் வார்சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேருஞ் சூசியிற் சென்றது நின்றதென் செப்ப
நீரு நீர்தரு நெருப்பும்வன் காற்றுங்கீழ் நிரந்த
பாருஞ் சார்வலி படைத்தவ னுரத்தைப் பகழி'

(இட்: 289)

யானையின் வெண்தந்தத்திற்கு உவமையாக வாழைத் தண்டினைக் கூறுகிறார் கம்பர். பிரகலாதனைக் கொல்லும் பொருட்டு, இரணியனால் ஏவப்பட்ட யானை தன் மருப்புக்களை அவன் மார்பில் செலுத்த, அவை வாழையின் தண்டு போல ஒடிந்து வீழ்கின்றனவாம். இந்த உவமை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

'வீரத் தின்டிறன் மார்பினில் வெண்கோ
டாரக் குத்தி யழுத்திய யானை
வாரத் தண்குலை வாழை மடல்சூழ்
ஈரத் தண்டென விற்றன வெல்லாம்'

(யுத் : 226)

வாழை ஒரே முறைதான் குலைவிடும். குலை வளர்ந்து, காய்கள் முற்றியதோடு மரம் பட்டுப் போகின்றது. அன்புடன் ஈன்று உணவூட்டி வளர்த்த காய்களே தாய் மரத்திற்குக் கூற்றமாக அமைகின்றன. இக்கருத்தைத் தான் நான்மணிக்கடிகை 'மெல்லிலை வாழைக்குத்தான் ஈன்ற காய் கூற்றம்' (நான்மணி: 84) என்று கூறுகிறது. இத்தகைய வாழையின் நிலையைத் தசரதன் அடைந்தது கண்டு புலம்புகிறாள் கோசலை. உலகத்தில் நோயால் இறத்தல் மனித இயற்கை. மன்னவர்க்கோ முனைமுகத்துச் சென்று படைக்கலங்களால் இறத்தல் சிறப்பு. இவ்வாறின்றி தன் மக்கள் (தந்தையைப் பிரிந்த காரணத்தால் இராமனும், இராமன் பிரிவிற்குக் காரணமானதால் பரதனும்) மூலமாக மாமன்னனுக்கு மரணம் நேர்கின்றது. இந்நிலையில், தான் ஈன்ற காயே கூற்ற

மாக அமையும் வாழைக்கும், பெற்ற புதல்வர்களே கூற்ற மாக அமையும் தசரதனுக்கும் வேறுபாடுண்டோ என்று கோசலை கதறும் பகுதி நம்மையும் கண்கலங்கச் சேய்கிறது.

'நோயும் மின்றி நோன்கதிர் வாள்வே லிவை யின்றி
மாயுந் தன்மை மக்களி னுலோ மறமன்னன்
ஏயுஞ் ஞெண்டு மிப்பியு மாகங் கனிவாழை
வேயும் போன்று னென்று மயங்கா விழுகின்றாள்'

(அயோ : 5 : 66)

நம் நாட்டில் விழா நடைபெறும் இடங்களிலும். திரு மண வீடுகளிலும் குலையுடன் கூடிய வாழை மரங்களை நாட்டி அலங்கரிப்பதை அன்றாடம் காண்கிறோம். இந்த வழக் கம் கம்பன் காலத்திலும் நிலவியுள்ளது, மிதிலையில் உள்ள ஆடவரும் மகளிரும் இராமனுக்கும் சீதாபிராட்டியாருக்கும் நடைப் பெறப் போகும் திருமணத்திற்காக நகரெங்கும் வாழை மரங்களை நாட்டி அலங்கரிக்கின்றனர்.

'அன்னமென் னடையாரும் மழவிடை யனையாரும்
கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்'

(பால : 21 : 23)

கம்பர் 'அரம்பை' என்ற சொல்லாலும் வாழையைக் குறிக்கின்றார்.

'அரம்பையென் றளக மாதர்
குறங்கினுக் கமைந்தவொப்பின்'

(கிட் : 755)

---

# மூடாவிதைத் தாவரங்கள் (Gymnosperms)

இத்தாவரங்களில் விதைகள் கனியால் மூடப்பெருமல் திறந்தே இருக்கும். மூடுவிதைத் தாவரங்களைப் போன்று அமைப்பு முறையில் வளர்ச்சியடையாதவை இவை. இவற்றில் மலர்கள் ஒருபாலின (unisexual) இப்பிரிவைச் சேர்ந்த தேவ் தாரம் என்ற ஒரு மரத்தை மட்டுமே கம்பர் குறித்துள்ளார்.

---

# தேவதாரம்

இம்மரம் வடமேற்கு இமயத்தில் காஷ்மீரம் முதல் கார் வால் வரையிலுமுள்ள பகுதிகளிலும் ஆப்கானிஸ்தானம், பலூச்சிஸ்தானம் ஆகிய நாடுகளிலும் வளர்கிறது. Pinaceae என்னும் ஊசியிலைக் குடும்பத்தைச் சேர்ந்த இதன் பெயர் Cedrus Deodara என்பதாகும்.

கம்பரால் ஒரு இடத்தில் மட்டுமே இம்மரம் சுட்டப்படு கிறது. இந்த இடத்தில், யானைகள் தேவதார மரங்களில் கட்டப்பட்டிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

'கோவையார் வட கொழுங்குவ டொடி தர நிவந்த
.................................................................
தேவதாரத்தும் சந்தினும் பூட்டின லெமா'
(பால : 14 : 1)

இவ்வாறு கட்டப்பட்ட யானைகள் ஆகாயத்தையளாவிய ஆல மரத்தினது செழித்த கிளைகள் ஒடியும்படி உயர்ந்தவை என்று உரைக்கிறுர் கம்பர். இத்தகு பெரும் யானைகளைக் கட்டுவ தற்கு தேவதார மரங்களைத் தேர்ந்தெடுத்தது பொருத்தமாக உள்ளது. ஏனெனில் இம்மரங்கள் மிகப் பெரியவையாய் ஓங்கி வளரும். தேவதாருவினும் பேரழகும் கம்பீரமும் வாய்ந்த மரம் வேறொன்றில்லை என்று காம்பிள் என்ற தாவரவியல் அறி ஞர் கருதுவதே இதற்குத் தக்க சான்றாகும்.

# பூவாத தாவரங்கள் (Cryptogams)

முழுநிலை வளர்ச்சி பெறுதவையும், மிக எளிய அமைப்பு முறையும் உடைய தாவரங்கள் இப்பகுப்புக்குள் அடங்கும். இத்தாவரங்கள் மலர்களையோ விதைகளையோ தோற்றுவிப்பதில்லை. இவற்றுள், தகட்டுடலிகள் (Thallophytes) என்ற உட்பிரிவைச் சேர்ந்த தாவரங்களான பாசி, காளான் என்பவை பற்றிக் கம்பராமாயணம் கூறுகின்றது.

---

## பாசி (Algae)

இவை மிக எளிய அமைப்புடைய தாவரங்கள். இவற்றின் உடலில் தண்டு, இலை, பூ என்று சாதாரணத்தாவரங்களில் காணப்படும் உறுப்பு வேறுபாடுகள் இருப்பதில்லை. ஒளிச்சேர்க்கைக்குரிய பச்சையம் (Chlorophyll) என்ற பொருள் பாசிகளில் உள்ளதால் இவை தமக்கு வேண்டிய உணவைத் தாமே தயாரித்துக்கொள்ளும் தன்னுணவு உயிர்களாகும் (Autotrophic).

பாசிகளில் மிகவும் வேறுபட்ட வடிவங்களுள்ள வகைகள் உள. அவற்றுள் சில பெருக்காடியினுல் (Microscope) மட்டுமே காணத்தக்க நுண்மையானவை. (எ-டு) Chlamydomonas. மற்றும் சில மிகப்பெரிய உடலுள்ள கடற்பாசிகளாகும்.

இவை உலகம் முழுவதுமே பரவியிருக்கின்றன. கட்டி நிற்கும் நீரிலும், ஓடும் நீரிலும், நன்னீரிலும், உப்பு நீரிலும், கடலிலும், நிலத்திலும், மண்ணின் மேலும், மண்ணின் உள்ளும் காணப்படும். சுடுநீர்ச் சுனைகளிலும் இவை வளரும். சில

பாசிகள் மற்றத் தாவரங்களின் உடலுக்குள் உள்ளுறை தாவ ரங்களாக (Endophytes) வாழ்கின்றன. பெரும்பாலான பாசி களில் அவ்வவற்றிற்குரிய சிறப்பான நிறமிகள் (Pigments) உள.

பாசிகளை 5 பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். அவை:-

1. Cyanophyceae (Blue-Green Algae)
2. Chlorophyceae (Green Algae)
3. Phaeophyceae (Brown Algae)
4. Rhodophyceae (Red Algae)
5. Bacillariophyceae.

கம்பன்காவியத்தில் இரு இடங்களில் பாசி பற்றி குறிப் பிடப்பட்டுள்ளது. இந்த இரு இடங்களிலும் பொதுவாகவே பாசி என்று கூறியிருப்பதால், இங்கு கூறியிருக்கும் பாசி, மேற் கூறிய பிரிவுகளில் எந்தப் பிரிவைச் சேர்ந்தது என்பதை உணர முடியவில்லை.

பாசி நீரில் மிகுதியாகப் படர்ந்து பெருகும். கடலில் தான் பாசிகள் மிகுந்த வளர்ச்சியைப் பெறுகின்றன. கடலில் இவை மிகுதியாகப் படர்ந்திருக்கும். பசிபிக் கடலில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் Sargassum எனப்படும் பாசி மிகுதியாக காணப்படுவதால் அக்கடல்ப்பகுதி. Sargasso Sea' என்ற பெய ரினாலேயே அறியப்படுகிறது. இவ்வாறு நீரில் பாசி மிகுதியா கப் பரவியிருக்கும் காட்சியைக் கண்ட கம்பர் தம் காவியத்தில் அக்காட்சியையும் புகுத்தியுள்ளார். அரக்கர்களுக்கும் வான ரங்களுக்குமிடையே போர் நடைபெறுகிறது. போர்க்களத்தே படைகள் நெருங்கியிருப்பது, நீர்மேல் படர்ந்த பாசி போன்று தோன்றுகின்றதாம். படையின் செறிவைக் கம்பர் இந்த உவ மையினால் தெளிவாக விளக்கி விடுகிறார்.

'சுற்றிய சேனை நீர்மேற் பாசிபோன் மிடைந்த துன்ன'
(யுத் : 2517)

மற்ருேர் இடத்தில், பொய்கையில் பரவியிருக்கும் பாசிகளை ஆசிரியர் மிகச் சிறப்பான ஓர் உவமை மூலம் வர்ணித்துள்ளார். பம்பைப் பொய்கையில் முத்துக்கள் முதலிய இரத்தினங்கள் உள. அத்தகைய பொய்கையின் நீரை, காற்று காரணமாகப் பாசிகள் வந்து அடிக்கடி மூடிக்கொள்கின்றன இத்தகு பாசிகள், அடிக்கடி வந்து நல்லுணர்வை மயக்கி நிலை தடுமாறச் செய்யும் அஞ்ஞானத்தையொத்திருக்கின்றனவாம்.

'காசடை விளங்கிய காட்சித் தாயினும்
மாசடை பேதைமை யிடைம யக்கலால்
ஆசடை நல்லுணர் வனைய தாமெனப்
பாசடை வயின்ருெறும் பரந்த பண்பது'

(கிட் : 9)

இங்ஙனம் பாசியை அஞ்ஞானத்துடன் ஒப்பிட்டு வேறு பல நூல்களும் கூறியுள்ளன.

'பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்
மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்தும்
அரனடியை யுணரும்போ தகலும்பின் னணுகும்'

(சித்தியார் : 8 : 39)

'கல்லெறியப் பாசிகலைந்து நன்னீர் காணும்நல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே'

(பராபரக்கண்ணி)

---

# காளான் (Fungus)

தகட்டுடலிகள் (Thallophyte) என்ற பிரிவில் ஒரு பகுப்புத் தான் காளான்கள். இவற்றில் ஒளிச்சேர்க்கைக் குரிய பச்சையம் (Chlorophyll) இருப்பதில்லை. எனவே இவைகளால் உணவு தயாரிக்க இயலாது. ஆகையால் இவை சாறுண்ணிகளாக (Saprophyte) அல்லது ஒட்டுண்ணிகளாக (Parasite) வாழும்.

காளானில் பலவகை உள. அவற்றுள் பெரும்பாலானவை கண்ணுக்குத் தெரிவதில்லை. காட்டாக, ரொட்டி முதலிய உணவுப்பொருட்களில் உண்டாகும் பூஞ்சக் காளான்களைக் கூறலாம். சாறுண்ணியாக (Saprophyte) வாழ்வதும், சாதாரணமாக எங்கும் காணப்படுவதுமான ஒரு வகைக் காளான் தான் காளாம்பி என்பது.

---

# ஆம்பி (காளாம்பி)

இதனைப் பேய்க்காளான் என்றும் நாய்க்குடை என்றும் கூறுவதுண்டு. இதனை ஆங்கிலத்தில் Mnshroom என்பர். இதன் தாவரவியற்பெயர் Agaricus Campestris என்பதாகும். இலக்கியங்கள் இதனைக் காளாம்பி என்றும் ஆம்பி என்றும் கூறுகின்றன. மழைக்குப் பிறகு ஈரமாக இருக்கும் மண்ணிலும், மரத்தடிகளிலும் இவை தோன்றும். பாழிடங்களிலும் உண்டாகும் பயனற்றுப் போன இடத்தில் காளாம்பி வளர்ந்திருப்பதைப் புறநானூற்றுப் பாடலொன்று கூறுகின்றது. குமணனிடம் தன் வறுமை நிலையை எடுத்துரைக்கும் பெருஞ்சித்திரனார், தன் வீட்டில் அடுதலை மறந்த அடுப்பின் கண் காளாம்பிகள் பூத்து நிற்பதாகக் கூறி, வறுமையின் கொடுமையை அழகாகச் சித்தரித்துக் காட்டுகிறார்.

'ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்ப ...............................'

(புறம் : 164)

மண்ணுக்கு மேலே தோன்றும் குடை போன்ற மேற் பகுதி மிக மென்மையாகவும், வெண்மையாகவும் இருக்கும். இத்தகைய காளாம்பியைத் தயிர்க்கட்டிகளோடு ஒப்பிட்டுக் கூறிய கம்பரின் திறன் பாராட்டிற்குரியதே. மழை பொழிந்து முடிந்த பின் எங்கும் காளாம்பிகள் தோன்றியிருக்கின்றன புல்லை வயிறார மேய்த்த ஈன்றணிமையுடைய பசுக்கள் தடு மாறும் கால்களால் இவற்றை இடறின. சிதறிய காளாம்பி களைத் தயிர்க் கட்டிகளாகக் காண்கிறார் கம்பர்.

'பொழிந்த மாநிலம் புற்றரக் குமட்டிய புனிற்றா
எழுந்த வாம்பிக ளிடறின செறிதயி ரேய்த்த'

(கிட் : 478)

இவ்வாறு ஆம்பிக்குத் தயிரை உவமையாகச் சங்க நூல் களும் கூறியுள்ளன.

'ஆம்பி வான்முகை அன்ன கூம்புமுகிழ்
உறையமை தீந்தயிர் .......................'

(பெரும்பாண் : 157 - 158)

# கம்பராமாயணத்தில் தாவரங்கள் பயிலும் இடங்கள்

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 1. அகில் | 1 : 7, 1 : 13, 2 : 41, 3 : 36, 3 : 42, 9 : 1, 10 : 3, 10 : 10, 14 : 27, 14 : 75, 16 : 20, 17 : 9, 18 : 13, 21 : 24. | 4 : 200, 4 : 206, 7 : 11, 8 : 13, 8 : 19, 9 : 25, 11 : 58. | 1025 | 16, 108, 231, 507, 572, 735, 744. | 1209. | 632, 3888. |
| 2. அசோகு | 9 : 64, 14 : 54 | 7 : 8 | | 765 | | |
| 3. அடம்பு (அடும்பு) | | | | | | 331 |
| 4. அல்லி | 2 : 2, 2 : 4, 2 : 35, 2 : 43, 3 : 58, 5 : 124, 9 : 65, 10 : 18, 10 : 65, 10 : 75, 10 : 90, 12 : 56, 13 : 54, 14 : 33, 14 : 50, 15 : 2, 15 : 31, 15 : 34, 16 : 3, 16 : 7, 17 : 13, 17 : 19, 18 : 22, 19 : 4, 19 : 31, 20 : 16. | 2 : 87, 3 : 53, 3 : 70, 4 : 101, 4 : 157, 4 : 183, 5 : 10, 5 : 51, 6 : 5, 6 : 58, 8 : 42. | 221, 222, 225, 645, 668, 670, 674, 791. | 17, 18, 25, 26, 30, 32, 146, 457, 467, 479, 482, 522, 583, 628, 768, 777, 833, 878, 888, 898, 907, 909, 997. | 100, 128, 203, 207, 278, 308, 421, 528, 972, 1070. | 330, 331, 962, 1582, 2556, 2768, 3194, 3277, 3544, 3573, 3913, 4225. |
| 5. அவரை | | 8 : 34 | | | | |
| 6. அனிச்சம் | 20 : 14 | | | | | |
| 7. ஆம்பி (காளாம்பி) | | | | 478 | | |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்திய காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 8. ஆர் (ஆத்தி) | | | | 227, 735 | | 1070 |
| 9. ஆல் | 8 : 21, 10 : 71, 13 : 1, 14 : 62. | 4 : 11. | 1172 | 382, 768. | 667, 734, 1122 | 203, 232, 1204, 2538, 2884. |
| 10. இலஞ்சி (மகிழம்) | | | | | 534 | |
| 11. இலவங்கம் | 14 : 46 | | | | | |
| 12. இலவு | 5 : 38, 13 : 68, 17 : 24, 21 : 29. | 8 : 25. | | 768 | 1206 | 2757, 2760. |
| 13. இறுங்கு (சோளம்) | 2 : 54. | 8 : 34. | | | | |
| 14. உழிஞை | | | | | | 896 |
| 15. ஊர்மத்தம் (ஊமத்தம்) | 9 : 52. | | | | | 1875 |
| 16. எருக்கு | 9 : 52. | 6 : 21. | | | | 3878 |
| 17. எள் | 2 : 54, 17 : 18. | 5 : 8, 9 : 22. | | 460, 771. | 329 | 249, 2469, 2539 |
| 18. ஏலம் | 1 : 13 | 8 : 2 | | 233 | | |
| 19. ஏலம் 1 (சடாமாஞ்சிகை) | | | | 227 | | |
| 20. ஏழிலம்பாலை | 14 : 6 | | | | | |
| 21. கண்டில் வெண்ணெய் | 1 : 13 | | | | | |

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 22. கழுகு | 1 : 20, 2 : 26 10 : 9, 10 : 72, 14 : 42, 19 : 37, 21 : 23. | 2 : 30, 5 : 14. | 592, 649. | 548, 603, 767, 888, 912. | 539. | 1210 |
| 23. கரந்தை | 9 : 52 | | | | | |
| 24. கரும்பு | 2 : 2, 2 : 7, 2 : 9, 5 : 46, 6 : 22, 9 : 10, 9 : 67, 10 : 145, 12 : 21, 16 : 7, 16 : 15, 17 : 41, 19 : 9, 19 : 22, 19 : 50. | 4 : 176, 5 : 11, 6 : 6, 9 : 116. | 908, 1058. | 217, 755, 763, 897, 912. | 292, 419, 790, 1058. | 1877, 2219, 2755, 3369, 3883, 4303. |
| 25. கருவிளை | | | | 463. | | 3937. |
| 26. கவலைக்கிழங்கு | | 6 : 71, 8 : 13. | | | | |
| 27. கவிர் | | 1 : 61. | | | 277. | |
| 28. கழற்சி | | | | | | 2136, 3344. |
| 29. கள்ளி | 7 : 8. | | | | | |
| 30. கற்பகம் | 3 : 23, 3 : 37, 5 : 26, 5 : 85, 5 : 105, 6 : 1, 6 : 7, 6 : 8, 9 : 18, 14 : 32, 14 : 52, 20 : 17, 21 : 58. | 8 : 21, 8 : 25, 9 : 52, 12 : 9, 12 : 14, 12 : 15. | 197, 252, 378, 572, 710, 725, 849, 1188. | 6, 765, 826. | 90, 100, 104, 125, 204, 219, 231, 271, 281, 292, 304, 373, 413, 529, 670, 713, 715, 1275. | 551, 1007, 2831. |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்திய காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 31. காந்தள் | 14 : 42, 14 : 53. | 4 : 198, 7 : 5, 7 : 9, 8 : 29. | | 457, 458, 459, 461, 463, 764. | 230, 305, 1093. | 2197. |
| 32. காயா | 8 : 3, 10 : 65, 12 : 42, 18 : 22. | 6 : 58. | | 482. | | |
| 33. குங்குமப்பூ | 13, 14 : 58 | | 74. | | | |
| 34. குசும்பை | | | | | | 1749. |
| 35. குமிழ் | | | 74 | 628, 771. | | |
| 36. குரவம் | | 7 : 7, 9 : 99. | | 490 | 680 | |
| 37. குருந்து | 1 : 15 | 7 : 45 | | | | |
| 38. குன்றிமணி | | | | | | 2289, 3674. |
| 39. கூதாளம் | | | | 464, 759. | | |
| 40 கூவிளை | 9 : 52 | | | | | |
| 41 கொவ்வை | 3 : 49, 5 : 47, 5 : 88, 10 : 143, 11 : 15, 11 : 20, 14 : 9, 15 : 38, 16 : 7, 17 : 22, 17 : 23. | 1 : 57, 1 ; 91, 2 : 41, 2 ; 74, 3 : 79, 4 : 48, 12 : 13. | 248, 702, 1127. | 13, 768. | 510, 730, 750. | 1653 |
| 42. கொள்ளு | 2 : 54 | | | | | |
| 43. கொன்றை | 1 : 13, 9 : 32, 9 : 52, 11 : 9. | 6 : 21, 7 : 3, 7 : 34. | 647 | 33, 461, 462, 465, 489. | | 1942, 2535. |

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 44. கோங்கு | 1 : 13, 14 : 47, 14 : 58. | 7 : 12, 7 : 14, 8 : 24. | 74, 649 | | 721 | |
| 45. சண்பகம் | 1 ; 20, 2 : 48, 14 : 75 | 5 : 15 | | 228, 882 | 715 | |
| 46 சந்தனம் | 1 : 7, 2 : 48, 3 : 30, 9 : 1, 14 : 1, 14 : 44, 14 : 56, 14 : 58. | 8 : 1, 8 : 9. | 1025 | 16, 108, 228, 231, 507, 511, 735, 744. | 577, 716: | 691, 695, 1985, 3888. |
| 47. சாமை | 2 : 54 | | | | | |
| 48. சிஞ்சுபம் | | | 950 | | | |
| 49. சிந்து (புளி) | | | | | 725 | |
| 50. சுரபுன்னை | 1 : 13, 7 : 31, 14 : 33, 14 : 46, 14 : 55, | | 567, 649. | 107, 227, 465, 479: | 1246 | 695 |
| 51. செங்கிடை | 10 : 14, 10 : 18. | | | 80, 545, 768. | | |
| 52. செருந்தி | | 7 : 8 | | | | |
| 53. சேப்பு | 2 : 35 | | | | | |
| 54. தருப்பை | | | 1025 | 883 | | 535, 701. |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்திய காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 55. தாமரை | 2 : 4, 2 : 5, 2 : 6, 2 : 13, 2 : 18, 2 : 33, 2 : 43, 2 : 44, 2 : 58, 3 : 10, 3 : 16, 3 : 19, 3 : 31, 3 : 49, 3 : 54, 3 : 65, 5 : 5, 5 : 11, 5 : 12, 5 : 13, 5 : 28, 5 : 47, 5 : 61, 5 : 63, 5 : 75, 5 : 122, 5 : 124, 5 : 133, 6 : 4, 6 : 5, 6 : 7, 6 : 22, 7 : 23, 7 : 26, 7 : 28, 8 : 49, 9 : 3, 9 : 5, 9 : 9, 9 : 19, 9 : 31, 9 : 41, 9 : 47, 9 : 55, 9 : 60, 9 : 63, 9 : 85, 9 : 86, 10 : 1, 10 : 15, 10 : 18, 10 : 24, 10 : 47, 10 : 53, 10 : 57, 10 : 58, 10 : 71, 10 : 74, 10 : 75, 10 : 79, 10 : 84, 10:110, 10 : 123, 10:134, 10 : 136, 10:141, 10 : 150, 10:152, 12 : 35, 12 : 42, | 1 : 53, 1 : 56, 1 : 61, 1 : 69, 1 : 72, 2 : 7, 2 : 42, 2 : 43, 2 : 88, 3 : 33, 3 : 50, 3 : 62, 3 : 65, 3 : 89, 3 : 102, 3 : 108, 4 : 3, 4 : 38, 4 : 114, 4 : 117, 4 : 161, 4 : 166, 4 : 171, 4 : 173, 4 : 185, 4 : 203, 5 : 4, 5 : 10, 5 : 11, 5 : 16, 5 : 58, 5 : 80, 6 : 3, 6 : 7, 6 : 12, 6 : 16, 6 : 20, 6 : 25, 6 : 52, 6 : 56, 6 : 64, 6 : 67, 7 : 31, 7 : 39, 8 : 42, 8 : 44, 8 : 53, 9 : 19, 9 : 43, 9 : 46, 9 : 89, 9 : 140, 9 : 141, 10 : 26, 10 : 29, 10 : 40, 10 : 42, 10 : 43, 11 : 33, 11 : 34, 11 : 59, 11 : 60, 12 : 54, 12 : 77, 12 : 79, 12:121, 12 : 125 | 50, 75, 97, 100, 102, 163, 189, 212, 221, 223, 225, 235, 236, 237, 249, 250, 279, 280, 337, 376, 379, 400, 421, 455, 571, 593, 606, 617, 620, 622, 623, 628, 629, 631, 658, 666, 668, 670, 702, 709, 813, 820, 835, 953, 972, 984, 985, 1013, 1016, 1027, 1033, 1059, 1127, 1176, 1189, 1191. | 8, 18, 21, 23, 25, 26, 29, 32, 42, 55, 58, 72, 74, 75, 94, 95, 107, 146, 175, 209, 304, 365, 380, 468, 476, 492, 512, 545, 551, 587, 599, 629, 634, 645, 647, 687, 700, 721, 752, 761, 765, 767, 775, 777, 802, 825, 826, 841, 863, 897, 925, 997. | 59, 75, 78, 93, 99, 127, 128, 191, 199, 208, 248, 322, 349, 394, 402, 421, 528, 537, 540, 541, 565, 592, 594, 607, 687, 723, 816, 1068, 1096, 1112, 1116, 1266, 1276, 1278, 1290. | 2, 141, 250, 283, 285, 291, 293, 321, 354, 427, 435, 440, 441, 473, 524, 537, 562, 600, 704, 705, 776, 778, 780, 784, 867, 885, 948, 961, 963, 964, 966, 1067, 1169, 1195, 1214, 1349, 1396, 1483, 1538, 1590, 1598, 1623, 1644, 1843, 2047, 2052, 2103, 2115, 2159, 2199, 2294, 2356, 2363, 2419, 2453, 2462, 2545, 2563, 2564, 2565, 2566, 2609, 2610, 2612, 2629, 2645, 2681, 2688, 2694, 2699, 2703, 2757, 2779, 2831, 2866, 2871, 2880, 2914, 3002, 3016. |

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| | 12 : 45, 12 : 46,<br>12 : 62, 12 : 64,<br>13 : 25, 13 : 27,<br>13 : 30, 13 : 33,<br>13 : 35, 13 : 40,<br>13 : 49, 13 : 54,<br>13 : 57, 13 : 64,<br>13 : 70, 13 : 76,<br>14 : 11, 14 : 12,<br>12 : 64, 14 : 38,<br>14 ; 78, 14 ; 62,<br>14 : 71, 15 : 2,<br>15 : 7, 15 : 8,<br>15 : 9, 15 : 19,<br>15 : 21, 15 : 32,<br>16 : 3, 16 : 4,<br>16 : 5, 16 : 7,<br>16 : 10, 16 : 13,<br>16 : 15, 16 : 25,<br>16 : 26, 16 : 29,<br>16 : 31, 17 : 19,<br>17 : 20, 17 : 23,<br>18 : 5, 18 : 7,<br>18 : 8, 19 : 19,<br>19 : 22, 20 : 9,<br>20 : 11, 20 : 14,<br>20 : 16, 20 : 21,<br>20 : 32, 21 : 62,<br>21 : 67, 21 : 87,<br>23 : 28. | | | | | 3114, 3163,<br>3167, 3322,<br>3334, 3437,<br>3524, 3537,<br>3540, 3541,<br>3602, 3627,<br>3635, 3651,<br>3653, 3706,<br>3748, 3784,<br>3845, 3942,<br>3945, 3968,<br>3971, 3977,<br>3990, 4012,<br>4029, 4032,<br>4044, 4052,<br>4072, 4087,<br>4099, 4111,<br>4130, 4143,<br>4159, 4178,<br>4192, 4197,<br>4199, 4209,<br>4212, 4229,<br>4234, 4255,<br>4263, 4264,<br>4279, 4281,<br>4286, 4287,<br>4288, 4290,<br>4296, 4312 |
| 56. தாழை | | 9 : 138 | | 509 | | 331, 334 |
| 57. தினை | 2 : 29, 2 : 54,<br>14 : 34. | 6 : 60, 8 : 34. | | 284 | | |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 58. தும்பை | | | | | | 1052, 1070, 1186, 1358, 1362, 2428, 2539, 3595. |
| 59. துழாய் (துளசி) | 5 : 14, 5 : 19, 5 : 23, 8 : 37, 10 : 135, 13 : 8, 22 : 40. | 3 : 71, 3 : 88, 8 : 40, 9 : 100. | | | | 260, 393, 1070, 1166, 1592, 1624, 2173, 2687, 2859, 3990, 3997. |
| 60. தூதுளம் | | | | | 203. | |
| 61. தெங்கு | 2 : 45, 3 : 10, 5 : 42, 11 : 8, 13 : 50, 15 : 17, 16 : 17. | 1 : 59, 4 : 215, 5 : 11, 10 : 37. | 649, 695: | 762, 897, 909, 918. | | 3168: |
| 62. தேக்கு | | 2 : 59, 8 : 47. | | 572. | 8. | |
| 63. தேவதாரம் | 14 : 1. | | | | | |
| 64. நந்தி (நந்தியாவட்டை) | | | | 759 | | |
| 65 நரந்தம்புல் | 1 : 13. | | | | | |
| 66. நரந்தமரம் | | | | 107 | 258 | |
| 67. நறை | | | | 572 | | |

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 68. நாணல் | | 6 : 50, 8 : 47. | 838. | | | |
| 69. நாவல் | | | | 462. | | 2685. |
| 70. நெல் | 2 : 6, 2 : 7, 2:12, 2 : 20, 2 : 25, 2 : 26, 2 : 37, 2 : 46, 2: 47, 5 : 46, 14 : 34, | 6 : 32, 8 : 34, 9 : 19, 9 : 21, 9 : 116, 12 : 15, | 175, 356, 510, 627. | 505, 754, 884, 897, 906, 912. | | 2271, 3334. |
| 71. நெல்லி | 5 : 120, 11 : 10. | | | 978. | 518, 676. | 2148, 3985. |
| 72. நொச்சி | | | | 572 | 724. | 896. |
| 73. பச்சிலை மரம் | 1 : 13. | 8 : 2. | | 227 | | |
| 74. பலா | 5 : 42. | 8 : 33. | 649 | 906, 911. | | |
| 75. பனை | 9 : 13, 13 : 4, 18 : 60, 14 : 32, 21 : 5. | 1 : 85. 4 : 230, 6 : 33, 7 : 47, 12 : 44. | 233, 369. | | | 132, 740, 748, 1909, 2030, 2395, 3588. |
| 76. பாசி | | | | 9. | | 2517. |
| 77. பாதிரி | | | 649. | 457. | 721. | |
| 78. பிடவம் | | 7 : 7. | | 478. | | |
| 79. புன்னை | 2 : 33, 15 : 36, 20 : 17. | | | 505. | | 5, 331, 333. |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்த காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 80. பூளை | 7 : 1, 9 : 39, 10 : 47. | | 865. | | 1211. | 1210, 3483, 4272. |
| 81. மந்தாரம் | 14 : 41, 14 : 71, 15 : 25. | | | | 75, 971. | |
| 82. மராமரம் | 12 : 59, 14 : 2, 14 : 60. | 4 : 99, 9 : 45. | 31, 545, 649. | 158, 227. | 715, 722, 1007. | 998, 1015, 1027, 1092, 1642, 2005, 2007, 2376, 2573, 4077. |
| 83. மருதம் | 1 : 15, 14 : 3. | | | | | |
| 84. மல்லிகை | 14 : 75. | | | | 153 | 461, 466. |
| 85. மா | 2 : 33, 5 : 42, 8 : 9, 9 : 67, 14 : 3, 14 : 42, 14 : 55, 14 : 56, 14 : 60, 19 : 11, 20 : 1, 20 : 36. | 2 : 80, 5 : 12, 5 : 70, 8 : 30, 8 : 32, 8 : 33, 9 : 34. | 645, 649. | 20, 782. | 715 | 633, 671, 793, 2761. |
| 86. மாணைக்கொடி | | 7 : 36. | | | | |
| 87. மாதவி (குருக்கத்தி) | 1 : 20, 15 : 15, 15 : 25. | 5 : 14, 8 : 23, | | | 509 | |
| 88. முஞ்சிப்புல் | 8 : 22. | | | | | |

| தாவரங்களின் பெயர்கள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 89. முருக்கு | 5 : 41, 5 : 54, 13 : 57, 17 : 13. | 8 : 28. | 1066. | 653, 766, 768. | 165 | 577, 812, 1453, 2549. |
| 90. முல்லை | 2 : 48, 17 : 11. | 4 : 101, 4 : 233, 7 : 9. | | 467, 479, 490, 770. | | 1851, 2760. |
| 91. மூங்கில் | 2 : 35, 3 : 10, 5 : 38, 7 : 8, 14 : 55, 14 : 57, 14 : 60, 16 : 6, 17 : 49, 20 : 29. | 3 : 84, 5 : 51, 5 : 60, 5 : 66, 6 : 12, 7 : 17, 7 : 34, 7 : 36, 7 : 42, 8 : 4, 8 : 13, 8 : 27, 8 : 34, 8 : 46, 8 : 47 8 : 49, 9 : 41. | 144, 284, 427, 556, 620, 826, 1159, 1186. | 11, 248, 481, 628, 763, 836. | 18, 417, 418, 943. | 100, 560, 568, 584, 629, 636, 640, 701, 831, 1057, 1135, 1148, 1240, 1273, 1556, 1820, 2001, 2136, 2482, 2532, 2907, 2963, 3462. |
| 92. மூலமரம் | | | | 227 | | |
| 93. வஞ்சிக்கொடி | 3 : 10, 9 : 1, 9 : 85, 15 : 7. | 2 : 68, 6 : 20. | | 550, 756. | | |
| 94. வள்ளிக்கிழங்கு | 2 : 33. | | | 513 | | |
| 95. வள்ளைக்கொடி | 10 : 18. | | | 26, 31, 772, 777. | | |
| 96. வாகை | | 9 : 109 | | | | 701, 1110, 3071, 3139, 3461, 3595. |

| தாவரங்களின் பெயர்கள் | பாலகாண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரணிய காண்டம் | கிட்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 97. வாழை | 3 : 38, 5 : 42, 14 : 59, 21 : 23. | 2 : 30, 5 : 66, 8 : 33. | 175, 649 | 289, 755, 840, 907. | 283 | 226 |
| 98. வீழி | 16 : 28. | | | 30. | | 805, 1011, 2051, 2806. |
| 99 வெள்ளிலை (வெற்றிலை) | 14 : 49. | | | 460 | | |
| 100. வேங்கை | 1 : 13, 3 : 58, 14 : 33. | 7 : 14, 8 : 8, 8 : 16, 8 : 24. | 649 | 462, 479. | 715 | |

# தமிழ், ஆங்கிலம், தாவரவியற்பெயர் அகராதி

| தமிழ்ப் பெயர் (Tamil Name) | ஆங்கிலப் பெயர் (English Name) | தாவரவியற் பெயர் (Botanical Name) |
| --- | --- | --- |
| 1. அகில் | Eagle Wood | Aquilaria Agallocha |
| 2 அசோகு | Asoka | Saraca Indica |
| 3. அடம்பு (அடும்பு) | Goat's Foot Creeper | Ipomaea Biloba |
| 4. அல்லி | Water - Lily | 1. Nymphaea Stellata<br>2. Nymphaea Lotus Alba<br>3. Nymphaea Rubra |
| 5. அவரை. | Field Beans | Dolichos Lablab |
| 6. அனிச்சம் | — | --- |
| 7. ஆம்பி (காளாம்பி) | Mushroom | Agaricus Campestris |
| 8. ஆர் (ஆத்தி) | Mountain Ebony | Bauhinia Racemosa |
| 9. ஆல் | Banyan Tree | Ficus Bengalensis |
| 10. இலஞ்சி (மகிழம்) | Pointed Leaved Ape Flower | Mimusops Elengi |
| 11. இலவங்கம் | Clove Tree | Eugenia Caryophyllata |
| 12. இலவு | Red silk Cotton Tree | Bombax Malabaricum |
| 13. இறுங்கு (சோளம்) | Great Millet | Sorghum Vulgare |
| 14. உழிஞை | 1. Smooth leaved heart Pea<br>2. Balloon Vine | Carpiosperum Halicacabum |
| 15. ஊர்மத்தம் (ஊமத்தம்) | Thorn Apple | Dutura Fastuosa |
| 16. எருக்கு | Madar | Galotropis Gigantea |
| 17. எள் | Gingelly | Sesamum Indicum |
| 18. ஏலம் | Cardamom | Elettaria Cardamomum |
| 19. ஏலம் 1. (சடாமாஞ்சிலை) | Spikenard Herb | Nardostachys Jatamansi |
| 20. ஏழிலம்பாலை | Seven-leaved Milk plant | Alstonia Scholaris |
| 21. கண்டில் வெண்ணெய் | Common Anisum | Pimpinella Anisum |
| 22. கமுகு | Betel-Nut Palm | Areca Catechu |
| 23. கரந்தை | — | Sphaeranthus Indicus |
| 24. கரும்பு | Sugar Cane | Saccharum Officinarum |
| 25. கருவிளை | Mussell shell Creeper | Clitoria Ternatea |

| தமிழ்ப் பெயர் (Tamil Name) | ஆங்கிலப் பெயர் (English Name) | தாவரவியற் பெயர் (Botanical Name) |
|---|---|---|
| 26. கவலைக்கிழங்கு | — | Dioscorea Oppositifolia |
| 27. கவிர் | Indian Coral Tree | Erythrina Indica |
| 28. கழற்சி | Molucca Bean | 1. Caesalpinia Crista<br>2. Caesalpinia Bonducella |
| 29. கள்ளி | — | Euphorbia |
| 30. கற்பகம் | — | — |
| 31. காந்தள் | Glory Lily | Gloriosa Superba |
| 32. காயா | Iron wood Tree | Memecylon Edule |
| 33. குங்குமப்பூ | Saffron | Crocus Sativus |
| 34. குசும்பை | Safflower | Carthamus tinctorius |
| 35. குமிழ் | Small Cashmere tree | Gmelina Asiatica |
| 36. குரவு | Bottle flower | 1. Chomelia Asiatica<br>2 Webera Corymbosa |
| 37. குருந்தமரம் | Wild lime | Atlantia Missionis |
| 38. குன்றிமணி | Carb's eye | Abrus Precatorius |
| 39. கூதாளம் | — | Iromaea |
| 40. கூவிளை | Wood Apple | Eagle Marmelos |
| 41. கொவ்வை | — | Coccinia Indica |
| 42. கொள்ளு | Horse gram | Dolichos biflorus |
| 43. கொன்றை | Laburnum | Cassia Fistula |
| 44. கோங்கு | Yellow Silk cotton tree | Cochlospermum Gossypium |
| 45. சண்பகம் | Golden champa | Michelia Champaca |
| 46. சந்தனம் | Sandalwood tree | Santalum Album |
| 47. சாமை | Little Millet | Panicum miliare |
| 48. சிஞ்சுபம் | — | Strychnos Nux-Vomica |
| 49. சிந்து (புளி) | Tamarindus | Tamarindus Indicus |
| 50. சுரபுன்னை | Long leaved two-sepalled Gamboge | Ochrocarpus longifolius |
| 51. செங்கிடை | — | Aeschynomene aspera |
| 52. செருந்தி | Golden Blossomed Pear Tree | — |
| 53. சேம்பு | Indian Kales | Colocasia Antiquorum |

| தமிழ்ப் பெயர்<br>(Tamil Name) | ஆங்கிலப் பெயர்<br>(English Name) | தாவரவியற் பெயர்<br>(Botanical Name) |
|---|---|---|
| 54. தருப்பை | The Sacred grass | Poa Cynosuroides |
| 55. தாமரை | Lotus | Nelumbium Speciosum |
| 56. தாழை | Fragrant Screw pine | Pandanus Odoratissimus |
| 57. தினை | 1. Italian Millet<br>2. Fox-tail Millet | Setaria Italica |
| 58 தும்பை | White Dead Nettle | Leucas aspera |
| 59. துழாய் (துளசி) | Sacred Basil | Ocimum Sanctum |
| 60. தூதுளம் | Climbing Brinjal | Solanum trilobatum |
| 61. தெங்கு | Coconut Tree | Cocos Nucifera |
| 62. தேக்கு | Teak Tree | Tectona Grandis |
| 63. தேவதாரம் | Deodar, God Tree | Cedrus Deodara |
| 64. நந்தி (நந்தியா வட்டை) | Crape Jasmine | Tabernaemontana Coronaria |
| 65. நரந்தம்புல் | Citronella Grass | Cymbopogon Nardus |
| 66. நரந்தமரம் | — | Citrus |
| 67. நறை | — | Hemidesmus Indicus |
| 68 நாணல் | — | Ochlandra Travancorica |
| 69. நாவல் | Java Plum | Eugenia Jambolana |
| 70. நெல் | Paddy | Oryza Sativa |
| 71. நெல்லி | — | 1. Emblica Officinalis<br>2. Phyllanthus Emblica |
| 72. நொச்சி | 1. Three leaved Chaster Tree<br>2. Five leaved Chaster Tree | Vitex Trifolio<br>Vitex Negundo |
| 73. பச்சிலைமரம் | Mysore Gamboge | Garcinia Xanthochymus |
| 74. பலா | Jack Tree | Artocarpus Integra |
| 75. பனை | Palmyra Palm | Borassus Flabellifer |
| 76. பாசி | Sea weed | Algae |
| 77. பாதிரி | — | Stereospermum Suaveolons |
| 78; பிடவம் | Bedaly Emetic nut | Randia Malabarica |
| 79. புன்னை | Alexandrian Laurel | Callophyllum Inophyllum |
| 80. பூளை | Javanese Wool Plant | Aerua Javanica |

| தமிழ்ப் பெயர் (Tamil Name) | ஆங்கிலப் பெயர் (English Name) | தாவரவியற் பெயர் (Botanical Name) |
|---|---|---|
| 81. மந்தாரம் | — | Bauhinia Variegate |
| 82. மராமரம் | Sal tree | Shorea Robusta |
| 83. மருதம் | — | Terminalia Bellerica |
| 84. மல்லிகை | — | Jasminum |
| 85. மா | Mango | Mangifera Indica |
| 86. மாணைக்கொடி | — | — |
| 87. மாதவி (குருக்கத்தி) | — | Hiptage Madablota |
| 88. முஞ்சிப்புல் | Reedy Sugarcane | Saccharum arundinaceum |
| 89. முருக்கு | Flame of the Forest | Butea Frondosa |
| 90. முல்லை | Jasmine | Jasminum Auriculatum |
| 91. மூங்கில் | Bamboo | Bambusa arundinaceae |
| 92. மூலமரம் | Rosy flowered leadwort | Plumbago Rosea |
| 93. வஞ்சிக்கொடி | Common rattan of South India | Calamus Rotang |
| 94. வள்ளிக்கிழங்கு | Sweet Potato | Ipomaea Batatas |
| 95. வள்ளைக்கொடி | Creaping bindweed | Ipomaea aquatica |
| 96. வாகை | Siris Tree | Albizzia Lebbeck |
| 97. வாழை | Plantain | Musa Paradisiaca |
| 98. வீழி | — | Cadaba Indica |
| 99. வெள்ளிலை (வெற்றிலை) | Betel Pepper | Piper Betal |
| 100. வேங்கை | East Indian Kino Tree | Pterocarpus Marsupium. |

# கம்பன் பயன்படுத்தியுள்ள தாவரப் பெயர்கள்

பக்கம்

---

# துணை புரிந்த நூல்கள்

## தமிழ் நூல்கள்


1. அகநானூறு - களிற்றுயானை நிரை
2. இலக்கிய நினைவுகள் - டாக்டர்: ச. வே. சுப்பிரமணியன்
3. கம்பன் கண்ட உயிரினங்கள் - மே. பிளாரன்சு தாசு
4. கம்பன் காவியம் - எஸ். வையாபுரிப் பிள்ளை
5. கலைக் களஞ்சியம் - தொகுதிகள் 1-9
6. குற்றாலக் குறவஞ்சி
7. குறுந்தொகை - உ, வே, சா. பதிப்பு
8. சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம் - பி.எல், சாமி
9. சங்க இலக்கியங்களில் மலர்கள் - இல. தாணம்மாள்
10. சிலப்பதிகாரம்
11. சொல்லாராய்ச்சிக் கட்டுரை - தேவநேயப் பாவாணர்
12. தமிழ்ப் பேரகராதி - தொகுதிகள் 1-6
13. திருக்குறள்
14. தொல்காப்பியம் - பொருளதிகாரம்
15. நற்றிணை
16. நான்மணிக் கடிகை
17. பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை - டாக்டர். மு. வரதராசன்
18. பெண்ணின் பெருமை - திரு. வி. க.
19. முதற்குறள் உவமை - கு. கோதண்டபாணி பிள்ளை
20. வள்ளுவர் கண்ட உயிரினங்கள் - வித்துவான் பூ. அமிர்தலிங்கன்

## ஆங்கில நூல்கள்

1. A Class Book of Botany - A. C. Dutta
2. Encyclopaedia Britannica - Volumes 2, 3, 7
3. Flora of India - Volumes I to VII
4. Flowering Plants of Travancore - M. Rama Rao
5 Flowering Trees and shrubs in India - D. V. Cowen
6. Intermediate Botany - R. V. Narayanaswami
7. Landscape and Poetry - Thaninayaka Adikal
8. Manual of Cultivated Plants

# திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| V | 7 | நற்றினை | நற்றிணை |
| V | 20 | குறியீடுகளால் | குறியீடுகளாக |
| V | 26 | தாழி | தோழி |
| V | 27 | பாலைக்கவியின் | பாலைக்கவியின் |
| X | 6 | விளையமொரு | விளையுமொரு |
| XII | 17 | பொடிகளின் | பொடிகளில் |
| XVIII | 5 | தரப்பட்டுள்ளன | தரப்பட்டுள்ளது |
| 15 | 13 | இனையற்று | இணையற்று |
| 16 | 33 | நீலறிறமானது | நீலநிறமானது |
| 18 | 16 | நிலத்திற்கும் | நீலத்திற்கும் |
| 23 | 3 | காப்பியப்புவவர் | காப்பியப்புலவர் |
| 27 | 17 | அவரைநபவழம் | அவரைப்பவழம் |
| 35 | 14 | Ganyophvllata | Caryophyllata |
| 52 | 3 | நால்மணிக்கடுகை | நான்மணிக்கடிகை |
| 84 | 10 | செஞ்சவே | செஞ்செவே |
| 92 | 8 | 'இராவணனும் தும்பை சூடினன்' | இராவணனும் தும்பை சூடினன் |
| 95 | 4 | Apocynaccae | Apocynaceae |
| 100 | 8 | ஐந்திரிபற | ஐயந்திரிபற |
| 111 | 7 | பூளைமலரைப் படுத்தியிருக்கிறார் | பூளைமலரைப் பயன்படுத்தியிருக்கிறார் |
| 138 | 7 | தேரற்றத்தை | தோற்றத்தை |
| 138 | 19 | பெற்றறு | பெற்றது |
| 139 | 5 | மரத்திவ் | மரத்தில் |
| 139 | 8 | நிலத்திதின் | நிலத்தின் |
| 154 | 6 | மென்மையாகவும் | மென்மையாக |
| 185 | 9 | புற்குடும்பருதை | புற்குடும்பத்தை |
| 185 | 10 | தாவரவியார் | தாவரவியலார் |
| 185 | 15 | மயிர்ச்ளால் | மயிர்களால் |
| 186 | 10 | காட்டுப்பகுதிகனில் | காட்டுப்பகுதிகளில் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 187 | 8 | கைகேயின் | கைகேயியின் |
| 189 | 13 | உண்டாரும் | உண்டாகும் |
| 195 | 19 | நான்மணிக்கடுகை | நான்மணிக்கடிகை |
| 195 | 26 | மாமன்னனுக்ரு | மாமன்னனுக்கு |
| 196 | 3 | சேய்கிறது | செய்கிறது |
| 207 | 8 | மேய்த்த | மேய்ந்த |
| 212 | 4 | குங்கும | குங்குமப்பூ |
| 224 | 16 | creaping | creeping |
| 225 | 6 | குமுதம் | குமுதம் |
| 229 | 18 | நரன்மணிக்கடுகை | நான்மணிக்கடிகை |

